# இலக்கியச் சோலையிலே

(கட்டுரைத் தொகுப்பு)



சோ. ந. கந்தசாமி, M. A., M. Litt.,
தமிழ்க்கலைத்துறை விரிவுரையாளர்,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.



கற்பகம் வெளியீடு
சிதம்பரம்.

# இலக்கியச் சோலையிலே

(கட்டுரைத் தொகுப்பு)



சோ. ந. கந்தசாமி, M. A., M. Litt.,
தமிழ்க்கலைத்துறை விரிவுரையாளர்,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.



கற்பகம் வெளியீடு
சிதம்பரம்.

வெளியீடு எண் : 1
முதற்பதிப்பு : டிசம்பர், 1966


ஆசிரியரின் பிறநூல்கள்.

1. மணிமேகலையின் காலம்
2. பரிபாடல் சமயம்
3. சங்க நூல்களில் மதுரை

விலை ரூ. 3-00

அச்சிட்டோர் :
பாண்டியன் அச்சகம், சிதம்பரம்.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்
தமிழ்க்கலை, ஆராய்ச்சித்துறைகளின் தலைவர்,
செந்தமிழ்ச்செல்வர், சித்தாந்தச் செந்நாவலர்,
வித்துவான், பேராசிரியர்,

**திரு. கோ. சுப்பிரமணிய பிள்ளை,** M.A., B.L.,

அவர்கட்கு

**மணிவிழாக் காணிக்கையாக**

இந்நூலைப் படைக்கிறேன்.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறையின் முன்னாள் தலைவர்,
மதுரைத் தியாகராசர் கல்லூரியின் முதல்வர்
செந்தமிழ்க்காவலர், பேராசிரியர்

## டாக்டர் அ. சிதம்பரநாதனார், M.A., Ph.D., அவர்கள்

மனமுவந்து நல்கிய

# மதிப்புரை

இலக்கியச் சோலையிலே என்ற தலைப்பில் திரு. சோ. ந. கந்தசாமி எம்.ஏ., எம் லிட்., அவர்கள் வெளியிடும் கட்டுரைத்தொகுப்பு கிடைக்கப்பெற்றேன். இத்தொகுப்பில் நூலாசிரியரின் மதிநுட்பமும் ஆராய்ச்சித்திறனும் விளங்குகின்றன. இவர் அண்ணாமலைப் பல்கலைக்கழகப் புகுமுகவகுப்பு மாணவராய் இருந்தபொழுதே டாக்டர் ஆர். கே. சண்முகஞ் செட்டியார் தமிழாராய்ச்சிப் பரிசினைப் பெற்றவர். தமிழ் முதுகலை வகுப்பில் இவர் பயின்றபொழுதும் இவரது ஆராய்ச்சித் திறனைக்கண்டு பாராட்டியுள்ளேன்.

இத்தொகுப்பிலும் சில ஆராய்ச்சிக் கட்டுரைகள் வெளிவருகின்றன. இதனால் இவரது ஆழ்ந்தகன்ற புலமை புலனாகின்றது. மதுரை மூதூர் பற்றிய கட்டுரை ஒரு புலமை விருந்து. திருக்குறள் பாயிரம் பற்றிய ஆராய்ச்சியும், நக்கீரர் பற்றிய ஆராய்ச்சியும் ஆராய்ச்சி மாணவரால் உற்றுநோக்கத் தக்கவை. பாவேந்தன் பாரதி, அடிகள் உவமை போன்ற கட்டுரைகள் படித்து இன்புறத்தக்கவை.

இவற்றைச் செஞ்சொற் புலவர் திரு கோ. சுப்பிரமணியப் பிள்ளை எம்.ஏ., பி எல்., அவர்களது மணிவிழாவினையொட்டி வெளிப்படுத்தும் நன்றியுள்ளத்தைப் போற்றுகின்றேன். பேராசிரியர் தமிழாராய்ச்சியுலகத்திற்கும், பேச்சுமேடையுலகத்திற்கும் செய்துள்ள தொண்டுகள் அரியனவும் பெரியனவும் ஆகும் அவர் பல்லாண்டு வாழ்க.

மதுரை-9,
23—12—66.

அ. சிதம்பரநாதன்.

அண்ணுமலைப் பல்கலைக்கழகத் தமிழ் ஆராய்ச்சித்துறைத்
துணைப் பேராசிரியர், திருமுறைச்செல்வர்,
வித்துவான்

## திரு. க. வெள்ளைவாரணனுர் அவர்கள்

அன்புடன் அளித்த

# அணிந்துரை

'ஆயுந்தொறுந்தொறும் இன்பந் தருந் தமிழ்' என்பர் நற்றமிழ்வல்ல நாவலர், அறிவின் திறத்தால் நுகர்தற்குரிய இத்தகைய இன்பநலத்தினைத் தாமும் துய்த்துப் பிறரும் துய்த்து மகிழ வழிகாட்டுதல் சிறந்த புலமைத்திருத்தொண்டாகும். எனது பேரன்புக்குரிய நண்பரும், அண்ணுமலைப் பல்கலைக் கழகத் தமிழ்க்கலைத்துறை விரிவுரையாளரும் ஆகிய திருவாளர் சோ. ந. கந்தசாமி எம்.ஏ., எம்.லிட்., அவர்கள் தமிழிலக்கியச் சுவைநலங்களில் திளைத்து நூல்நயங்காணும் பேரார்வமும், நுண்மாண் நுழைபுலமும், இனிது விளங்க உணர்த்தும் சொல்வன்மையும் ஒருங்கே வாய்க்கப்பெற்றவர். இவர் தாம்பெற்ற இலக்கிய நலங்களைக் கல்லூரி மாணுக்கரும், ஏனையோரும் உணர்ந்து மகிழும் முறையில் அவ்வப்பொழுது எழுதிய கட்டுரைகளின் தொகுப்பாக 'இலக்கியச்சோலையிலே' என்னும் இந்நூல் வெளிவருகின்றது.

இதன்கண் முதலாவதாகவுள்ள இலக்கியச் சோலையிலே என்னும் கட்டுரை இலக்கியத்தின் இயல்பினையும் எழில் நலங்களையும் இனிமைப்பயனையும் வனப்புமிக்க சொற்களாற் சொல்லோவியஞ் செய்துகாட்டி இலக்கியச் சோலைக்குக் கற்போரை அழைத்துச்செல்லும் முறையில் அமைந்துளது. நாட்டுமக்களிடையே உரிமையுணர்வைக் கிளர்ந்தெழச்செய்யும்

நோக்குடன் சுப்பிரமணிய பாரதியார் பாடிய பாடல்களை நன்கு பயின்று தேர்ந்த தெளிவின்பயனாகத் தமிழிலக்கியத் துறையிற் பழமைக்கும் புதுமைக்கும் தொடர்புகாணும் முறையில் அமைந்தது பாவேந்தன் பாரதி என்ற கட்டுரை யாகும். திருக்குறளின் முதற்கண் உள்ள கடவுள்வாழ்த்து, வான்சிறப்பு, நீத்தார்பெருமை, அறன்வலியுறுத்தல் என்னும் நான்கதிகாரங்களையும் பாயிரம் எனவழங்கும் மரபினை எடுத்துக்காட்டிப் பாயிரப்பகுதியாகிய இந்நான்கு அதிகாரங் களும் தெய்வவணக்கமும் செயப்படுபொருளும் எய்தவுரைக் கும் நோக்குடன் ஆசிரியர் திருவள்ளுவராலேயே இயற்றப் பெற்றன என்னும் மெய்ம்மையினைத் தக்கசான்றுகளுடன் வலியுறுத்துவது திருக்குறள்பாயிரம் என்ற கட்டுரையாகும். திருமுருகாற்றுப்படை பாடிய நக்கீரர் என்பவர் கடைச் சங்கப்புலவர் நக்கீரனாரின் வேறுவர் என ஆராய்ச்சி அறிஞர் வையாபுரிப்பிள்ளை அவர்கள் கூறும்முடிபினை நன்கு ஆராய்ந்து திருமுருகாற்றுப்படை இயற்றிய நக்கீரர் பத்துப்பாட்டுள் ஒன்றாகிய நெடுநல்வாடையையும் சங்கத்தொகை நூல்களில் உள்ள சில பாடல்களையும் பாடிய சங்கப்புலவர் நக்கீரனாரே என்னும் உண்மையினைத் தக்க காரணங்காட்டி நிறுவும் முறையில் அமைந்தது நக்கீரர் என்னும் கட்டுரையாகும்

சிறந்த தம்பி என்ற தலைப்பில் அமைந்த கட்டுரை பட்டிமன்றத்திற்பேசிய பேச்சாகும். கம்பரது காப்பியத்தில் இடம்பெற்ற தம்பியருள்ளே "சிறந்த தம்பி" என உயர்த்துப் பாராட்டத்தக்க குணநலம் வாய்ந்தவன் கும்பகர்ணனே எனச் சாதிக்கும் முறையில் அமைந்த இப்பேச்சு கருத்தூன்றிப் படித்து மகிழ்தற்குரியதொன்றாகும். திருவாசகத்தின் இனிமை யையும் இவ் அருள்நூலினைத் திருவாய் மலர்ந்தருளிய மணிவாசகப்பெருமானது செந்தமிழ்ப்புலமை மாண்பினையும் அழகுற விரித்துரைப்பது திருவாசகம் என்ற தலைப்பில் அமைந்த கட்டுரையாகும். மதுரை மூதூர் என்ற கட்டுரை,

கடைச்சங்ககாலத்திற் பாண்டிநாட்டின் தலைநகராக விளங்கிய பேரூர்க்கு உரியதாக வழங்கப்பெறும் மதுரை என்ற பெயரின் தொன்மையினைப் புலப்படுத்துவது. மொழிநூல் எடுத்துக்காட்டுக்கள் சிலவற்றைத் துணையாகக்கொண்டு மதுரை என்ற பெயரமைப்பினைக் குறித்த முடிபு அறிஞர்களால் மேலும் ஆராயத்தகுவதொன்றாகும். உலகப் பொதுமறையாகிய திருக்குறளின் சிறப்பினை யாவரும் உளங்கொள விரித்துரைப்பது திருவள்ளுவமாலை என்னும் நூலாகும். இந்நூல் கல்லாடம் என்றநூல் தோன்றியகாலத்திற்கு முற்பட்ட தொன்மையுடையதென்பதனைத் தெளிவுபடுத்தும் முறையில் அமைந்தது, திருவள்ளுவமாலையின் காலம் என்ற கட்டுரையாகும். அடிகள் உவமை என்ற தலைப்புடைய கட்டுரை பட்டினத்து அடிகள் பாடலொன்றில் ஆளப்பட்டுள்ள உவமையின் நயத்தை விரித்துரைப்பது.

இந்நூலினை இயற்றிய அன்பர் திரு. கந்தசாமியவர்கள் பல்கலைக்கழகத்திற் பயிலுங்காலத்திலேயே கலைபயில்தெளிவும் கட்டுரைவன்மையும் செய்யுள்பாடும் திறமும்பெற்று முதன் மாணுக்கராகத்திகழ்ந்துள்ளார். பின்னர் பல்கலைக்கழகத்தில் ஆராய்ச்சி மாணவராகவிருந்து பழந்தமிழ்நூல்களை ஆராய்ச்சியுணர்வுடன் நன்கு பயின்றுள்ளார். மொழிநூல் உண்மைகளையும் தமிழகத்திற் காலந்தோறும் நிலைபெற்ற சமயதத்துவக் கோட்பாடுகளையும் ஆதரவாகக்கொண்டு மணிமேகலையென்னும் செந்தமிழ்க் காப்பியம் தோன்றிய காலம் இதுவென வரையறுத்துக்காட்டும் முறையில் இவரால் எழுதப்பெற்ற "மணிமேகலையின் காலம்" என்னும் நூல், சிறந்த தமிழ் நூல்களில் இவருக்குள்ள ஆழ்ந்தபயிற்சியையும் ஆராய்ச்சித் திறனையும் இனிது புலப்படுத்துவதாகும்.

இலக்கியச் சோலையிலே என்னும் இந்நூல் தமிழ் இலக்கியம், வரலாறு, சமயம் பற்றிய கட்டுரைகளைத் தன்

பாற் கொண்டு தமிழ்பயிலும் மாணுக்கர்க்கும் ஏனையோர்க்கும் நன்கு பயன் தரும் முறையில் அமைந்துளது. தமிழ்க்கலைச் செல்வராகிய அன்பர் திரு. கந்தசாமி அவர்கள் இந்நூலினை அண்ணமலைப் பல்கலைக்கழகத் தமிழ்க்கலை, தமிழ் ஆராய்ச்சித் துறைகளின் தலைவரும், அருந்தமிழ் நூல்களில் அமைந்த பலவகை நலங்களையும் யாவரும் கற்றுணர்ந்து மகிழத் தம் புலமைத் திறத்தால் விருந்தாய நூல்கள் பல வெளியிட்டுத் தமிழமுதருத்தும் செந்தமிழ் வேளாண் செல்வரும் ஆகிய பேராசிரியர் வித்துவான் திரு. கோ. சுப்பிரமணிய பிள்ளை, எம்.ஏ., பி.எல்., அவர்களது மணிவிழா மகிழ்ச்சிக் காணிக்கையாக வெளியிட்டிருப்பது தமிழறிஞர்களிடத்தும், தமிழ்மொழியினிடத்தும் இவருக்குள்ள பேரன்பினை நன்கு புலப்படுத்துவதாகும். அண்ணமலைப் பல்கலைக்கழகத் தமிழ்க்கலைத்துறை விரிவுரையாளர் அன்பர் திரு. சோ. ந. கந்தசாமியவர்கள் இதுபோன்ற சிறந்தபல ஆராய்ச்சி நூல்களியற்றித் தமிழுக்கு ஆக்கமாகும் நற்றெண்டுகள் பலபுரிந்து எல்லாச்செல்வங்களும் நற்பேறுகளும் பெற்று நீடுவாழ்க எனத் தில்லைச்சிற்றம்பலவன் திருவடிகளை இறைஞ்சி வாழ்த்துகின்றேன்.

இங்ஙனம்,

திருமுறைச்செல்வம், 142, கனகசபைநகர்.

க. வெள்ளைவாரணன்,
21—12—1966.

# முன்னுரை

அண்ணமலைப் பல்கலைக்கழகத் தமிழ்க்கலை, ஆராய்ச்சித் துறைகளின் தலைவர், பேராசிரியர். வித்துவான் திரு. கோ. சுப்பிரமணிய பிள்ளை, M.A., B.L. அவர்களின் மணிவிழா இப் பல்கலைக்கழகத்தில் சிறப்பாகக் கொண்டாடப் பெறுகிறது. பேராசிரியர் அவர்கள் நாளும் இன்னிசையால் தமிழ்பரப்பும் நாவலர். சுவைநலம் துளும்பச் சொற்பெருக்காற்றுபவர். ஆழ்ந்திருக்கும் கவியுளம்கண்டு களிக்கச்செய்யும் செந்தமிழ்ச் செல்வர். தமிழும் சைவமும் கண்ணெனமணியெனக் காக்கும் மாண்பினர். ஆங்கிலத்திலும் அருந்தமிழிலும் பரந்த புலமை படைத்து ஆய்வுநூல்கள் பலயாத்து ஆக்கப்பணி ஆற்றுபவர். பேராசிரியர்கள் பலரை உருவாக்கிய பேரறிஞர். ஆசிரியர் களிடத்தும், மாணக்கர்மாட்டும் ஒருவா அன்பிற்கு உரிமை கெழுமியவர் இவர்கள் ஆற்றும் தமிழ்ப்பணியைப் போற்றும் முறையில் இந்நூலினை இவர்கட்குக் காணிக்கையாக்கி என் நன்றிகலந்த அன்பினைப் புலப்படுத்துகிறேன்.

தமிழ்ப்பேரறிஞர்களையும் தொண்டர்களையும் உருவாக்கித் தமிழுலகின் தலைவராகத்திகழும் எங்கள் அருமைப்பேராசிரியர் டாக்டர் அ. சிதம்பரநாதனர் M.A., Ph.D., அவர்கள் இந்நூலினைப் படித்துமகிழ்ந்து மதிப்புரை நல்கியுள்ளனர். அவர்கட்கு என் அன்புகலந்த வணக்கமும் நன்றியும் உரியன. அண்ணமலைப் பல்கலைக்கழக ஆராய்ச்சித்துறைத் துணைப்பேராசிரியர், வித்துவான் திரு. க. வெள்ளைவாரணனர் அவர்கள் அன்புடன் அணிந்துரை அளித்துள்ளனர். அவர்கட்கு என் உளம் கனிந்த நன்றி. இந்நூலினைக் கண்ணுற்று என்பால் அன்பால் அகம்நக வாழ்த்திய தாவரவியல் துணைப் பேராசிரியர் டாக்டர் C. சீனிவாசன், M. Sc., Ph. D., F. B. B. S. (Lond) அவர் கட்கு என்றும் நன்றி உடையேன்.

கட்டுரைக்குப் படிஎடுத்த மாணவர் திரு. வை. சீனிவாசன், (III B.Sc.) திரு. ப. அப்துல்ரஹீம் (II B.Sc.) இருவர்க்கும் என் அன்பு உரியது. இந்நூலினை எழிலுடன் அச்சிட்டு நல்கிய சிதம்பரம் பாண்டியன் அச்சகத்தார் பணியைப் பாராட்டுகிறேன்.

அண்ணமலைநகர்,
23—12—1966

அன்பன்,
சோ. ந. கந்தசாமி.

## பொருளடக்கம்



# இலக்கியச் சோலையிலே

ஓங்கி உயர்ந்த மரங்கள், அடர்ந்து படர்ந்த செடி கொடிகள்; பூத்து ஒளிரும் புதுமலர்கள், காய்த்துக் குலுங்கும் கனிவகைகள், தெள்ளிய நீர்நிலை, தவழும் தென்றல், பொன்னெனப் பாலெனப் பொழியும் ஒளிச் சுடர்—இனைத்தும் பொலியும் நிலத்தின் மேனி கோலம் நிறைந்தது. ஆங்குக் களிறும் பிடியும் பிளிறும். காளை யும் ஆவும் குலாவும். கலையும் பிணையும் காட்சிதரும். கடுவனும் மந்தியும் களிக்கும். சேவலும் பெடையுமாய்ச் சேர்ந்த குயிலும் மயிலும் பூவையும் புறுவும் புள்ளினம் பிறவும் ஆடியும் பாடியும் அகம் மகிழும். இங்ஙனம் எழில்தரும் பொழில்தான் சோலை என்று சுட்டுதற்கு உரியது. செழுமையும் பசுமையும் கெழுமியதாய்க் கண்ணையும் கருத்தையும் கவர்வதாய் இன்பம் பயத்தல் சோலையின் வேலை. கவலையை மறந்து களிக்கும் இடங் கள் சிலவே. அவற்றுள் ஒன்று சோலை, இன்னொன்று இலக்கியம். இலக்கியமும் ஒரு சோலையே. இச்சோலை யில், கப்பும் கவரும் கோடும் கொம்பும் பரப்பிச்செழித்துத் தழைத்துத் திகழும் ஆலும் மாவும்போல் காவியங்கள் உள்ளன; பிறதருக்கள்போல் வனப்பும் வளமும் கொழிக் கும் பனுவல் வகைகளைப் பார்க்கலாம்; நிறைந்தும் செறிந் தும் நிற்கும் செடி கொடிகள்போல் பின்னிக் கிடக்கும் புதுமை நூல்களும் பொலியக் காண்கிறோம். தெளிந்த புலமை என்னும் நீரூற்றினால் என்றும் குன்றா வளமும்

பொன்ருப்பொலிவும் இலக்கியச் சோலையை இளமை ததும்பச் செய்வன. இங்கு, அறிவும் ஆற்றலும் இரு பெருங் கதிர்களாய் ஒளிச்சுடர் பொழிவன. இலக்கியப் பொழிலில் பாக்கள் தாம் பூக்கள். பாடலின் சொல்லழகும் பொருளழகும் மலரின் வண்ணமும் வனப்பும் போல்வன. மலரில் தேக்கி இருக்கும் தேன்வெள்ளம்தான் பாவில் பொங்கும் சிந்தனைப் பெருக்கு. சோலையின் கவின்மிகு காட்சியில் கருத்தைப்பொருத்தித் தேனையும் கனியையும் தேக்கறச்சுவைக்கும் பறவை போல்பவர் படிப்பவர்கள்.

இலக்கியம் படைத்த எப்புலவனும் எழுதாச்சித்திர மாய் இலங்கும் இயற்கையின் எழிலைப் பாடாமல் விடுவ தில்லை. சோலை என்ருல் சொல்லவா வேண்டும்! ‘பூவார் சோலை மயில்ஆலப்புரிந்து குயில்கள் இசைபாடக், காமர்மாலை அருகசைய நடந்தாய் வாழி காவேரி’ என்று ஈடுபட்டுப் பாடுகிருர் இளங்கோ. வானம், விண்மீன், ஞாயிறு, திங்கள், அருவி, ஆறு, மலை, கடல், சோலை, பறவைகள், மாக்கள், மக்கள், குழந்தை — எல்லாம் இயற்கையே. மாந்தர் இனம் இயற்கை இனத்தில் இணைந்தாலும் மொழியடிப்படையில் பிறவற்றினின்றும் பிரிந்துவிடுகிறது. ஆயின், மனிதனைப்போலவே மலர்க ளும் மரங்களும் மற்றவையும் வாழ்வு நடத்துகின்றன, பேசுகின்றன. எத்துணையோ இரகசியங்களையும் வாழ் வியல் உண்மைகளையும் உலகத்தார்க்கு உணர்த்திய வண்ணம் உள்ளன. இவற்றின் மொழியை எளிதாக இதயத்தில் ஏற்ருச் சொல்லில் மாற்றித்தரும் ஆற்றல் படைத்த விந்தைப்பிறவியாக விளங்குகிருன் பாவலன். கைபுனைந்து இயற்ருக் கவின்பெரு வனப்பினைக் கடவு ளாகக்கண்ட கவிஞர் வேட்சுவொர்த், “ஏடு சொல்லாத

எத்துணையோ உண்மைகளை இயற்கை சொல்லித்தரும். நண்பனே! ஒளிதவழும் பொருள்களின் முன்னிலையில் வா. இயற்கைப் பொருள்களின் இயல்புகளை உற்று நோக்கி உணர்ந்துகொள்ளும் உள்ளத்தையும் உன்னுடன் கொண்டுவா. இயற்கையே சிறந்த ஆசானாக அமையட்டும்" என்று பாடம் புகட்டுதல் காண்க.[1] எல்லாப் பாவலரும் இயற்கைப்பள்ளியில் பயின்றவர்களே. பள்ளு பாடிய பாவலன் புனையும் சோலைக்காட்சி வாழ்வின் மாட்சியை விளக்குதல் காண்போம். தெங்கின் குலைகளைக் கமுக மரங்கள் தாங்கும். கமுகங் குலைகளை மாங்கிளை தாங்கும். மாங்கனிகளைப் பலாவின்கிளை தாங்கும். பலாவின்கனியை வாழைகள் வளையினும் சுளுக்கினும் விடாமல் சுமக்கும். மாதுளங்கிளைகள் வாழையைத் தாங்கிக் காக்கும். இங்ஙனம் ஆசூர் வடகரைநாடு வளம் கொழிக்கிறது.[2] இக்காட்சியால் கவிஞன் கூற நினைத்த கருத்து யாது? உயர்ந்த நிலையில் இருப்பவர்களைத் தாழ்ந்த நிலையில் உள்ளவர்தாம் தாங்குகின்றனர் என்பதாம். பாட்டாளி மக்களும் பணக்காரர் கூட்டமும் ஏற்றத் தாழ்வுகளை எண்ணாமல் ஒருவர்க்கு ஒருவர் உதவியும் அன்பு செலுத்தியும் இன்பவாழ்வு வாழ்தல் வேண்டும். இங்ஙனம் மனம் ஒத்துவாழ மனித இனம் கற்றுக்கொண்டு விட்டால் சமதர்மம், பொதுவுடைமை என்ற கூக்குரல் பொருளற்றதாகிவிடும்.

---

1. Come forth into the light of things
   Let Nature be your Teacher.
   Come forth, and bring with you a heart
   That watches and receives.
   — William Wordsworth.

2. முக்கூடற்பள்ளு—25

இலக்கியச்சோலையில் மருந்துச் செடிகள்போல் இருப்பவை நீதிநூல்கள். நீதிநூல்களிலும் இயற்கைப் பின்னணியில் வாழ்வியல் உண்மைகள் விளக்கப் பெறுகின்றன. குருபாததாசரின் கற்பனை காண்போம்.[3] சாலையின் ஓரமாக ஒரு சோலை. ஆங்கு, நீண்டுவளர்ந்த பெருமரம். மரக்கிளை ஒன்றில் ஆண்புருவும், பெண்புருவும் நெஞ்சு குளிரக் கொஞ்சிக் குலாவின. காட்டில் வாழும் வேட்டுவன் காலை வேளையில் கணையும் வில்லும் கைக்கொண்டு அங்கு வந்தான். வண்ணப் புருவின்மேல் எண்ணம் வைத்தான். கொள்ளை கொள்ளை என்று துள்ளிக் குதித்தான். புருக்களும் வேடனைப் பார்த்துவிட்டன. அவன் இலக்கினின்றும் தப்பித்துக்கொண்டு மேலே பறக்க எண்ணின. அந்தோ கொடுமை! புருவின்மேல் குறி வைத்து இராசாளிப்பறவை வட்டமிட்டுக்கொண்டிருந்தது. தெருவில் திரியும் சிறு குழவிகளையும் தூக்கும் ஊக்கம் படைத்த வல்லூறுகிய இராசாளிக்குப் புரு எம்மாத்திரம்? இரண்டு புருவிற்கும் இப்படி சோதனையும் வேதனையும் சூழ்ந்தன. இந்நிலையில் புருக்கள் என்ன செய்ய இயலும்? இருந்த இடத்திலேயே நீடித்து இருந்தால் வேடன் அம்புக்கு இரையாகவேண்டும். பறந்துபோய்த் தப்பிக்கலாம் என்றால் வல்லூறுக்குப் பலியாகவேண்டும். இருதலைக்கொள்ளியின் உள்எறும்பு போல் (dilemma) புருக்கள் தத்தளித்தன. கதறின, பதறின. என்றாலும், அடி உள்ளத்தில் இருந்து துள்ளி எழும்பும் பத்தி உணர்ச்சியுடன் இறைவன் புகழையே பாடின; பாடிக்கொண்டே இருந்தன. முடிபு என்ன ஆயிற்று? வேடன் தன் நிலையை ஒழுங்குபடுத்திக்கொண்டு வில்லை வளைப்பதற்காகக் கல்லை உதைத்தான். கல்லை உதைத்ததும் பல்லை நீட்டிப் பட

3. குமரேசசதகம்—85

நாகம் கொத்தியது. இலக்கு இழையளவு தவறிப்போய்ப் புருக்கள்மிசை வட்டமிட்ட இராசாளியின் உடலைக்கிழித்தது. இராசாளி தரையில் வீழ்ந்து மடிவதற்கும், வேடன் சாய்ந்து மாய்ந்து முடிவதற்கும் சரியாய் இருந்தது. சிறைப்பட்ட புருக்கள் விடுதலைபெற்று விரிந்த வானில் திரிந்து மகிழ்ந்து வாழ்ந்தன. இதனால் கவிஞன் உணர்த்த வந்த உண்மை யாது? எண்ணிப்பார்க்க வேண்டும். சோலைதான் உலகம். மரம்தான் இல்லம். புருக்கள் தாம் குடும்பம். இராசாளி, வேடன்போல் தீயசக்திகள் வாழ்வில் மோதும். தீமைக்கும் நன்மைக்கும் போராட்டம் ஏற்படும். தீமையின் வன்மையே பெரிதாகத்தோன்றும். நன்மையின் தன்மை மென்மை உடையதாய்த் தெரியும். இந்த வாழ்க்கைப் போராட்டத்தில் இறைவனை நம்பி வாழும் நல்லவர்கள் காப்பாற்றப்பெறுவர். தீய எண்ணம் கொண்ட இராசாளி தீய வேடன் கணையால் தீர்ந்தது. தீய வேடன் நச்சரவால் கொல்லப்பட்டான். தீமை தீமையால் அழிந்தது. கள்ளம் இல்லாத வெள்ளைப் புருக்கள் ஈசனின் கருணைக் கவசத்தால் காக்கப்பெற்றன. "அவ்விரு சிறைப்புரு வாழ்ந்தவன்றோ, வாடாமல் இவை யெலாம் சிவன் செயல்கள் அல்லாது மனச்செயலினாலும் வருமோ" என்று கேட்கிறார் குருபாததாசர்.

இங்ஙனம் இலக்கியச்சோலை நல்கும் வாழ்வியல் வாய்மைகள் மிகப்பல. அவற்றுள், இரண்டொன்று கண்டோம்.

---

2533

# திருக்குறள் பாயிரம்

திருக்குறளின் முதல் நான்கு அதிகாரங்களும் பாயிரம் எனப் பன்னெடுங் காலமாகப் பயின்று வருதல் காண லாம். ஐயவுணர்வின் ஆன்ருேர் தொல்வரவாகிய பாயி ரம் வள்ளுவன் வகுக்கவில்லை என்று தீர்ப்புக் கூறுதல் ஏற்புடைத்தா என எண்ணிப் பார்த்தலே இக்கட்டுரை யின் நோக்கம். பாயிரம் பிந்தையோர் புகுத்திய பகுதி எனற்கு ஓதும் ஏதுக்களை ஒவ்வொன்ருகச் சீர்தூக்கிப் பார்த்துச் செப்பம் உரைத்தல் கடன்.

தொல்காப்பியர் பாயிரம் பற்றிச் செய்யுளியலில் பகரா மையான் பண்டு பாயிரம் இல்லை என்பதூஉம் தொல் காப்பியப் பாயிரம் பிற்காலப் புனைவு என்பதூஉம் முதல் தடையாக முகிழ்க்கிறது. அதற்கு விடை:- செய்யுளியலில் உள்ள நூற்பாக்கள் சில பிற்காலப் பாயிர இலக்கணத் தில் தொகுக்கப் பெற்றிருத்தல் காண்க. அல்லதூஉம் செய்யுளியலில் பெயர்சுட்டித் தொடை இலக்கணம் பக ரும் காப்பியர் அந்தாதி பற்றி யாதொன்றும் ஓதாமை யான் அவர்காலத்து அந்தாதி இல்லை என்பது பொருந்து மேல், பாயிரம் இல்லை என்பதூஉம் ஒக்கும். அவர்க் குக் காலத்தினுல் முற்பட்ட முரஞ்சியூர் முடிநாகனுர்

*"மண்டிணிந்த நிலனும்*
*நிலனேந்திய விசும்பும்*
*விசும்பு தைவரு வளியும்*
*வளித்தலைஇய தீயும்*
*தீமுரணிய நீரும் என்ருங்கு"*

எனப் பாடிய புறநானூற்று முதற் பாடலில் அந்தாதித் தொடை அமைப்புள்ளமை அறிக. களங்காய்க்கண்ணி

நார்முடிச் சேரலைக் காப்பியாற்றுக் காப்பியனார் பாடிய நான்காம் பத்தும், ஐங்குறுநூற்றில் அம்மூவனார் பாடிய தொண்டிப்பத்தும் (171—180), அந்தாதித் தொடையாய் அமைந்திருத்தல் காண்க. ஐங்குறு நூற்றின் பழைய உரை யாசிரியர், "இவை பத்தும் சொல்வகையால் தொடர்ச்சி பெறுதலேயன்றிக் கிளவி வகையால் தொடர்ச்சி உடைய வாறும் அறிக" என எழுதியிருக்கிறார். எனவே, தொல் காப்பியனார் சொல்லாதன எல்லாம் இல்லாதன என எண்ணுதல் பொல்லாததாம். வியங்கோள் விகுதிக்கு விதி விளம்பாத காப்பியர், "இயற்கைப் பொருளை இற் றெனக் கிளத்தல்", "செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல்" என ஆளுதல் காண்க. இனி, தொல்காப்பியப் பாயிரம் பிற்காலப் புனைவு என்பதற்குச் சான்று யாதென ஓதிற்றிலர். அஃது அவர் ஒருசாலை மாணாக்கராகிய பனம்பாரனார் பாடினார் என்னும் வழக்கு வலியுடைத் தாகலானும், ஒருவரை ஒருவர் மறுத்துக் கருத்தின் பொருத்தமின்மையை விரித்துப் பேசிப் போலியுரை, அவர்க்கது கருத்தன்றென்க என முழக்கும் வீறுபடைத்த உரையாசிரியர் ஒருவரும் இப்பாயிரம் பனம்பாரனார் பாடியதன்றென மறுக்காமையானும், தொல்காப்பியர்க்கு ஒப்பாக நூற்பா யாக்கும் நுண்மாண் நுழைபுலம் கெழு மிய அவர் தோழர் நூலினைப் "பனம்பாரம்" என உரையாசிரியன்மார் மேற்கோள் காட்டலானும், பாயிரத் தின் பால் ஐயுறுதல் 'புதுமை' காணும் வேட்கையே யன்றிப் புலமை பேணும் நெறியன்று.

சங்கப் பாக்களுக்குப் பாயிரம் இல்லை; தொகுத்தோ ராதல் பாடி இருத்தல் கூடாதா என்பது கடா. அதற்கு

விடை:- பாயிரம் நூலிற்கா அன்றித் தனித்தனிப் பாவிற்கா? என எதிர்வினு விடுக்க. சங்கப்பாக்கள் தனிப் பாடல்களே. தொகுத்தார் பாயிரம் பகர்தல் ஆற்ருதா என்னிற் சாற்றுதும். பல்வேறு ஆசிரியர், பல்வேறு பொருளைப்பற்றித் திணை, துறை வேற்றுமையுடன் பாடி யிருத்தலின் அவற்றிற்குப் பாயிரம் பகர்தல் ஒண்ணுது. அல்லதூஉம், ஒருபொருள் நுதலிய ஒருநூற்கே பாயிரம் அன்றிப், பன்மாண் பொருளைத் தன்பால் தாங்கும் பல புலவர் பாடிய பனுவற்கு எழுதின் பழுதாம், இயல்வதும் அன்ரும் எனக்கோடல் ஒன்று. அற்றேல், பாட்டின் வரலாறு பாயிரமாயின், புறநானூறு, பத்துப்பாட்டு அடிக் குறிப்புக்கள் பாயிரத்தின் வித்தும் வேருமாம். அன்றிப், பதிற்றுப்பத்து சேரவேந்தர் பதின்மரைப் பற்றித் தனித் தனியாகப் பாடும் பத்துச் சிறு பனுவலின் மொத்தத் தொகுப்பாம். ஒவ்வொரு பத்தும் ஓர் அரசனைப்பற்றிய தாகலின் அவற்றின் பதிகம் பாடியோன், பாடப்பெற்ருேன், பாடியசூழல், பெற்றபரிசில் இன்ன பிற விளக்கங்களைத் தம்பாற் கோடலின் பாயிரமாகக் கருதுதலிற் பழுது என்னை? பதிகம் வேறு, பாயிரம் வேறு என்பார் சான்று காட்டி மெய்ப்பிக்காது ஊக ஊர்தியில் உயரப்பறத்தல் ஆய்வுக்கு உகந்ததன்று "முகவுரை, பதிகம், அணிந்துரை, நூன் முகம், புறவுரை, தந்துரை, புனைந்துரை, பாயிரம்" என்ற நூற்பா இரண்டும் ஒன்றெனற்குச் சான்ருகும். அதனு னன்றே, சிலம்பு, மேகலை இரண்டின் பதிகங்களும் நூல் வரலாறு நுவன்று, நூற்பொருள் நுதலிக், கேட்டோன், கூறினேன் பெயர்பொறித்துச் சேறலின் பிறர்பாடிய பாயிரங்களே என நாவீறு படைத்த நாவலர் பாரதி உள்ளிட்டார் நவின்றனர் என்க.

இனி, வள்ளுவமாலை பிற்காலத்துப் பனுவலாகலின் அதுகொண்டு 'பாயிரம்' உண்மையை நிறுவுதல் முறையன்று; பாயிரம்பற்றிக் குறிக்கும் மூவரும் சங்க இலக்கியத்துட் காணப்பெறுமையான், பாயிரப்புனைவு பெறப்படாதா என்பது கடா. அதற்கு விடை:- உரையாசிரியர்க்கெல்லாம் முன்னர்த் தோன்றியது வள்ளுவமாலை என்பதில் ஐயமில்லை. அதன் காலம் கி. பி. 7, 8-ஆம் நூற்றாண்டாகல் வேண்டும். திருக்குறளின் அதிகாரம், இயல், பால் அமைப்புக்களை உணர்த்தும் தொன்மையானதும் நம்பத்தக்கதுமான ஒரே நூல் வள்ளுவமாலைதான். 'பாயிரம்' பற்றி ஒருபுலவர் பாடியிருந்தால் ஐயுறுதல் கூடும். ஆயின் மூன்று புலவர்கள் முறையே, "ஆயிரத்து மூந்நூற்றுமுப்பதருங் குறளும், பாயிரத்தினோடு பகர்ந்ததற்பின்" (16), வீடொன்று பாயிரம் நான்கு" (20), "பாயிரம் நான்கில்" (25), என்றிசைத்த பாடல்களில், "பகர்ந்ததற்பின்" (16), "வள்ளுவன் சொன்ன வகை" (20), "ஆய்ந்துரைத்தார் நூலின் திறத்துப்பால் வள்ளுவனார் தேர்ந்து" (25), என வள்ளுவர் வாய்மொழியே பாயிரம் எனத் தெளிவுறுத்தலானும், ஓரிடத்தும் இயலமைப்பு உரையாசிரியர் கைவண்ணம் என்றுரைக்காமையானும், வள்ளுவமாலைக்காலத்தைய தமிழ்ச் சான்றோர் பாயிரம் வள்ளுவன் அமைப்பு அன்று என்று மறுக்காமையானும், பாயிரம் வள்ளுவன் அமைத்ததே என்ற முடிபிற்கு உய்த்தல் காண்க. குறளின் தொகை, "ஆயிரத்து மூந்நூற்று முப்பது" (16) என்றும், அதிகாரத்தின் தொகை, "ஐயாறும் நூறும் அதிகாரம் மூன்றுமாம்" (28) என்றும், பாலின்தொகை, "மும்மலையும்... வள்ளுவர் முப்பால்" (10), "முப்பால் மொழிந்த மொழி" (9) என்றும் வருவன வள்ளுவன் அமைப்பே எனக்

கடைப்பிடிக்கும் ஆய்வாளர், "வீடொன்று பாயிரம்" (20), "அரசியல் ஐயைந்து" (26), "ஆண்பால் ஏழ்" (27) என வருஉம் இயலமைப்பும் நூலாசிரியன் செய்ததே எனக் கருதுதல் வேண்டும். ஒருநூல் அமைப்பினைப்பக ரும் முக்காற்பகுதியை மேற்கொண்டு, காற்பகுதியை விலக்குதல் தருக்க நெறிக்குப் பொருந்தாது.

இனி, பாயிரத்தைச்சுட்டும் மூவர் பெயரும் சங்கப் பாக்களில் காணப்பெருமையான், பாயிரப் பொய்ம்மை பெறப்படுமாலோ எனின், தொடித்தலை விழுத்தண்டினார் பாயிரம் உள்ளிட்ட நான்கு இயல்கள் அறத்துப்பால் என்றுராகலானும், அவர் புறநானூற்றுட் பாடியிருத்தலா னும் பாயிரமெய்ம்மை புலனுதல் காண்க.

இயலமைப்பு உரையாசிரியர்கள் மாற்றி இருத்தல் தேற்றம். ஆதலான் நூலாசிரியர் இயலமைத்தார் எனல் பொருந்தாது; இயலமைப்பு நூலாசிரியர்க்கு உரித்தாயின் ஒருஞான்றும் மாற்றி உரைக்க ஒருப்படார்; எனவே, பாயிரமும் உரையாசிரியர் படைப்பே என்பது தடை. அதற்கு விடை:- இக்கருத்துடையார் எண்ணம் யாதோ எனின், வள்ளுவன் 1330-குறளும் பாடினன். பிற் காலத்து உரையாசிரியர்தாம் அதிகாரம் வகுத்து, இய லமைத்துப் பால்பிரித்து நூல் தொகுத்தனர் என்பதே யாம். ஒருவித ஒழுங்கும் அமைப்பு அழகும் ஓம்பாமல் தான்தோன்றியாய் நூல்யாத்தார் என்னும் நோக்கின் போக்கு விந்தைக்கு உரியதே. நூல்முழுமையும் நுணு கியும் அணுகியும் பயில்வார், ஒருவித ஒழுங்கும் அழகும் அடிப்படையாகக்கொண்டு, வள்ளுவர் நூல் யாத்தாராதலை உய்த்துணர்வார். "எண்ணித்துணிக" என விதிக்கும் ஆசான் விதிக்குப் புறம்போகும் கொல்? ஒருஞான்றும்

போகான். ஒரு பொருள் நுதலிப் பத்துப் பத்தாகப் பாடும் மரபு சங்ககாலத்துண்மைக்குப் பதிற்றுப்பத்தும், ஐங்குறுநூறும் சான்றுயிருத்தல் அறிக. அறம், பொருள், இன்பம் என எண்ணும் மரபுண்மைக்குத் தொல்காப்பிய மும் (செய்யுளில் 411) புறநானூறும் (28, 31) சான்று கும். ஒருபெரும் பனுவல், நூல்ஆசிரியனுல் பலவகை இயல்களாகப் பகுக்கப்பெறுதல் பண்டு உண்டு என்ப தற்குத் தொல்காப்பியமே துணையாகும். பத்துப்பத்தாகக் குறள் அமைத்து அதிகாரம் வகுத்ததும் வள்ளுவனே; இயலமைப்பும் அவன் படைப்பே; பாலாகப் பகுத்து நூலாக்கியதும் அவனே! அஃதங்ஙனம் ஒக்குமாயின், இயல் மாற்றம் காணப்பெறுதற்குக் காரணம் யாதோ எனில் ஓதுவாம் பொருள் கூறும் முறைக்கு ஏற்பப் பண்டைய உரையாசிரியர்கள் குறளின் வைப்பு முறையை மாற்றியிருத்தலைக் காண்கிறோம். அங்ஙனமே இயலின் அமைப்பையும் மாற்றியிருத்தல் கூடும். நூலாசிரியன் அமைப்பினை உரையாசிரியர் பொருள்கோள் முறைக்குத் தக மாற்றும் இயல்பினர் என்பதற்குத் தொல்காப்பியச் சான்று காட்டுவம். ஒரு நூற்பாவை இரண்டாக்கலும், இருநூற்பாவை ஒன்றுக்கலும், பிரித்துக் கூட்டலும் உரை யாசிரியர்தொறும் வேறுபடுதல் உணர்க. அல்லதூஉம் பொருளதிகாரத்தின் உவமையியலை "அணிஇயல்" எனக் கொண்டோரும் உண்டு. பொருளதிகாரம் செய்யு ளியலுக்கு 'யாப்பதிகாரம்'' எனப் புதுமகுடம் புனை தலைப்பேராசிரியர் மறுப்புரையானும் ஓர்க. நூலாசிரியன் கருத்திற்கு அமைதி கூறலே உரையாசிரியர் உள்ளமே யன்றி, இயலமைப்பினைப் பொருள்கோள் முறைக்குப் பொருந்த மாற்றுதலும் உண்டெனக் கண்டோம். எனவே, பாயிரம் உரையாசிரியன்மார் கைவண்ணம் என்பது பொய் எண்ணமே.

இனி, குறள்வைப்புமுறை உரையாசிரியர்தொறும் மாறுபடுதலே குறளின் அதிகார அமைப்பும் இயலமைப்பும் வள்ளுவன் செய்திலன் என்பதற்குச் சான்றாகும் எனிற் சாற்றுவம். பரிமேலழகரே அதிகாரப் பெயரை ஓரோவழி மாற்றியிருப்பினும் 'கவிகூற்றுய அதிகாரத்து' என்று 'அவர் வயின் விதும்பல்' முகப்பில் மொழிதல் காண்க. குறள்வைப்புமுறை மாற்றம் அவ்வதிகாரத்தின் கண்ணே நிகழ்வதன்றி, ஓரதிகாரத்தில் உள்ள குறள், பிறிதோர் அதிகாரத்தில் கொண்டுய்க்கப் பெருமையான், வள்ளுவன் வைத்த முறை ஒன்று உண்டு என்பதூஉம்; அம்முறை எவ்வுரையாசிரியரால் கடைப்பிடிக்கப் பெற்றுள்ளது என இயம்புதற்கு இயலாது என்பதூஉம்; பொருள்கோள் முறைக்குத்தக உரையாசிரியர் வைப்பு முறை மாற்றம் செய்தனர் என்பதூஉம் அறிக. திருக்குறள் உரையாசிரியர் பிறபிற இயல்களை மாற்றிப் புதுப் பெயர் புனையினும், பாயிரவியலை ஒருவர்கூட மாற்றி அமைக்காமையும் போற்றிக் கொள்க.

பாயிர இலக்கணம் வகுத்தது பவணந்தியே என்றுரைப்பர். அது பொருந்தாது. பாயிர நூற்பாக்கள் பல அவர்க்கு முற்பட்ட தொல்காப்பியம், பனம்பாரம், நத்தத்தம், அவிநயம், காக்கைப்பாடினியம், களவியல் உரை, இளம்பூரணம், யாப்பருங்கலவிருத்தி, காரிகை உரை முதலியவற்றில் உண்மையானும்; ஒவ்வோர் அதிகாரத்திற்கும் கடவுள் வாழ்த்துக்கூறும் பவணந்தி, பாயிரத்தின் தொடக்கத்தில் வாழ்த்துக் கூருமையானும்; நன்னூல் நூற்பாக்களின் எண்ணிக்கையை எடுத்துரைக்கும் இரு வெண்பாக்களும் ஒருமுகமாகப் பாயிரத்தில் 54-நூற்பாக்களையும் எண்ணுமல் விடுத்தமையானும்; அவர்க்கு

முன்னரே நெடுங்காலமாக வழங்கும் நூற்பாக்களைத் தொகுத்து நன்னூலுடன் இணைத்தனர் என்றலே பொருந்தும்.[1] பாயிர இலக்கணத்திற்குப் பவணந்தியே முதலாசிரியன் எனல் பழுதுபட்ட கருத்தாம். என்னை? கி. பி. 7-ஆம் நூற்றாண்டில் எழுத்து வடிவுபெற்ற இறையனார் களவியல் உரையில், "......அவையெல்லாம் மிகுத்துரைப்பிற் பெருகும்; முடிந்த நூல்களிற் கண்டு கொள்க" என்று இயம்புதலான் பாயிர அமைப்பினை விரித்துரைக்கும் நூற்பாக்களை உடைய இலக்கண நூல்கள் பண்டைக்காலத்துப் பல இருந்தமை எளிதிற் பெறப்படும்.

திருக்குறள் பாயிரம் பொதுவின்பாற்படுமா? சிறப்பின்பாற்படுமா? என்பது அடுத்த வினா. அதற்கு விடை:- சில உறுப்புக்களை அடிப்படையாக வைத்துப் பாயிரத்தைப் பொதுவென்றும் சிறப்பென்றும் செப்புவர். "ஆக்கியோன் பெயரே வழியே எல்லை......உளரே" என்ற நூற்பா பதினொருறுப்புக்களையும்; "ஆக்கியோன் பெயரே ......" என்ற களவியல் உரை மேற்கோள் நூற்பா எட்டுறுப்புக்களையும்; "நூலே நுவல்வோன்......" என்ற நூற்பா ஐந்துறுப்புக்களையும்; "ஈவோன் தன்மை ஈதல் இயற்கை, கொள்வோன் தன்மை கோடல் மரபென" என்ற நூற்பா நான்கு உறுப்புக்களையும்; "பன்னிய நூற் பேர் பகர்ந்தோன் பேர் காரணமும்......" என வருஉம் நேமிநாத நூற்பா நான்கின் மிக்கும் குறைந்தும் வரும் உறுப்புக்களையும்; "தெய்வ வணக்கமும் செயப்படு பொருளும் எய்த உரைப்பது தற்சிறப்பாகும்" என்ற யாப்பருங்கல உரைமேற்கோள் இரண்டுறுப்புக்களையும்;

1. Annamalai University Journal Vol. XII page 143.

"பருப்பொருட்டாகிய பாயிரம் கேட்டார்க்கு நுண்பொருட்டாகிய நூலினிதுவிளங்கும்" என்ற இறையனுர் களவியல் உரைமேற்கோளும், "பாயிரத்திலக்கணம் பகருங்காலை, **நூல்நுதல் பொருளைத் தன்னகத் தடக்கி,** ஆசிரியமானும் வெண்பாவானும் மருவிய வகையான் நுவறல் வேண்டும்" என்ற நூற்பாவும் நூல்நுதல் பொருளைத் தன்பால் தாங்கி இருத்தலாகிய ஓர் உறுப்பையும், பாயிரத்தின் இலக்கணமாகப் பகர்தலைக் காய்தல் உவத்தலின்றி ஆய்தல் நல்லோர் கடமையாம். பாயிரத்தின் உறுப்புக்கள் பதினென்றும் பேரெல்லையும் நூல்நுதல் பொருளைத் தொகுத்துரைத்தல் என்ற ஓர் உறுப்பும் சிறெல்லையுமாகக் கருதுதல்வேண்டும். என்னை? மயிலைநாதர், "இவ்வாற்ருன் இதற்குப் **பதினெரு பாயிரமும்** போந்தவாறு இதனகத்தே கண்டுகொள்க" என இயம்புதலான், பாயிரம் அது தன்பாற்பெற்ற உறுப்பின் சிறப்பினைப் பொறுத்து எண்ணப்பெறும் இயல்பினை ஓர்ந்து உணர்க.

பாவு>பா+இரு+அம்—நூல் முழுதும் பாவியுள்ள பொருளைத் தன்பாற்பெற்றிருத்தலே "பாயிரம்" என்ற பச்சைத் தமிழ்ச் சொற்குப் பொருளாம். "நூல்நுதல் பொருளைத் தன்னகத்தடக்குதல்" **'பாயிரம்'** என்றசொல்லில் பதிந்திருத்தல் காண்க. பாயிரம் நூலின் முகமாதலை மேற்புலத்தாரும் Preface (Pre - முன்; face - முகம்>நூன்முகம்) என வழங்குதல்கொண்டு எல்லா மொழிகட்கும் அது பொது என்றும் வடமொழிக்கே உடைமை அன்று என்றும் துணிக.

இனி, வள்ளுவர் பாயிரம் மேற்கூறிய பலதிறப் பாயிரங்களில் எத்தகைத்து என்பதை முதற்கண் ஆய்

வோம். தெய்வ வணக்கமும், செயப்படுபொருளும் வள்ளுவர் பாயிரப் பொருளாதலே மழபுலமகாரும் உணர்வர். பாயிரத்தின் முதலதிகாரமாகிய கடவுள் வாழ்த்து "தெய்வ வணக்கத்தின் பாற்படும்;" அவன் அருளே நினைப்பிக்கும் விழுமிய மழையின் சிறப்பினைப் புகழ்தலும் தெய்வவணக்கமே. கைம்மாறு கருதா மாரி யைப் போல உலகத்திற்கு உதவும் ஒட்பமுடைய சான்றோர் செயற்கரிய செய்தலானும், குணக்குன்றுதலானும், எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகலானும், அறம் வகுத்த திறமுடைமையானும் நீத்தார் பெருமையும் கடவுள் வாழ்த்தொடு கருதத்தக்கது. அற்றேல், முழுமுதலுடன் முனிவரர் நிகர்ப்பாரெனல் ஒவ்வாதெனின், அற்றன்று. கடவுள் வாழ்த்து, நீத்தார்பெருமை இரண்டினையும் ஒப் பிட்டு ஆய்வார், முழுமுதலின் இறைமைப் பண்புகள் அவன் அருள்பெற்ற முனிவர்க்கும் பொருந்தியிருத்தலே உணர்வர். அறவாழி - அறம்பூண்டான்; பொறிவாயில் ஐந்தவித்தான் - ஐந்தவித்தானுற்றல்; எண்குணத்தான் - குணமென்னுங் குன்றேறி நின்ருர்; அறவாழி அந்தணன் - அந்தணர் என்போர் அறவோர்; தனக்குவமை இல்லா தான் - துறந்தார் பெருமை துணைக்கூறின்........அற்று; வாலறிவன் - நிறைமொழிமாந்தர்,......மறைமொழி என வரூஉம் பகுதிகளே ஊன்றிப்பார்ப்பார், இறைவன் அருளினுல் உயர்ந்த தெய்வத்தன்மை எய்தப்பெற்றவர் நீத்தார் என்பதூஉம்; "வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும்" என்பது ஆசிரியர் உள்ளமாகலானும், அவரும் வாழ்த்திற்குரியரே என்பதூஉம் உணர்வர். அல்லதூஉம், "அமரர்கண் முடியும் அறுவகை யானும்" என்ற தொல்காப்பிய நூற் பாவிற்கு நச்சினுர்க்கினியர், "அவை முனிவரும்......

ஆனிரையும், மழையும், முடியுடைய வேந்தரும் உலகும் ஆம். இவை தம் சிறப்புவகையான் அமரர் சாதிப்பால என்றல் வேதமுடிபு" என்றுரைத்தலை எடுத்துக் குறளில் மழை வாழ்த்தும், அந்தணர் வாழ்த்தும் கடவுள் வாழ்த்தொடு வருதலை நிறுவுதல் ஒருவகை. எனவே, முதல் மூன்று அதிகாரங்களும் பாயிரத்தின் ஒரு கூறாகிய "தெய்வவணக்கம்" ஆகலின், "செயப்படுபொரு"ளாகிய இரண்டாவது கூறு "அறன்வலியுறுத்தலில்" உரைத்தார் என்க. என்னை? வள்ளுவன் நூல் மெய்யாயின், அறம் உயிராயிருந்து இயக்குதல் ஓர்க. இல்லறம் புரிந்து, அறவழியில் பொருள் தொகுத்து, அறத்தாற்றில் இன்பம் துய்த்து, மக்களொடு துவன்றி நாட்டின் நலனுக்காக வீட்டைத் துறந்து, உலகுய்ய நெறிமுறைகளை விதித்தும், அல்லவை விலக்கியும் நீத்தாராகிய அறவோர் வகுத்தும் தொகுத்தும் நல்கிய சட்டதிட்டங்களே அறமாகும். அவ்வறவழியில்தான் இல்வாழ்வான் வாழ்தல் வேண்டும். "அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை" என விதித்தல் காண்க. துறவியரும் அறநெறியில் நிற்றல்வேண்டும். எனவே, அறம் இல்வாழ்விற்கும் துறவுவாழ்விற்கும்தொடர்புற்றிருத்தலின் அறத்துப்பாற்கு அறன் வலியுறுத்தல் வித்தாகும். ஆட்சிக்கு அடிப்படை பொருளன்றோ? செறுநர் செருக்கறுக்கும் எஃகு பொருளிற் பிறிதில்லையாதலின் அருளொடும் அன்பொடும் அறவழியில் பொருள் ஈட்டுக என்பதே வள்ளுவன் உள்ளம். "சிறப்பீனும் செல்வமும் ஈனும் அறம்" என அறன்வலியுறுத்தலில் பொருட்பாலுக்குத் தோற்றுவாய் செய்தல் காண்க. குறளுடன் பிற இலக்கிய ஒப்புமையும் பாயிரப் பொருளை ஆய உதவும். பொருளை உயிராகக்கொண்ட ஆட்சி மாட்சி பெறுதல் அறத்தின் அடிப்படையிலாதலை,

"அறனிழுக்காது அல்லவை நீக்கி" (குறள் : 384)

"அறனறிந்து மூத்த அறிவுடையார்" (குறள் : 441)

"நான்குடன் மாண்ட தாயினு மாண்ட
**அறநெறி முதற்றே அரசின் கொற்றம்"** (புறம்)

"அறன் வாழ்த்த நற்காண்ட
உறன் மாந்தரன் விறன் மருக" (பதிற்று : 90 : 12-13)

"அறம்தெரி திகிரி" (பதிற்று : 22 : 4)

"அரைசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றாவதும்" (சிலம்பு)

"மாநிலம் காவல்செய்வான் மன்னுயிர் காக்குங்காலைத்
தானதனுக் கிடையூறு தன்னால்தன் பரிசனத்தால்
ஊனமிகு கள்வரால் பகைத்திறத்தால் உயிர்தம்மால்
ஆனபயம் ஐந்தும்தீர்த் **தறம் காப்பான்** அல்லனோ"
(தலைமை அமைச்சர் சேக்கிழார்)

என வரூஉம் எடுத்துக்காட்டுக்களால் அறிக. நீதிநெறி ஒழுங்காக வழங்குதல் அரசியலின் கடன். அறத்தின் அடிப்படையில்தான் நீதி வழங்கப்பெற்றது. சாதிக்கு ஒரு நீதி என அறத்தைக்கொல்லும் கொடுமை தமிழகத்தில் இல்லை. நீதியை நிலைநாட்ட அஃறிணைப் புறாவிற்கும் ஆன்கன்றிற்கும் விலைமதிப்பில்லா வேந்தர் உயிர் துறக்கப் பெறுமாயின் தமிழர் அறத்தின் நீதி ஆதவன்போலாம். முறை மன்றத்தை **"அறங்கூறு அவையம்"** எனச் சங்கத்துச் சான்றோர் உரைத்தல் காண்க.

"அறங்கெழு சோழர் உறந்தை அவையத்து
அறம் நின்று நிலையிற்று" (புறம் : 39)

"அறநிலை திரியா அன்பின் அவையம்" (புறம் : 71)

"அச்சமும் அவலமும் ஆர்வமும் நீக்கிச்
செற்றமும் உவகையும் செய்யாது காத்து
ஞெமன்கோ லன்ன செம்மைத் தாகிச்
சிறந்த கொள்கை அறங்கூ றவையம்''
(மதுரைக். 489–92)

"நன்றும் தீதும் கண்டாய்ந் தடக்கி
அன்பும் அறனும் ஒழியாது காத்துப்
பழியொரீஇ உயர்ந்து பாய்புகழ் நிறைந்த
செம்மை சான்ற காவிதி மாக்களும்''
(மதுரைக். 496–99)

என வருஉம் சங்கப்பாடல்கள் அறத்திற்கும் நீதித்துறைக்கும் நெருங்கியுள்ள தொடர்புகளை எடுத்துக்காட்டும். பிறர் படையெடுப்பால் மக்கள் மாழ்குறு வண்ணம் அமைதியைக் காக்கப் போர்புரிதல் அறமாம். மைந்து நசைஇ, மண்நசைஇப் போர்மலையும் அமர்க்களத்தும் அறம் ஓம்பப் பெற்றதை, "ஆவும் ஆனியல்.........அறத்தாறு நுவலும் பூட்கை'' (புறம். 9), "அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர்'' (புறம். 62) என வருஉம் புறப்பாடல்களான் அறிக. எனவே, பொருளையே முதன்மையாக உடைய அரசியலுக்கும், நீதி, போர் முதலிய புறத்துறைக்கும் அறத்துக்கும் நெருங்கிய உறவு உண்மையான், அறன் வலியுறுத்தலில் பொருட்பாலுக்குத் தோற்றுவாய் செய்தான். இனி, இன்பத்துப்பாற்கு யாங்ஙனம் வித்திட்டான் எனின், பிறனில் விழைவாற்குப் பகை, பழி, பாவம், அச்சம் இந்நான்கும் வருதலின், அறத்திற்குப் புறம் போய்ப் பிழையும், பீழையும் பயக்கும் என எச்சரித்தும்; பொதுப்பெண்டிர் பொய்ம்மை முயக்கால் பொருட்கேடும், நலக்குறைவும் மேவலின், "இருட்டறையில் ஏதில் பிணம்

தழீஇயற்று'' ''பூரியர்கள் ஆழும் அளறு'' ''திருநீக்கப் பட்டார் தொடர்பு'' என்று இடித்துக்கழறி இகழ்ந்துரைத் தும்; அடுப்பாரும் கொடுப்பாருமின்றித் தாமே நெஞ்சங் கலந்த தலைவனும் தலைவியும் கற்பறம்பூண்டு துய்ப்பதே இன்பமாதலை ''அறத்தான் வருவதே இன்பம்'' எனத் தேற்றேகாரம் சாற்றி எல்லை கட்டியதானும், காதலறம் அறன் வலியுறுத்தலில் ஓதினான். அன்றியும் காதல் அறத்தோடு நிகழ்தலைக், களவில் பழகிய தலைவியை மாற்றான் மணக்கவரும்வழி உயிர்த்தோழி உண்மை கூறிப் புதுவரவு தவிர்த்துப் பழந்தொடர்பு பகர்ந்து உறுதி மொழி உரைத்தலை ''அறத்தொடு நிற்றல்'' என்றும்; களவில் பயிலும் தலைவிபால் உருமாற்றமாதல் பசலை நோயாதல் படர்தல் உணராமல் செவிலியர் தலைவியின் நோய்போக்க வெறியாட்டயர விரும்புங்காலை, உயிர்த் தோழி இடையிட்டு உண்மைகூறி, நோய்க்கு மருந்து காதலனே என உறுதிமொழி உரைத்தலை ''அறத்தொடு நிற்றல்'' என்றும், காதலறத்தின் தொடர்புடைய கருத் துணர்ந்து சங்கச் சான்றோர் தம்பாக்களில் பாடியிருத்தல் காண்க. உடன்போக்கில் புறப்பட்ட தலைமக்களைத் தொடர்ந்து சென்ற செவிலிக்கு அறிவுரைகூறும் அந்தணப் பெருமர் அவர் ஒழுக்கத்தை ''அறம் தலைப்பிரியா ஆறு'' (கலி. 9) எனச் சுட்டுவதாகக் கற்றறிந்தார் ஏத்துங் கலிப்பாடல் கழறுதல் உணர்க.

எனவே, அறம், பொருள், இன்பம் மூன்றும் அறத் தினால் இயக்கப்பெறுதலானும் நூல் முழுமையும் அறத்தை அடிப்படையாகக் கொண்டு அமைதலானும், 'செயப்படு பொரு'ளாகிய பாயிரத்தின் இரண்டாவது உறுப்பினை ''அறன் வலியுறுத்த''லில் ஆசிரியன் திறம்படக் கூறினான்

என்க. செயப்படு பொருளாவது ஈண்டு 'அறமே'. வள்ளுவன் முப்பாலுக்கும் செயப்படு பொருளான "அறம்" என்ற பெயரே பண்டு வழங்கியது என்பதற்கு "அறம் பாடிற்றே" (புறம். 34) என்ற ஆலத்தூர் கிழார் பாடல் ஆதரவு தருதல் அறிக.

இதுகாறும் இயம்பியவாற்ருன் வள்ளுவன் பாயிரம், இன்றியமையாத இரண்டுறுப்புக்களாகிய தெய்வ வணக்கமும் செயப்படு பொருளும் எய்தப்பெற்ற திறத்தினைக் கண்டோம். இனி, "பாயிரம்" என்ற சொல்லின்பொருளை விளக்கும் ஒரே உறுப்பாகிய "நூல் நுதல் பொருளைத் தன்னகத் தடக்கல்" அல்லது "பருப்பொருள் பகர்தல்" யாங்ஙனம் குறட்பாயிரத்திற்குப் பொருந்தும் என்பது காண்போம்.

இல்லறத்தோரும், துறவறத்தோரும்; ஆட்சி அமைப்பில் பங்குபெறும் அரசன், அமைச்சன், ஒற்றன், தூதன், படைமறவர், குடிமக்கள் யாவரும்; கற்பனை வானில் பறக்கும் காதல் புறுக்களும் தமக்கு முதல்வன் ஒருவன் உளன் என்றும், நாம் இருந்து, இயங்கி இன்புறுதற்கு உரிய பரந்த வையத்தைச் சுரந்த முதல்வனை வாழ்த்துதல் அறிவின் பயனென்றும் வள்ளுவன் உள்ளினன் ஆதலின், கடவுள் வாழ்த்து நூல்நுதல் பொருள் அனைத்திற்கும் உயிர் என்க. அவன் அருளாகச் சுரக்கும் மழையின்றேல் தானம், தவம், பூசனை ஒன்றுமில்லை. உழுவார் உலகத்தார்க்கு ஆணி என்றும், உழவினர் கைம்மடங்கின் விழைவதூஉம் விட்டேம் என்பார்க்கும் நிலை இல்லை என்றும், பலகுடை நீழலும் தங்குடைக்கீழ்க் காணும் அலகுடை நீழலவர் என்றும் ஆசிரியனல் சுட்டப்பெறும்

உழவரும் உணவுக்கூலங்களை உண்டாக்குவான் "ஏரின் உழாஅர்". பயிர்த்தொழில் இன்றேல், உயிர்த்தொகுதி எங்கே? இல்லறம், துறவறம், அரசாட்சி, காதல்உலகு எல்லாம் கனவாகக், கற்பனையாக முடியும். மழைசுரந்து வளம் பெருக்கினுல்தான் இல்லறம் சிறக்கும்; அதனுல் துறவு துலங்கும்; நாட்டாட்சி நலம்பெறும்; காதல் உலகு கவின்பெறும். ஆதலின், முதலிரண்டு அதிகாரங்களும் நூல் முழுமைக்கும் ஆலமர் வித்தின் அருங்குறளாதலை உணரும் உள்ளம் உவகை பூக்கும்.

இனி, நீத்தார் பெருமையும், அறன் வலியுறுத்தலும் செயப்படு பொருளுக்குத் தோற்றுவாயாதலை முன்னர்ச் சாற்றினேம். இங்ஙனம் பாயிர விதிக்குத் திருக்குறள் பாயிரம் ஒருப்படுதல் ஓர்க.

தன்னைத்தானே புகழ்தல் பாயிரவழுவாகாதா எனின் வள்ளுவன் பாயிரத்தில் தன்னைத்தானே யாங்குப் புகழ்ந் துள்ளான்? யாண்டுமின்மையின், அம்மாசு அவன்பா லில்லை. "தோன்ருத் தோற்றி" எனத் துவங்கும் நூற்பா, நூலின் பெருமை கூறும் வாய்ப்பு வரும்போது நூலா சிரியன் பாயிரம் பாடுதல் கூடாது என்பதற்கு எழுந்த தாம். தோன்ருத் தோற்றித் துறைபல முடித்த வள்ளு வன் சிறப்புக்களை எல்லாம் நூலின் சிறப்புப் பாயிரமாகத் திகழும் திருவள்ளுவ மாலையிற் கண்டு கொள்க.

கடவுள் வாழ்த்து, வான் சிறப்புக் கூறி நூல் தொடங்குதல் ஒரு மரபே யன்றிப் பாயிரம் ஆகாது; இளங்கோவும் "மாமழை போற்றுதும்" எனத் துவங்கு தல் சான்ருமெனின், சரியன்று. என்னை? கடவுள் வாழ்த்துக்கூறி நூல் துவங்குதல் முற்கால மரபாயின்,

ஞாயிறு, திங்கள், மழையினைப் போற்றித் துவங்கும் இளங்கோ, அவற்றினை இயக்கும் முதல்வனை ஏன் வாழ்த்தவில்லை? அறன் வலியுறுத்தலை ஏன் விட்டுவிட்டார்? மணிமேகலையில் ஏன் கடவுள் வாழ்த்தும் இல்லை? வான் சிறப்பும் பிறவும் இல்லை? இங்ஙனம் வினாப் பலவாக வெடிக்கும். இந்நான்கும் திருக்குறளுக்கே தனி உரிமை உள்ள பாயிரமாதலின், பிற இலக்கியங்களில் இவற்றைத்தேடுதல் ஆய்வுக்குப் புறம்போதலாய் முடியும்.

பிற்காலப் பாயிரம் முற்கால நூலில் இருப்பதாகச் சொல்லுதல் பொருந்துமா? என்பது கடா. அதற்கு விடை :- பிற்கால அந்தாதி முற்கால நூலில் இல்லையா? இனி, பாயிரம் பிற்காலத்தது என்று எண்ணுதல் பொருந் தாது என்பதும்; அவிநயம், நத்தத்தம், பனம்பாரம், காக்கை பாடினியம் முதலிய தொன்மை இலக்கணங்கள் பல பாயிரவிதி பகர்ந்துள்ளன என்பதும்; இறையனார் களவியல் உரையால் பாயிர இலக்கணம் பகரும் நூற் பாக்களை உடைய இலக்கண நூல்கள் பண்டு பல இருந்தன என்பதும் முன்பே கண்டோம். "பாயிரம்" என்றசொல் இலக்கிய உலகில் கி. பி. ஐந்தாம் நூற்றுண் டளவில் எழுந்த பழமொழி நானூற்றில், "பாயிரம் கூறிப் படைதொக்கால் என்செய்ப, ஆயிரம் காக்கைக் கோர் கல்," (249) என்புழிப் பயிலப்பெறுதல் காண லாம். யாதானும் ஒரு பொருளின் அமைப்பு, இயல்பு, கருத்து, பெருமை முதலியனவற்றை முன்னர்ச் சுருக்கிக் கூறுதல் 'பாயிரம்' என்ற சொல் பயக்கும்பொருள் என் பதை ஒள்ளியோர் உணர்வர். எனவே, பாயிரம் என்ற சொல் நூலின் தன்மையினையும், நூல் நுதலும் கருத்துக் களையும், அவற்றின் பெருமையினையும் தொகுத்துக்

கூறும் நூலின் முகப்பாகிய அமைப்பினைக் குறிப்பதாகவே வள்ளுவன் பாயிரத்தைப் படிப்பார் எண்ணுதல்வேண்டும்.

இனி, பாயிரம் நான்கும் "கொடிநிலை, கந்தழி, வள்ளி என்ற வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும் கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே" என்ற தொல் காப்பிய நூற்பாவாற் பெறப்படும் கடவுள் வாழ்த்தும், கொடிநிலையாகிய வான்சிறப்பும், கந்தழியாகிய நீத்தார் பெருமையும், வள்ளியாகிய அறத்தின் திறமும் உரைப் பனவாகக் கொள்ளவேண்டும் என்பார் உளராலோ எனின்; தொல்காப்பியர் வழியில் புறப்பொருள் வெண்பா மாலை பாடிய ஐயனரிதனரும், தொல்காப்பியத் தொல் லுரையாசிரியராகிய இளம்பூரணரும் மன்னவன் கொடி யின் சிறப்பும், கந்தழியும், வெறியாட்டும் எனப்பொருள் கோடலானும்; அந்நான்கும் வள்ளுவன் கருத்தாயின் கொடிநிலைச்சிறப்பு, கந்தழிப்பெருமை, வள்ளி அறிவுறுத் தல் என அதிகாரமகுடம் சூட்டியிருப்பானகலானும், அவற்கது கருத்தன்றென்க. நவில்தொறும் நூல் நயம் தேரும் சுவைஞர், இங்ஙனம் நுண்மாண் நுழை புலன் கொண்டு நான்கதிகாரங்களையும் தொல்காலபிய நூற் பாவுடன் மாட்டெறிந்து காட்டியது சமற்காரமே யன்றி வாய்மையாகாதென்க.

இனி, வள்ளுவன் சமணனுகலின் அருக சரணம், சித்த சரணம், சாது சரணம், தருமசரணம் என நான்கும் பாயிரமாகக் கூறினன் எனின், வள்ளுவற்குச் சமணம் பெளத்தம் முதலிய எல்லாச் சமயங்களின் நன்னெறிகள் உடன்பாடாகலான் அவனைச் சமணத்திற்கே உரிமை யாக்கல் குற்றம் ஆகலானும்; சமண பெளத்தசமயங்களைப்

பல இடங்களில் சாடிப்பாடும் உரவோன் ஆகலானும்; அவன் கூறும் கடவுள் இலக்கணம் அருகனுக்கே உடைமை ஆகாமையானும்; சித்தர் சரணம் என வான் சிறப்பிற்குப் பெயர் வழங்கல் ஒவ்வாதாகலானும்; இல்லறத்தை இழித்துத் துறவறமே உயர்ந்ததெனக் கூறும் சமணச்சாதுவுடன் தமிழ்நாட்டு அறவோரும் குணம் என்னுங் குன்றேறி நின்று செயற்கரிய செய்து, எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகும் தமிழ் அந்தணரும் ஒருநிகராக எண்ணப் பெருமையானும்; அருக தருமம் வேறு தமிழர் அறம் வேருகலானும்; சமயக்கணக்கர் மதிவழி கூருது உலகியல் கூறிப்பொருள் முடிபு காட்டிய புகழோன் ஆதலானும், சமணச்சார்பில் பாயிர விளக்கம் காண்பது விழுமியது அன்றென மறுக்க. எனவே, தெய்வ வணக்கமும் செயப்படு பொருளுமே நூலாசிரியன் செய்யும் பாயிரத்தில் கூறத்தக்கவை என்பதும் இவ்விரண்டும் திருக்குறள் பாயிரத்தில் உண்மையும் வெள்ளிடை மலையென விளங்கக் காணலாம்.

# பாவேந்தன் பாரதி

**பாட்டின் விடுதலை**

பாடல், பாட்டு, பா, கவி, கவிதை என்பன ஒரு பொருட் பன்மொழி. கவிதை ஒரு கலை. கவிதை (Poetry) வேறு, செய்யுள் (Verse) வேறு. செய்யப் படுவது செய்யுள். செய்யுள் எல்லாம் கவிதை ஆகா. இதோ நிமிர்ந்து நிற்கிறது நீண்ட சுவர். கல்லோடு கல்லை அடுக்கிக்கும்பிரமாகக் கட்டியிருக்கிறுன் கல்தச்சன். இந்தச்சுவரில் அழகு இருக்கிறதா? இல்லை. பார்ப்பதற்கு நீண்டு நிமிர்ந்து செம்மாந்து நிற்கிறது சுவர். ஆனால் அதே கல் சிற்பியின் கையில் கிடைக்கிறது. எத்தனையோ நாட்களாகக் கற்பனை செய்த எண்ணங்களுக்கு வண்ணம் அளித்து வடிவம் தந்து கலைபொருந்திய சிலையாக அமைக் கிறுன். இப்பொழுது அந்தக் கல்லில் செதுக்கப்பெற்ற சிற்பம் சிந்தனையைக் கவர்ந்து சிரிக்கிறது. அதனைக் கல்லாகக் கருதினுல் அதிலே உள்ள அழகிய வடிவத்தை மறந்துவிடுகிறோம். சிற்பத்தின் அழகில் சொக்கிவிட்டால் அது கல் என்பதை மறந்துவிடுகிறோம். எழில் ததும்ப இன்பமளிக்கிறது சிற்பம். பேசும் பொற்சித்திரமே என்று பாடவில்லையா பாரதி! சுவருக்கும் கலைக்கவின் கெழுமிய விழுமிய சிற்பத்துக்கும் உள்ள வேறுபாடுதான் செய்யு ளுக்கும் கவிதைக்கும் இடையே நாம் காணும் வேற்றுமை. கல்லோடு கல்லை அடுக்கும் கல்தச்சனைப்போல் சொல் லோடு சொல்லை அடுக்கும் சொல்தச்சன் எழுப்பிய சொற்கோட்டைதான் செய்யுள். கல்லைக் கலையாக்கிக்

கருத்தைக் கவரவைக்கும் கலைஞனின் சிற்பம். சொல்லைக் கலையாக்கிக் கருத்துக் கருவூலங்களை அழகுணர்ச்சியோடு சொல்லிலே சித்தரிக்கும் புலவனின் சொல்லோவியமே கவிதை. ஒருவன் உள்ளத்து அழகு ஒழுக எழுதிப் பார்த்திருக்கும் உயிர் ஓவியமே என்று பாடவில்லையா குமரகுருபரர்!

எது கவிதை என்ற வினாவிற்கு ஒப்பமுடிந்த இலக்கணம் செப்பமுடியாது. கவிதை ஒரு விடுதலைப்பறவை. கவிதை எது என்று எண்ணிப்பார்க்கலாம்; இதுதான் கவிதை இலக்கணம் என்று வரம்பு கட்டாதே; சிறையில் அடைக்காதே என்கிறார் ஜான் பெயிலி (John Bailey).[1] நிலத்தைக் கிழித்துப் புறப்படும் நீரூற்றுப்போல உள்ளத்தின் ஆழத்திலிருந்து துள்ளிக்குதித்துப் பொங்கிப்பொழியும் உணர்ச்சியின் உருவமே கவிதை. எளிமையும் புலக் கவர்ச்சியும் உணர்ச்சியும் உடையது கவிதை என்பார் மில்டன்.[2] கற்பனையின் வெளிப்பாடு கவிதை என்பார் ஷெல்லி.[3] அமைதியிலே அசைபோடப்பெற்றுத் தங்கு தடையில்லாமல் பொங்கிப் புறப்படும் ஆற்றல்மிக்க உணர்ச்சி ஓடைதான் கவிதை என்பார் வேட்சுவொர்த்.[4]

---

1. Poets and poetry—Page 15
2, Poetry must be simple, sensuous, passionate.
—Milton.
3. Poetry is the expression of the imagination.
—Shelley.
4. Poetry is the spontaneous overflow of powerful feelings, taking its origin from emotion recollected in tranquillity.
—Perface to Lyrical Ballads.

நெஞ்சத்தை மாத்திரம் கவ்வுவது கஞ்சாக் கவிதை. உள்ளத்தையும் கவர்ந்து அறிவையும் ஆட்கொள்ளுவது தான் அமரகவிதை. கவிஞன் வெற்றிக்குச் சொல் பஞ்சமும் கற்பனை வறுமையும் தடைக்கற்களாகும். பாவலன் கொச்சைச் சொற்களில் இச்சை வைக்கக் கூடாது. காதலியின் பெயரை வழிப்போக்கன் சொன்னாலும் உள்ளம் குழைய ஊன் உருக ஆசை தழுவும் காதலனைப்போல் அழகான சொல்வடிவங்களைக் கவிஞன் காதலிக்கிறன் என்பர் பாஸ்பர்மல்லம்.[1] கருத்துத் தான் முக்கியம், சொல் அலங்காரம் தேவை இல்லை என்பர் சிலர் கருத்தும் முக்கியம்; கருத்தினைச் சுமக்கும் கவினார்ந்த சொல்வளமும் தேவையே. பொருள் இல்லாத கவிதை ஏழைக்குச்சமம்; உணர்ச்சி இல்லாத கவிதை கோழைக்குச் சமம்.

காலவெள்ளத்தில் மூழ்கிய கடுஞ் சொற்களைத் தேடிப்பிடித்துப் பாடிமுடிப்பதே பாட்டென்று நாட்டினர் சிலர். முரசபந்தம் நாகபந்தம் பாடிப் பேரிகைகொட்டிப் பிழைத்தனர் பிறர். யமகம், மடக்கு, திரிபு போன்ற சொல் அலங்காரத்தில் கருத்தைப் பறிகொடுத்துச் சொற் சிலம்பம் ஆடிச் செருக்கித் தருக்கித் திரிந்தார் சிலர். சமற்காரம் வேறு. கலை ஆக்கம் வேறு அல்லவா? எளிமைதானே பாட்டிற்குத்தேவை என்று, "நரைத்ததலை வெளுத்திருக்கும் நாய்வால் சுருண்டிருக்கும், சிரைத்ததலை மயிர்முளைக்கும் சென்னிமலை வேலவனே" என்று வெள்ளைக்கவி பாடித் துள்ளிக்குதித்தனர் சிலர். 'பாக்

1. The poet lingers over the beautiful words like a lover over his mistress's name.
—An approach to poetry-page 8.

காவது கழுகு பருப்பாவது துவரை' இது ஒரு எளிமைப் பாடலாம்! இலக்கணம் அறவே தேவை இல்லை என்று ஒருவித ஒழுக்கத்தையும் கடைப்பிடிக்காமல் இருக்கியவரிகளை விசனப்படுமாறு வசனப்பாடல் என்று வாதிக்கின்றனர் சிலர். பாட்டின் அரிச்சுவடி புரியாதவர் எல்லாம் பாவலர் என்று விளம்பரமாகின்றனர். இது வெண்பாவா, கலிப்பாவா, விருத்தப்பாவா என்றால் 'டப்பா' என்கிறார்கள்! கவிதை மலிந்த சரக்காகிவிட்டது; தண்ணீர் மிகுதியாகக் கலந்த பாலாகிவிட்டது. எழுதிய எல்லாம் இலக்கியமா? போலிக்கும் உண்மைக்கும் பொருள் புரியவில்லை. அறுசுவை உணவும் தேவை; கூழும் தேவைதான். அதையாவது ஒழுங்காகச் சமைக்க வேண்டாமா? இந்தச் சூழலில்தான் பாரதி கவிதை சுவைபுதிது, நடைபுதிது, பொருள்புதிது என்ற வாய்மை புலப்படும்.

வரட்சிக்கவி மலிந்த இக்காலத்தில் புரட்சிக்கவியாகப் பொலிகிறான் பாரதி. புதிய கற்பனை, புதிய உவமைகள், புதிய சொல்லாக்கம்தான் மொழியை என்றும் அழகியாய் இளமையுடன் இருக்கச்செய்யும். பாரதிபடைக்கும் புத்தம் புதிய முத்துமுத்தான உவமைகள் எத்தனை எத்தனையோ தமிழ்ச் சொத்தாகத் திகழ்கின்றன. எளிய சொற்கள், இனிய சந்தம், உயர்ந்த கருத்துக்கள், உணர்ச்சி அலை நிறைந்த கவிதை சிறந்து வாழும். உள்ளத்தில் பொங்கும் எண்ணங்களை உணர்ச்சியோடும் ஓசை அழகுடனும் இழைத்துக் குழைத்துப் படிப்பார் நெஞ்சத்தைப் பிடிக்கும் வண்ணம் பாமழைபொழிந்து பாட்டிற்கு வாழ்வு தந்தவன் பாரதி. பாரதி ஒரு எரிமலை, புரட்சிக்கனல், உணர்ச்சி ஊற்று, அறிவுக்கொழுந்து. பாரதியின் கவிதை இருளைத்

துரத்தி விரட்டி நீலக் கடலில் எழும்பும் காலைக் கதிர். மகிழ்ச்சியூட்டும் மாலைமதியம். மணம் கமழும் பூஞ் சோலை. இன்பம் அளிக்கும் எழில்பாவை. துன்பத்தை அடித்துச் செல்லும் புயல். இன்பத்தைப் பிடித்துக் கொணரும் தென்றல். யார் கவிஞன் என்பதற்குப் பாரதி அளிக்கும் பதில்: "கவிதை எழுதுபவன் கவி அன்று; கவிதையே வாழ்க்கையாக உடையோன், வாழ்க்கையே கவிதையாகச் செய்தோன் அவனே கவி." "நமக்குத் தொழில் கவிதை நாட்டிற்கு உழைத்தல், இமைப்பொழுதும் சோராதிருத்தல்" என்பதே அவர் கொள்கை. பொருளை ஈட்டித் தொகுத்துக் கூட்டிக்குவிக்கும் பேராசையும் பாரதிக்கு இல்லை. 'காணி நிலம் வேண்டும்' என்று அமைதி அடைந்தான். அடிப்படைத் தேவைகள் நிறைவேறினால் போதும் என்று எண்ணியவன். அறவிலை வணிகன் ஆயலன் என்பதுபோல் கவிதையை வியாபாரச் சரக்காக மாற்றும் விற்பனை விற்பனன் அல்லன் பாரதி. இழிந்த உணர்ச்சிகளை எரியவைக்கும் தீவட்டியுமல்லன். குப்பைக் கூளங்களை ஒப்பில்லாத மாணிக்கமாக மருளவைக்கும் செப்பிடு வித்தைக்காரனும் அல்லன். அரை வேக்காடாகக் கவிசமைத்து 'அமுது படையல்' செய்யும் அவசர நிலையும் அவனுக்கு இல்லை. உயர்ந்த இலட்சியங்களை உருவாக்கும் சிந்தனைச்சிற்பி. பாரதிக்கு என்று பரந்த உலகு ஒன்று உண்டு. அதனை அவன் பாடல்களில் பார்க்கலாம். அவன் கவிதை உலகில் உலாவ வருவோர் அதனை விட்டு வெளியேறுதல் இயலாது. "...While we read a play of Shakespeare's we are in it. We may be drawn in swiftly or slowly – in most cases it is swiftly–but once we are there we are enclosed" என்று அறிஞர் டோரன் கூறுவது பாரதி

யின் பாடல்களுக்கும் பொருந்தும். பாரதி பாட்டுக்குப் பாதைபோட்டுக் கொடுத்தவன். அந்தப் பாதையில் நூற்றுக்கணக்கான அரும்புக்கவிஞர்கள் தலைநிமிர்ந்து பெருமிதத்துடன் நடந்து செல்கிறார்கள். கவிதை வரலாற்றில் இருபதாம் நூற்றாண்டைப் "பாரதி ஊழி" (Barathi Era) என்று கூறுதல் முற்றிலும் பொருந்தும்.

### நாட்டின் விடுதலை

பாட்டிற்கு விடுதலை தந்த பாரதி நாட்டின் விடுதலைக்குப் போர்முரசு கொட்டினான். தாழ்ந்து கிடந்த மக்களைத் தட்டி எழுப்பினான். சொல்லுக்கு இருக்கும் ஆற்றல் வில்லுக்கும் இல்லை. ஆங்கிலேயர் ஆட்சியிலே வீழ்ச்சியுற்றுக்கிடந்த நம் நாட்டை மீட்சிபெறச்செய்வதற்கு மாட்சியுற்ற கவிதை பாடினான். கோழைகளையும் கோளரிகளாக, வேழங்களாக மாற்றும் ஆற்றல் "தேசிய கீதங்களுக்கு" உண்டு.

அயலானை விரட்டியடிப்பதற்கு முன்னால் நம்மில் நாமே வகுப்புவாதங்கள் புரிவதைப் பாரதி கண்டித்தான். பிறப்பு ஒக்கும் என்ற வள்ளுவன் வாக்கினை நோக்கிப் பாரதி ஏழை என்றும் அடிமை என்றும் எவரும் இல்லை சாதியில்; சரிநிகர் சமானமாக வாழ்வோம் என்று முழக்கினான். சமுதாயத்தின் ஏற்றத் தாழ்வுகளை இடித்துப் பொடித்துச் சமதர்ம வாழ்க்கையை விரும்பிய அறக் கிழவன் பாரதி. எல்லார்க்கும் இன்பம் தேவை. தனி ஒருவர் துன்புறுதல் தவறு. வாழ்ந்தால் எல்லோரும் வாழ்வோம், வீழ்ந்தால் எல்லோரும் வீழ்வோம். எல்லோரும் ஓர் இனம், ஓர் நிறை, இந்நாட்டு மன்னர். இப்படி பாரதி எண்ணுவதற்கு முதலில் வித்திட்டவன்

கம்பன். கருணையின் நிலையமாகிய கார்முகில்வண்ணன் முடிசூடிக்கொண்டபோது மக்கள் எல்லோரும் தத்தம் தலையில் மகுடம் புனைந்ததாக எண்ணி மகிழ்ந்ததாக அமைக்கிறான்.

"வித்தகன் ஒருவன் சென்னிமிலைச்சிய தெனினும் மேன்மை
ஒத்த மூவுலகத்தோர்க்கும் உவகையின் உறுதிஉன்னின்
தத்தம் உச்சியின்மேல் வைத்தது ஒத்தது அத்தயங்கு மௌலி"

பாரதி முடியாட்சியில் மூழ்கிக்களைத்த மக்களுக்குக் குடியாட்சித் தத்துவத்தை ஏற்ற இடத்தில் சாற்றியுள்ளான். பாஞ்சாலி சபதத்தில் அவன் செய்யும் புரட்சியும் புதுமையும் கொஞ்சநஞ்சமல்ல. வீடுவாசல் நிலபுலங்களையும் சொத்துச் சுதந்திரங்களையும் சூதாட்டத்தில் பணயம் வைத்துத் தோற்றுப் போகிறான் தருமன். அஞ்சாதே தொடர்ந்து நடத்து. வெற்றியும் தோல்வியும் யாருக்குச் சொந்தம். வாகைபெற வாய்ப்பு உண்டு என்று தில்லு முல்லுக்காரனாகிய சகுனி சாதுரியமாகப் பேசுகிறான். சூதாடியாகிய தருமன் நாட்டையே பணயம் கூறிக் கோட்டை விடுகிறான். இந்நிலையில் பாரதி குடியாட்சிக் கொள்கையைக் கூறுகிறான்.

"கோயில் பூசைசெய்வோர் – சிலையைக்
கொண்டு விற்றல்போலும்
வாயில்காத்து நிற்போன் – வீட்டை
வைத்திழத்தல் போலும்
ஆயிரங்களான – நீதி
அவை உணர்ந்த தருமன்
தேயம் வைத்திழந்தான்; – சீச்சீ!
சிறியர் செய்கை செய்தான்."

நாம் கட்டியது கோயில். நம் கலைஞர்கள் வடித்தது கடவுள் சிலை. நம் கவிஞர்கள் நெஞ்சம் உருக விழிநீர் பெருகக் குழைந்து பாடியவை அருட்பாடல்கள். இடையில் இறைவனுக்குப் பூசனை செய்யும் தொழிலைச் செய்பவன் அர்ச்சகன். அவன் சிலைகளைக் களவாடி விலை கூற என்ன உரிமை பெற்றிருக்கிறான். அர்ச்சனை செய்வதற்காக வரும்படி பெறுகிறான். அவ்வளவே. வீட்டைக் காக்கிறான் வேலைக்காரன். நாம் கட்டியது வீடு. வீட்டுக்கு உரியவர்கள் நாம். வெளியே சென்றிருக்கும் வேளை பார்த்து வேலைக்காரன் வீட்டை விற்பதற்குக் கிரயம் பேசினால் அது செல்லுபடியாகுமா? முறையா? அதே போல் நாடு மக்களுக்கு உரியது. நாடு மக்களின் சொத்து. நாட்டைக் காக்கும் காவல்காரன் மன்னன். காக்கும் வேலைக்காக ஆண்டுச் சம்பளமாக நிலவரி பெறுகிறான். மக்களைக் கலக்காமல் மக்களின் இசைவில்லாமல் சூதாட்டத்தில் தருமன் நாட்டைப் பணயம்வைத்துத் தோற்றது முறைகேடான செயல். அறிவில்லாத ஒருவன் இதைச்செய்தால் ஒருவேளை மன்னித்துவிடலாம். நீதிநூல்களை எல்லாம் ஓதி உணர்ந்த உத்தமன் ஒருவன் வைத்து இழந்தது பாரதியின் சித்தத்தைக் கலக்கியது. அண்ணன் என்றும் பாராமல் அஞ்சா நெஞ்சுடன் எண்ணியதை எடுத்துரைக்கும் பேச்சுரிமை குடியாட்சியில் கால்கொள்வதையும் பாரதி காட்டுகிறான்.

## பெண்ணின் பெருமை

விடுதலை வேட்கை வெறிகொண்ட வீரன் நாடு முன்னேறவேண்டும் என்றால் வீடு முன்னேறவேண்டும் என்று எண்ணினான். வீட்டு முன்னேற்றம் யாரைப் பொறுத்து இருக்கிறது? தாய்க்குலத்தை அல்லவா?

தாய்மையின் பெருமையைத் தமிழர்கள் நினைத்துப் பார்க்க வேண்டாமா? அறிவும் ஆற்றலும் உருவும் திருவும் ஆண்களுக்கும் பெண்களுக்கும் பொதுச்சொத்து. நில வளத்தைப் பொறுத்துத்தானே பயிர்வளம் அமையும். தாய்க்குலத்தின் தன்மைக்குத்தகவே சேய்க்குலம் அமையும். சூரப்பிள்ளைகள் தாயென்று போற்றுவோம். தொட்டிலை ஆட்டும் கை தொல்உலகை ஆளும் கை அல்லவா? பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும் பாரினில் பெண்கள் நடத்த வந்தோம், எட்டும் அறிவினில் ஆணுக்குப் பெண் இளைப்பில்லை என்று பாமுரசு கொட்டினுன் பாரதி. புதுமைப் பெண்ணின் கற்பனைகளைப் புனைந்து பாடினுன். பாஞ்சாலியை உரிமைக்காக வாதாடும் புதுமைப் பெண்ணுகப் படைத்துப்பார்க்கிருன். "அன்னம் ஊட்டிய தெய்வ மணிக்கையின் ஆணை காட்டில் அனலை விழுங்குவோம்" என்று பாடும்பொழுது எத்தனை வேகம்? எத்தனை உணர்ச்சி! காதல் உலகை உணர்ச்சி குன்ருமல் பாடவல்லவன் பாரதி. காதல் அணுசக்தியைவிட ஆற்றல் வாய்ந்தது. எதையும் சாதிக்கத் துடிப்பது. கம்பன் பாடவில்லையா? "நச்சுடை வடிக்கண்மலர் நங்கை இவள் என்ருல், இச்சிலை கிடக்க; மலை ஏழையும் இருனே!" காதலியின் ஆணைக்குக் காளை தவம் கிடக்கிருன். கம்பனுக்குத் தம்பி அல்லவா பாரதி! சிலவேளை அண்ணனுகவும் ஆகிருன்! "நூற்றிரண்டு மலைகளைச் சாடுவோம் நுண்ணிடைப் பெண் ஒருத்தி பணியிலே" "காற்றிலேறியவ் விண்ணையும் சாடுவோம் காதற்பெண்கள் கடைக்கண் பணியிலே." பெண்மை மென்மைத் தன்மையும் நாணமும் சேர்ந்தது. காதல் சாகசங்களை எவ்வளவு நாகரிகமாகப் பாடுகிருன். "கன்னத்தே முத்தம்கொண்டு களிப்பினும், கையைத்தள்ளும் பொற்

கைகளைப் பாடுவோம்." எவ்வளவு சுவை சுரக்கும் கவிதை!

பாரதி பெண்ணின் பெருமையைப் பேசாத இடம் இல்லை. தான் வணங்கிய தெய்வத்தையே அன்னையாகப் பராசக்தியாகப் போற்றியுள்ளான். இதற்காகப் பாரதி பெண்களுக்குப் பூசை செய்யவேண்டும் என்று ஆசைப் படவில்லை. 'பெண்ணிற் பெருந்தக்க யாவுள' எனப்பாடிய வாயால் "பெண்வழிச்சேறல்" என்று அறிவு கொளுத்திய வள்ளுவனின் வாரிசு அல்லவா பாரதி? சுயசரிதையிலும் குயில்பாட்டிலும் பெண்ணின் குறைபாடுகளை எல்லாம் சாடிப்பாடியுள்ளான்.

"வஞ்சனையே பெண்மையே ......"

"பெண்ணால் அறிவிழக்கும் பித்தர் எல்லாம் கேண்மினோ"

எனப்பாடும் பகுதியைக் கருத்தூன்றிப் பார்க்க. என்றாலும் அஞ்சிக் குலையும் நிலைமாறித் திண்மை பெற்ற பெண்மைதான் நாட்டுக்குத்தேவை என்பதை, 'நாணமும் அச்சமும் நாய்கட்கு வேண்டுமாம்', 'நிமிர்ந்த நன்னடை நேர்கொண்ட பார்வையும், நிலத்தில் யார்க்கும் அஞ்சாத நெறிகளும் திமிர்ந்த ஞானச் செருக்கும் இருப்பதால் செம்மைமாதர் திறம்புவதில்லையாம்' என்று வற்புறுத்துகிறான்.

### சமயத்துறையில்

பாரதியின் ஞானப்பாடல்களும், நீதிப்பாடல்களும் கீழ்க்கணக்கில் உள்ள அறநூல்களுக்கும் ஔவையார், குமரகுருபரர், சிவப்பிரகாசர், சித்தர்கள் பாடல்களுக்கும் சளைத்தவையல்ல. உலகிற்கு முதல்வன் உளன். அவ

னேப் பலரும் பலபெயரால் பரவுகின்றனர். எம் இறையே பெரியர் என்று வாரம்பற்றி வாதம்புரியும் வழக்கத்தைக் கம்பன் கண்டிக்கவில்லையா? "அரனதிகன் உலகளந்த அரியதிகன் என்றுரைக்கும் அறிவிலார்க்குப் பரகதி சென்றடைவரிய பரிசேபோல்" என்றும் "தொல்லையில் ஒன்றேயாகித் துறைதொறும் பரந்த சூழ்ச்சிப் பல்பெருஞ் சமயம் சொல்லும் பொருளும் போல் பரந்ததன்றே" என்றும் வருவன காண்க. சமயப் பொது அறத்தை வள்ளுவன், இளங்கோ, கம்பன் வழிநின்று கண்டவன் பாரதி. சமரச நோக்கு பாரதியின் போக்கு. ஆன்மீக ஒருமைதான் அனைத்து உலகையும் ஒன்ருகப்பிணைக்கும் கயிறு. அல்லா, ஜெஹோவா, ஏசு, புத்தன், சக்தி, முருகன், கண்ணன் எல்லாப் பெயர்களையும் விநாயகர் நான்மணிமாலையில் வாழ்த்தும் விரிந்த நெஞ்சத்தின் விளக்கத்தை என் என்பது! முருகனை உருகிப்பாடும் இடமும் உண்டு.

தெய்வம் எங்கேயோ இருப்பதாக எண்ண வேண்டாம். இங்கே நாம் காணும் கண்கண்ட தாய்தந்தையாகவும், கொழுந்துச் சுடராகிய குழந்தையாகவும், ஆசிரியர் மாணவராகவும், தோழன் தோழியாகவும், கணவன் மனைவியாகவும், பணியாள் பணக்காரனுயும் இறைவன் எங்கும் இலங்கும் எழிலைத் தேனூறும் தீந்தமிழில் கண்ணன் பாட்டாகத் தீட்டிக்காட்டியுள்ளான். என்ருலும் அவன் ஆன்மதெய்வம் பராசக்தி. எல்லாம் தாய் மயமாகக் காண்கிருன். எல்லோரும் கோயிலுக்குச் செல்கிருர்கள். தெய்வ வழிபாட்டிற்காகவே சிலர் செல்வர். எல்லையில்லாத தொல்லைதள்ளினுல் கோயிலில் விழுவார் சிலர். தேர்வு நெருங்கினுல் தெய்வத்தைத் தேடுவாரும் உளர். கோயில் அழகுபழகும் இடம் அல்லவா? எனவே

வேறுசிலர் வேறு காரணங்களுக்காகவும் செல்வர். பாரதியும் கோயிலுக்குள் நுழைகிறுன். கீழே படிக்கல் பரவப் பட்டுள்ளது. அதை உற்றுப்பார்க்கிறுன் பாரதி. அதை எல்லோரும் மிதித்துச்செல்கிருர்கள். அந்தக்கல் மிதிக்கப் படுகிறது. உள்ளே சென்ருல் கலைபொருந்திய சிலையாக நிற்கும் கல்லைத் துதிக்கிருர்கள்; மதிக்கிருர்கள். இரண்டு கற்களும் ஒரே மலையில் பிறந்தவை. அவற்றில் ஒன்றைப் படிக்கல்லாகவும் பிறிதொன்றைக் கடவுட் சிலையாகவும் பாகுபடுத்திக் காண்கின்ருன் சிற்பி. 'ஆங்கொரு கல்லை வாயிலில் படியென்று **அமைத்தனன்**' என்றும் மற்ருெரு கல்லை 'ஓங்கிய பெருமைக் கடவுளின் வடிவென்று **உயர்த்தினன்**' சிற்பி என்றும் பாடுங்கால் அமைத்தனன் ஒன்றை; ஒன்றை உயர்த்தினன் எனச் சொல்லும் நயம் சுவைபயப்பதாம். எல்லாமக்களும் இரண்டு கால், கை, விழிபோன்ற உறுப்புச் சிறப்புக்களுடன் ஒரேமாதிரியாகத்தான் பிறக்கிருர்கள்.[1] சிலர் வாழ்வில் படிக்கல்லைப் போல மிதிக்கப்படுகிருர்கள்; தாழ்த்தப்படுகிருர்கள். சிலர் கடவுள் சிலையைப்போல மதிக்கப்படுகிருர்கள்; வாழ்த்தப் படுகிருர்கள். இந்த அரிய படைப்பின் விந்தையினை அறிந்த பாரதி தாயை நோக்கிக் கேட்கிருன். சக்தியை 'உலகினேர் தாய் நீ' என்று விளிக்கிருன். சேய், நோய் வாய்ப்படினும் தாய் மருந்து அருந்தும் அன்புடையவள். பெற்ற பிள்ளை பிழைபுரியினும் மன்னித்து அருளும் மன நிலை தாய்க்கு உண்டு. எனவே கடவுளைத் தாயாகக் கண்டனர் நம்மவர். ஆயின், தாயினும் சிறந்த தன்மை

---

1. பரமனின் கோயிலில் படிக்கல்லாகவாவது பயன்பெற வேண்டும் என்று தவம் கிடக்கும் குலசேகர ஆழ்வார் தொண்டு நெறிக்கு விளக்கம் தருகிருர். "படியாய்க் கிடந் துன்பவளவாய் காண்பேனே" என்கிருர்.

பராசக்திக்கு உண்டு. என்னை ஈன்ற தாய் எனக்கு மாத்திரம்தான் தாய்; வேண்டுமானால் இன்னும் நான்கு ஐந்து பேருக்குத் தாய் ஆகலாம். என் தாய் இந்தப் பிறப்பிற்குத்தான் தாய். என் தாய் தனக்கு ஒரு தாயைத் தேடிச் செல்பவள். ஆனால், அன்னை பராசக்தியோ ஓர் அறிவு உயிர் முதல் ஆறறிவு படைத்த மக்களினம் வரை எல்லாவற்றிற்கும் எல்லாப் பிறப்பிற்கும் தாயாக அருள் சுரந்து காப்பவள் என்று அமைக்கிறான். இத்தொடரை 'உலகினோர் தாய்' எனப் பிரித்துப் படிப்பது பிழை; உயர்திணையை மாத்திரமே குறிக்கும். **உலகின் ஓர்தாய்** என்றுதான் படிக்கவேண்டும். உலகு ஆகுபெயரால் எல்லா உயிர்களையும் உணர்த்தும்; அத்துடன் உலகிற்கு ஒரு தாய் என்ற் சிறப்பும் பெறப்படும். படைப்பிற்குக் காரணம் பராசக்தி என்றறிந்த பாரதி புகலடைந்த தன்னை இருங்கலைப் புலவனாய் இலங்கச்செய்யவேண்டும் என்று விண்ணப்பிக்கிறான்:

"ஆங்கொரு கல்லை வாயிலிற் படிஎன்று
அமைத்தனன் சிற்பி மற்றொன்றை
ஓங்கிய பெருமைக் கடவுளின் வடிவென்
றுயர்த்தினன்; உலகின் ஓர்தாய் நீ!
யாங்கணே எவரை எங்ஙனம் சமைத்தற்
கெண்ணமோ, அங்ஙனம் சமைப்பாய்
ஈங்குனைச்சரண் என்றெய்தினேன்; என்னை
இருங்கலைப் புலவனாக்குதியே".

பாரதி தாயிடம் உரிமை பாராட்டி வரங்களைப் பெற்று வையத்தை வாழ்விக்க விரும்பினான். பாட்டுத் திறத்தால் வையத்தைப் பாலிக்க விழைந்தான்.

### மொழிப்பற்றும் நாட்டுப்பற்றும்

மொழியும் நாடும் இணைவிழிக்கு நிகர்வன. வானினும் உயர்ந்தவை. "செந்தமிழ் நாடென்னும் போதினிலே இன்பத் தேன்வந்து பாயுது காதினிலே." புதுமைக் கவி பாடிய பாரதி பழமைக்குப் பகைவன் அல்லன். அஞ்சுவது யாதொன்றும் இல்லை அஞ்ச வருவதும் இல்லை, நாமார்க்கும் குடியல்லோம் என்று முழக்கிய பாவுக்கரசனாகிய நாவுக்கரசனின் குரல் 'உச்சிமீது வானிடிந்து வீழுகின்ற போதிலும் அச்சமில்லை அச்சமில்லை அச்சம் என்பதில்லையே,' 'பாரினில் எவர்க்கும் இனி அடிமை செய்யோம், பரிபூரணனுக்கே அடிமை செய்து வாழ்வோம்' என்ற பாடல்களில் கணீர் என்று கேட்கிறது. 'பெயக்கண்டு நஞ்சுண்டமைவார்' 'முந்தையிருந்து நட்டோர் கொடுப்பின் நஞ்சும் உண்பர் நனிநாகரிகர்' என்ற தொன்னூல் கருத்து, 'நச்சை வாயிலே கொணர்ந்து நண்பர் ஊட்டு போதினும் அச்சமில்லை அச்சம் இல்லை அச்சம் என்பதில்லையே' என்ற பாட்டில் எதிர் ஒலித்தல் கேட்கவில்லையா?

பலமொழிகளில் உள்ள பனுவல்கள் பலவும் ஆய்ந்து தோய்ந்து சுவைத்தவன் பாரதி. 'யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல் வள்ளுவர்போல் இளங்கோவைப்போல் பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை' என்று அறுதியிட்டு உறுதியாகக் கூறுகிறான். தமிழ் இலக்கியச் சோலையில் கோடிக்கணக்கான பாக்களாகிய பூக்கள் மலர்ந்திருந்தாலும் பாரதியாகிய வண்டு மூன்று பூக்களில் அழகைக்கண்டு தேனை உண்டு மதுரகீதம் பாடிமகிழும் மர்மம்தான் என்னே? வள்ளுவன் பாண்டி நாட்டுப் பாவலன். மதுரையிலே பொதுமறை அருளிய புலவன்.

இளங்கோ சேரநாடு தந்த செம்மல். கம்பன் பிறந்தான் காவிரிக்கரையிலே. மூன்று நாட்டுக்கும் மூன்று மணி களைப் பொறுக்கிப் பார்க்கிருன் பாரதி. இன்னும் ஒரு சிறப்பு. வள்ளுவன் குறள் இயல்தமிழ். இளங்கோவின் சிலம்பு முத்தமிழ்க்காப்பியமாயினும் சிறந்து விளங்குதல் நாடகப்பண்பு. நாடகக் காப்பியம் என்று வழங்க வில்லையா? கம்பன் தொண்ணூற்ருறு வண்ணங்களும் பொருந்தச் சந்தநயம் மிளிர இசையருவியாகக் கவிவெள் ளம் பெருக்கியவன். எனவே, முத்தமிழுக்கும் வேந்த ராகத் திகழும் மூவரைப் பாராட்டியதில் வியப்பில்லை. இன்னும் ஒரு சிந்தனை. வள்ளுவன் மன்னனையோ வள்ளலையோ நாடிப் பாடிப் பொருள்பெற்று வாழவில்லை. சொந்த முயற்சியால் வாழ்ந்து சிந்தைக்கினிய மறையை அருளினுன். ஆவிற்கு நீரென்றிரப்பினும் நாவிற்கு இர வின் இளிவந்ததில் என்று பாடிய விடுதலைப் பறவை. இளங்கோ பிறப்பினுல் அரசகுலம். அவரும் பொருளுக் காக யாரையும் பாடவேண்டிய தேவையில்லை. மக்களின் கதையை மதித்துப் பாடிய மாண்பினர். இளமையில் அரசியல் விடுதலை பெற்றவர். 'மன்னவனும் நீயோ? வளநாடும் நின்னதோ? உன்னை அறிந்தோ தமிழை ஓதினேன்?,' என்று வேந்தனை விளித்து அஞ்சா நெஞ் சுடன் வீரமுழக்கம் செய்யும் தீரன் கம்பன். எனவே உரிமை நெஞ்சம் படைத்த மூவரையும் விடுதலை வேட்கை வெறிகொண்ட வீரன் பாராட்டிப்பாடியதில் எத்துணைப் பொருத்தம் இருக்கிறது! எண்ணி மகிழுங்கள்.

ஒரு மொழியிலும் உறுதியான புலமை இல்லாமல் பலமொழிகளையும் படித்துவிட்டதாக மனப்பால் குடிக்கும் மாசு பாரதியிடம் இல்லை. அவனுக்குத் தெரிந்த ஆங்கி

லம், பிரெஞ்சு, வடமொழி, தெலுங்கு, மலையாளம் முதலிய மொழிகளைவிடத் தமிழ் தலையாயது, இனிமையானது என்ற உண்மையை,

"யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்
இனிதாவது எங்கும் காணோம்"

என்று இயம்பினன். ஒருசிலர் பாரதியின் தமிழ்ப்பற்றில் ஐயம்கொண்டு கலாம் விளைத்தனர். 'ஆரிய நாட்டினர் ஆண்மையோடு இயற்றும் சீரிய முயற்சிகள் சிறந்து மிக்கோங்குக' என்று ஒரு குறிப்பிட்ட இனத்தாரைப் பாராட்டியதாகப் புகார்செய்கிறார்கள். அவனை இழித்தும் பழித்தும் பேசத்துணிகிறார்கள். இதனால் விரைவுமனமும் வெள்ளை அறிவும் வெளிப்படுதலன்றிப் பெரும் பாவலனை இகழ்ந்த பாவத்திற்கும் ஆளாகிறார்கள். 'பார்ப்பாரை ஐயர் என்ற காலமும் போச்சே' 'சூத்திரனுக்கு ஒரு நீதி, தண்டச்சோறுண்ணும் பார்ப்புக்கு வேறொரு நீதி, சாத்திரம் சொல்லிடுமாயின், அது சாத்திரமன்று சதியென்று கண்டோம்' எனப்பாடும் பாரதி இந்தச் சொல்லை எந்தப் பொருளில் பயன்படுத்தினன் என்று பார்க்கவேண்டாமா? குயில் பாட்டில் குரங்கையும் மாட்டையும் கூடக் குயில் 'ஆரியரே' என்று கூறுவதாகப்பாடவில்லையா? பச்சைத் தமிழராகிய திரிகூடராசப்பக் கவிராயர் திருக்குற்றாலப் பகுதியைச் 'சீரிய ஆரிய நாடெங்கள் நாடே' என்று பாடவில்லையா? கம்பன் இராமனை ஆரியன் என்று குறிக்கும் இடங்கள் மிகப்பல. 'அற்றதால் முகத்தினில் விழித்தல் ஆரிய' என்று இராவணனைக் குறிக்கவில்லையா? குலோத்துங்கசோழன் பிள்ளைத்தமிழில் ஒட்டக்கூத்தர், "ஆரியன் ராசராசாரியன் இவனுடன் அம்புலிஆடவாவே"

என்று இரண்டாம் குலோத்துங்கனை இசைக்கவில்லையா? தென்னாடுடைய சிவன் என்றும் தென்பாண்டிநாட்டான் என்றும் பாடிய மாணிக்கவாசகர் 'பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியன்' என்று பாடும்போது அச்சொல்லுக்குப் பொருள் யாது? 'ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்' என்று அப்பர் செப்பிய திறம் யாது? மன்னர் குலத்தில் பிறந்த புத்தனை மணிமேகலைச் சாத்தன் ஆரியன் என்று கூறுதல் நேரிதா? 'ஆரியன் அமைதி அமைவுறக்கேட்டு' என்பது மணிமேகலை.

ஆரியன் என்ற சொல் இரண்டு வடிவங்களை உடையது. ஆர்ய என்ற வடசொல்லின் தற்பவமாகப் பயிலும்பொழுது ' 'ஆரியர்' என்ற சொல் அயலாரைக் குறிக்கும். நிழல்–நீழல் என முதல் நீண்டதுபோல் அரியன் ஆரியன் என்றாகும். "ஈறு போதல் ..ஆதிநீடல்" என்ற இலக்கணத்தால் அருமை + அன் = ஆரியன் ஆகும் என்று விளக்குதலும் ஒன்று. எனவே, இது பச்சைத் தமிழ்ச் சொல். மேற்காட்டிய இடங்களில் எல்லாம் அருமை பெருமையை உணர்த்தும் தமிழ்ச் சொல்லாகவே அது கொள்ளத்தக்கது. எனவே 'ஆரிய நாட்டினர்' என்ற இடத்தில் பாரதி ஒரு குறிப்பிட்ட இனத்தைத் தனித்து வாழ்த்தவில்லை என்பது தெளிவு.

பாரதி தமிழ்த்தேரை நடத்தும் சாரதி. பாவேந்தன் புகழ் வாழ்க. வாழிய செந்தமிழ்!

# நக்கீரர்

கடந்த நூற்றாண்டின் முக்காற் பகுதிகாறும் நக்கீரர் நாவீறு படைத்த பாவலருள் ஒருவராகவே கருதப்பட்டார். நாட்டார் ஐயா அவர்கள் நக்கீரரைப் பற்றி ஆய்ந்தறிந்து தமது விழுமிய கருத்தைக் கி. பி. 1919-இல் நூல் வடிவில் காட்டினார்கள். அஞ்ஞான்றே நக்கீரர் இருவராதல் வேண்டும் என்னும் கருத்து நிலவியது. அவ்விருவரையும் ஒருவராக்கிக் காட்ட நாட்டார் ஐயா அவர்கள் முயன்றார்கள். பின் முற்றக் கற்றார் முதலாகக் கற்றுச் சொல்லிகள் ஈறாகத் தாம் தாம் கண்ட கருத்தே தக்கதெனப் பன்னாட்கள் போந்தன. காலம் கறங்கெனச் சுழறலும் கருத்து சகடெனத் திறம்புதலும் கண்கூடு. கி. பி. 1940-இல் பேராசிரியர் டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியார் அவர்கள் நக்கீரர் இருவராவர் என்னுங் கோட்பாட்டைச் சொல்மரபுகள் சிலவற்றின் துணை கொண்டு நிறுவினர். கி. பி. 1943-இல் பேராசிரியர் ச. வையாபுரிப் பிள்ளை அவர்கள் நக்கீரர் நால்வராவர் என்னுங் கருத்தை வெளியிட்டனர். கி. பி. 1952-இல் பேராசிரியர் பிள்ளை அவர்களே நக்கீரர் நால்வரல்லர் மூவரே என்று மொழிந்தனர்; ஒருவர் மறைவிற்கு ஒரு காரணமும் கூறிற்றிலர்.

இக் கட்டுரையின் நோக்கம்: நெடுநல்வாடை எழுதிய நக்கீரரும் திருமுருகாற்றுப்படை எழுதிய நக்கீரரும் ஒருவரா என்பதைக் காண்பதாம். இவ்விரு நூல்களையும் இருவேறு நக்கீரர்கள் எழுதினார்கள் என்னும் திரு.

வையாபுரிப் பிள்ளை அவர்கள் கட்டுரையின் வன்மை மென்மைகளை நோக்குமுகத்தான் எனது உள்ளக் கிடக்கையை உணர்த்தற்குத் துணிகின்றேன்.

நக்கீரர் யாத்தனவாகக் கிடைப்பன: குறுந்தொகை யில் எட்டுப் பாக்களும், நற்றிணையில் ஏழும், அகநானூற் றில் பதினேழும், புறநானூற்றில் மூன்றும், பத்துப் பாட்டில் இரண்டும், களவியல் உரையும், அடிநூலும், நக்கீரர் நாலடி நானூற்று வண்ணமும், 11-ஆம் திருமுறையில் ஒன்பது நூல்களும் பிறவும் ஆம். இவற்றை ஆய்ந்த பிள்ளை அவர்கள் நக்கீரரைப் பற்றித் தம் முடிபைக் கீழ்க் காணுமாறு காட்டுகின்றார்.

| நக்கீரர் | காலம் | நூல்கள் | சமயம் |
|---|---|---|---|
| 1. சங்ககால நக்கீரர் | கி. பி. 250 | நெடுநல்வாடை, தொகைநூல் பாக்கள் | ? |
| 2. முருகுநக்கீரர் | கி. பி. 450 | திருமுருகாற்றுப் படை | சைவம் |
| 3. இலக்கண நக்கீரர் | கி. பி. 650 | அடிநூல், களவி யல் உரை, நாலடி நானூறு | சமணம் |
| 4. திருமுறை நக்கீரர் | கி. பி. 850 | 11-ஆம் திரு முறையில் சில நூல்கள் | சைவம் |

திரு. பிள்ளை அவர்களின் ஆராய்ச்சி உலகத்தில் ஏற்றத் தாழ்வின்றி இருநூறு ஆண்டுகட்கு ஒருமுறையாக நக்கீரர் நால்வரும் பிறக்கின்றனர்! சங்க நக்கீரர் கி. பி. 3-ஆம் நூற்றாண்டினர் என்னற்கு அவர்கள் கூறும் விளக்கம் இதுவாம்:

## நக்கீரர் I (கி. பி. 250)

"மேற்காட்டிய அடிகளிலே (நெடுநல் 73-8, 114, 159-63) மனை அமைப்பிற்கு உரிய வடமொழிப் பெயர்க் குறிப்புக்கள் வந்துள்ளன. மேஷ ராசியில் இருந்து தொடங்கிப் பன்னிரு ராசிகளிலும் சூரியன் செல்கின்றமை குறிக்கப்பட்டிருக்கின்றது. உரோகிணி நட்சத்திரம் கூறப் பட்டுள்ளது. கிரேக்கர்களிடமிருந்து ராசியைப் பற்றிய அறிவு சுமார் கி பி. 200-இல் தமிழ்நாட்டில் புகுந்திருக் கலாம் என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். இதற் கேற்ப, யவனரும் நக்கீரரால் குறிப்பிடப்படுகின்றனர். எனவே, சுமார் கி. பி. 250-இல் நக்கீரரால் நெடுநல் வாடை இயற்றப்பட்டிருக்கலாம். கபிலர், பாரி, கரிகாலன் முதலியோர்கள் எல்லாம் இந்நக்கீரருக்கு ஒரு நூற்றாண் டிற்கு முற்பட்டவராகலாம். மதுரைக் கணக்காயனர் மக னார் இவராக இருக்கலாம். சங்ககாலப் புலவர் இவரே யாதல் வேண்டும்."

இனி, நெடுநல்வாடையில் மனையமைப்பிற்குரிய வட மொழிப் பெயர்க் குறிப்புக்கள் வந்துள்ளனவாகக் கூறுத லான், தமிழர்கள் இராசியைப் பற்றிய அறிவை வடவர் களிடமிருந்து பெற்றனர் என்ற இயம்பியிருப்பின் ஓரள வேனும் ஒவ்வலாம். ஆயின் "கிரேக்கர்களிடமிருந்து இராசியைப் பற்றிய அறிவு சுமார் கி. பி. 200-இல் தமிழ் நாட்டில் புகுந்திருக்கலாம் என்று ஆராய்ச்சியாளர் கருது கின்றனர்" என்னும் ஐயம் நிறைந்த ஆய்வாளர் தம் கருத்தைக்கொண்டு ஒரு முடிபிற்கு வருதல் உகந்ததா? யவனரிடம் தமிழர் கோள்நிலைப் புலமை எய்தினர் என்னற்கு ஏற்ற சான்றுகள் சாற்றி வலியுறுக்காமல்,

''வடமொழிக் குறிப்புக்கள் வந்துள்ளன'' என்னும் வேண்டாக்கூறல் கடம்பூருக்குச் செல்ல வழிகடாயினுர்க்கு இடம்பூண்ட மேதி எழில்கடா ஈன்றதென்னுமாற்றை ஒக்கும். இனி, உரோகிணியைக் குறிக்கும் ''சகடு'' என்னும் தமிழ்ச்சொல் அகநானூறு 136-ஆம் பாவில் வருதல் அறிதல்வேண்டும். யவனர் நெடுநல்வாடையில் குறிப்பிடப்பெறுதலான், கோள்நிலை அறிவு அவரிடமிருந்து தமிழர் கற்றுக்கொண்டனர் என்னும் குறிப்புத் தோன்றப் பிள்ளை அவர்கள் எழுதுகின்றனர். இவர் தம் கருத்துப் படியே, கி. பி. 2-ஆம் நூற்ருண்டில் தோன்றிய பெரும் பாணுற்றுப் படையில்,

"யவனர் ஓதிம விளக்கின் உயர்மிசைக் கொண்ட" (316-7)
"மெய்ப்பை புக்க வெருவருந் தோற்றத்து
வலிபுணர் யாக்கை வன்கண் யவனர்"
(முல்லைப்பாட்டு 60-61)
"யவனர் தந்த வினைமாண் நன்கலம்" (அகம் 149)

என்று யவனர் குறிப்பிடப்பெறுகின்றனர். தமிழர்கள் யவனர் நாட்டிற் செய்த பண்டங்களையே கொண்டனர் என்னும் செய்தியன்றி, அவரிடம் கோள்நூல் புலமை கொண்ட திறத்தைச் சங்கப்பனுவல்கள் சாற்றுவனவல்ல.

இனி, பிள்ளை அவர்கள் கூற்றுப்படியே இராசி பற்றிய அறிவைக் கி. பி. 200-இல் தமிழர்கள் அறிந்தனர் என்றே கொள்வோம்.[1] ஆயின், அவர் கொள்கைப் படியே, கி. பி. 150-இல் வாழ்ந்த கபிலர்,

"மைம்மீன் புகையினும் தூமம் தோன்றினும்
தென்றிசை மருங்கின் வெள்ளி ஓடினும்
வயலகம் நிறைய." (புறம்: 117)

---

1. இந்நூல் பக்கம் 52-இல் வரி 11-12 காண்க.

என்று பாடிய புறப்பாவில் கோள்நிலைக் குறிப்புக்கள் இருத்தலை எண்ணுங்கால் கி. பி. 200-இல் கோள்நிலைப் புலமையினை யவனரிடம் தமிழர் கற்றுக்கொண்டனர் என்னுங் கருத்துப் பொருத்தமற்றதெனப் புலனாகும். கபிலர் காலத்தவராகிய ஆவூர் மூலங்கிழார்,

"ஆடியல் அழற்குட்டத்து
ஆரிருள் அரையிரவில்
முடப்பனையத்து வேர்முதலாக்
கடைக்குளத்துக் கயங்காயப்
பங்குனியுயர் அழுவத்துத்
தலைநாண்மீன் நிலைதெரிய
நிலைநாண்மீன் துறைபடிய .....
ஒருமீன் விழுந்தன்றால் விசும்பினானே."

(புறம்: 229)

எனப் புறநானூற்றில் புகன்றிருப்பதைப் பொறுமையாகப் பயின்று பார்த்தால் தமிழர் இராசிகளைப்பற்றியும், கோள் நிலைபற்றியும் கி. பி. 200-க்கு முன்னரே தெரிந்திருந்தனர் என்பது புலனாகும். இங்குக்காட்டிய பகுதிகளில் ஆடு, அழற்குட்டம், முடப்பனை, குளம், நாண்மீன், மைம்மீன், வெள்ளி முதலிய சொற்கள் வானியல் தொடர்புடைய தனித்தமிழ்ச் சொற்கள் என்பது அவர்களுக்கே தெரியும்! கோள்மீன்களும், நாள்மீன்களும் மழை பொழிதற்குரிய மனைகளில் உலாவ, சையமலையில் புயலுருக்க வையையாறு நீர்மல்கி ஓடியதெனப் பரிபாடலில் மதுரையாசிரியர் நல்லந்துவனார் நவின்றுள்ளார். அறிவியல் அறிஞர்கள் தாம்கண்ட புதுப்பொருட்குத் தம்பெயர் சூட்டுதல் இக்காலமரபு. பரிபாடலில் "பொதியில் முனிவன்" என்றொரு மீனைப் புலவர் புகல்கின்றார்; இதனை அகத்திய மீன் என்று அறிஞர் அழைப்பர். இம்மீன்பற்றிய நிலை

யைத் தெளிவாக ஆய்ந்தவர் அகத்தியனுர் ஆதல்கூடும். கார்த்திகையினைப் பண்டைத் தமிழர் 'ஆறல்' (ஆரல்) எனக்குறித்த நுட்பம் நோக்கத்தக்கது.[1] ஆறு மீன்களின் குழுவையே வானநூலினர் "The Constellation of Pleiades" என்பர். வடமொழியில் கார்த்திகை என்ற சொல்லிற்கு ஆறுமீன் எனப்பொருள் இல்லை. 'கார்த்திகை அறுமீன் ஏற்றிய தீபம்' என்பர் தமிழர். பதிற்றுப் பத்து, பட்டினப்பாலை, அகநானூறு, புறநானூறு, மதுரைக் காஞ்சி, பெரும்பாணுற்றுப்படை, நற்றிணை முதலிய சங்கத்துச் சான்ரோர் பனுவல்களில் கோள்நிலைபற்றிய குறிப்புக்கள் பொறிக்கப்பெற்றிருத்தலைக் கூர்ந்தெண்ணுங் கால், பண்டைத்தமிழர்க்கும் வானநூற் புலமையில் பங்கு உண்டு என்னும் உண்மை உறுதியாகும். எனவே, கி. பி. 200-இல், யவனரிடம் தமிழர் கோள்நிலைப் புலமை கொண்டனர் என்று கூறுதல் நேரிதாகத் தோன்றவில்லை. எனவே முதல் நக்கீரர் காலம் கி. பி. 250-எனல் பொருந்தாமை போதரும்.

## நக்கீரர் II (கி. பி. 450)

இனி, பத்துப்பாட்டுள் ஒன்ருகிய திருமுருகாற்றுப் படையைத் திருவாய்மலர்ந்த நக்கீரர் சங்ககால நக்கீரர் அல்லர் என்றும்; அவர் கி. பி. 5-ஆம் நூற்ருண்டினர் என்றும் பிள்ளை அவர்கள் சொல்லுதற்கு உரிய காரணங்கள் இவையாம் :-

1. திருமுருகாற்றுப்படை தொல்காப்பியத்திற்குப் பொருந்துமாறில்லை.

---

1. கறுப்பு—கருப்பு, ஒன்று—ஒரு, நிறை—நிரை என்ருதல் போல் ஆறல்—ஆரல் என்று வழங்கும்.

2. மாரைக்கிளவி தொல்காப்பியத்திற்குப் பொருந்திச் சங்க இலக்கியங்களுட் பயின்றுவருதல் போலாது திருமுருகாற்றுப்படையில் ஓரோவோரிடத்துப் பொருந்தாப் பயிற்சி காணப்படுதல்.

3. ஓரோவோரிடத்தில் "பெறீஇயர்" என்னும் சொல் எச்சமாயாதல், வியங்கோளாயாதல் வாராமை.

4. 'மதி' இடைச்சொல் ஓரோவோரிடத்தில் படர்க்கையில் வருதல்.

5. தொகைநூல் பாக்களைப் பாடிய நக்கீரர் உலகமும் திருமுருகாற்றுப்படை பாடிய நக்கீரர் உலகமும் வேறுபடுதல்.

6. புராணச் செய்திகள் திருமுருகாற்றுப்படையில் காணப்பெறுதல்.

இவர்கள் கூறும் காரணங்களை முதலில் ஏற்றுக் கொள்வோம். இவர்தம் கொள்கைப்படியே கி. பி. 2-ஆம் நூற்றுண்டில் எழுந்த சங்கப்பாக்கள் தொல்காப்பியத்திற்குப் பொருந்துகின்றன என்று புகல்வதால், சங்கப் பாக்களுக்கு முற்பட்டே தொல்காப்பியம் யாக்கப்பெற்ற உண்மை உணரலாம். என்றுலும், தம் "தமிழ்ச்சுடர் மணிகள்" என்ற நூலில் தொல்காப்பியர் கி. பி. 5-ஆம் நூற்றுண்டினர் என்று கூறுதல் ஏற்றதாகத் தோற்றவில்லை.

இனி, திருமுருகாற்றுப்படை கி. பி. 5-ஆம் நூற்றுண்டில் எழுந்த நூல் என்னதற்கு இவர்கள் காட்டும் காரணங்களின் வலிவு மெலிவுகளை ஆராய்வோம்.

## திருமுருகாற்றுப்படை
## தொல்காப்பியத்திற்குப் பொருந்தாமை

திருமுருகாற்றுப்படை தொல்காப்பியத்திற் கூறப் பெறும் ஆற்றுப்படை இலக்கணத்திற்குப் பொருந்துமாற்றை நச்சினார்க்கினியர் காட்டியுள்ளார். இவ்வுரையாசிரியர் தாம் கொண்ட மாட்டிலக்கணப்படி சூத்திரங்களைக் கூட்டிக் கொணர்ந்து கூறும் விளக்கம் விழுமியது அன்றெனப் பிள்ளையவர்கள் வெறுக்கின்றனர். இவர்கள் கொள்கைப்படியே தொல்காப்பியர் கூறும் ஆற்றுப்படை இலக்கணத்திற்கு முருகாற்றுப்படை பொருந்தாதென்றே கொள்வோம். அதற்காக அதனைச் சங்கப்பனுவல் அன்றெனச் சாற்றுதல் சரிதானா? சங்க இலக்கியங்கள் எல்லாம் தொல்காப்பியத்திற்கு முழுமையும் ஒத்துள்ளனவா? தொல்காப்பியர் கூத்தர், பாணர், பொருநர், விறலியாற்றுப்படைகட்கே இலக்கணம் கூறினார். புலவராற்றுப் படைக்கு இலக்கணம் தொல்காப்பியத்தில் இல்லை. ஆயின், பரணர் பாடிய புறம் 141 ஆம் பாடலும் பொய்கையார் பாடிய புறம் 48, 49 ஆம் பாக்களும் புலவராற்றுப்படைகளாகத் திகழ்கின்றன. எனவே தொல்காப்பியர் கூறியவாறுதான் ஆற்றுப்படை அமைவுறல் வேண்டும் என்பது ஆகாது; தொல்காப்பிய விதி வகையானும் அமையலாம்; அவ்விதியின் நீங்கிப் புதுநெறியிற் போந்து இலக்கியம் செய்யவும் செந்நாப் புலவர்க்கு உரிமை உண்டு. ச, ஞ, ய மொழிக்கு முதலில் வாரா என்பர் தொல்காப்பியர்; சங்கப் பாக்களில் மொழிமுதலாக வருமிடங்கள் பல. வியங்கோள் முன்னிலையில் கூடாதென்னும் தொல்காப்பியம்; சங்கப் பாக்களில் முன்னிலையில் வருமிடங்கள் பல. அன்விகுதி ஆண்பாற் படர்க்கைக்கே உரிய

தென்பர் தொல்காப்பியர். சங்கப் பாக்களில், "உதவி யோ உடையன்" (அகம் 186) "கொண்டு வந்தனன்" (புறம் : கபிலர்), "பாடுவன்" (புறம் 53) எனத் தன்மை யில் வருதல் உண்டு. இங்ஙனம் தொல்காப்பிய மரபு கள் பல சங்ககாலத்தில் மாறியுள்ளன. தொல்காப்பி யர் காலத்திற்குப்பின் எத்துணையோ புதுமரபுகள் பிறந் துள்ளன. அவற்றிற்கெல்லாம் அவரே இடமளித்துப் போந்தனர் இலக்கணம் பகவரிய பரல்போல்வதன்று; அது விரிந்துகொண்டே செல்லும். இலக்கணத்தின் விரிவு இலக்கியத்தின் மிகுதியைக் காட்டும்.

இறைவனைப் பற்றிய பாடல்கள் பல பண்டைக் காலத்து இருந்தமை தொல்காப்பியத்தால் (பொருள் 85, 442–449) அறியப்படும். தெய்வமணம் கமழும் திரு முருகாற்றுப்படைக்கும் பிற சங்க ஆற்றுப்படைகட்கும் வேறுபாடுகள் உள்ளன. பரிசில் நல்குவோன், பரிசில் பெற்றவன், பரிசில் நாடுவோன் என்ற மூவருமே ஆற் றுப்படையில் முக்கியப் பங்கு பெறுபவர். பிற ஆற்றுப் படைகள் பரிசில் பெற்றவன், பரிசில் நாடுவோன் பெயர் பெறும். சிறுபாணன் ஆற்றுப்படுத்தியது எனில் பரிசில் பெற்றவன் பெயர் நூலின்பெயராம். சிறுபாணனை ஆற் றுப்படுத்தியது என இரண்டன் உருபு விரித்து உரைப் பின் பரிசில் நாடுவோன் பெயர் நூலின் பெயராம். இந் நூல், பரிசில் நல்குவோன் பெயர்பெற்றது. பிற, பொருட் பரிசை நாடும்; இஃது அருட்பரிசை நாடும். இந்நூல் 'புலவராற்றுப்படை' எனப் பண்டுதொட்டுப் பயின்று வந்தமை நச்சினார்க்கினியர்தம் உரையால் அறியலாம். எனவே, இந்நூலும் பரிசில் பெற்றவன், நாடுவோன் பெயர் பெறும். முருகப்பெருமான் இடத்தில் பெறலரும்

பரிசில் பெற்ற புலவன் ஒருவன், அது பெறுதற்கு விரும்பும் புலவன் ஒருவனை அவனிடத்து ஆற்றுப்படுத்தலின் 'புலவராற்றுப்படை' என்பதே நக்கீரர் சூட்டிய பெயராகலாம். இந்நூல் 284 ஆம் அடியில் "முதுவாய் இரவலன்" எனக் குறித்தலான், ஆற்றுப்படுக்கப் பெறுவோர் புலவர் என்பது போதரும். பொய்கையார் பாடிய புலவராற்றுப்படையில் (புறம் 48) "முதுவாய் இரவலன்" என்றே புலவர் குறிக்கப் பெறுகிறார்.

**மாரைக்கிளவி:-**

இனி, பிள்ளை அவர்கள் வாதிக்கும் இரண்டாவது காரணத்தின் தன்மையை ஆராய்வோம்.

மாரைக்கிளவி வினையொடுதான் முடியவேண்டும். இதனை,

" மாரைக்கிளவியும் பல்லோர் படர்க்கை
காலக் கிளவியொடு முடியும் என்ப. " (சொல்: 207)

என்று தொல்காப்பியர் கூறியுள்ளார். மாரைக்கிளவி வினையொடு புணரும் மரபு சங்கப்பாக்களில் உள்ளன. ஆயின், திருமுருகாற்றுப்படையில், "தாவில் கொள்கைத் தந்தொழில் முடிமார்" என்னுமிடத்து, முடிமார் = முடித்தவர் என்று பொருள்பட்டு "மனன்" என்னும் பெயர்ச்சொல்கொண்டு முடிந்தது. இங்ஙனம் ஒரோவோரிடத்துப் பெயரொடு இற்று நிற்றலைப் பற்றிக்கொண்டு அந்நூல் பிற்காலத்துப் பிறந்ததெனத்துணிதல் அறந்தானும் என்னில் அற்றன்று: நற்றிணையுள் 64 ஆம் பாவில், "காமம் படரட வருந்தி, நோய்மலி வருத்தம் காணன்மார் எமரே" என்புழி மாரைக்கிளவி 'எமர்' என்ற பெயர்கொண்டு முடிதலைக்காண்க. அதுவேயுமன்றி, "மார்

வினையொடும் முடிமே'' என்புழி மயிலைநாதர் "வினையொடும் முடிமே'' என்ற உம்மைச் சிறப்பாற் பெயரொடும் முடிமே எனக்கொண்டு, ''பீடின்று பெருகிய திருவிற்பாடின் மன்னரைப் பாடன்மார் எமரே'' என்னும் புறநானூற்றுப் பாவை மேற்கோள் காட்டல் அறிதற்பாற்று. ஆகலான், சங்ககாலத்து இலக்கியங்களில் தொல்காப்பிய விதி நெகிழ்ச்சியுற்ற உண்மை உணரப்படும். இதனை எண்ணிப்பாராராய்த் திருமுருகாற்றுப்படையில் மாரைக் கிளவி பெயரொடு முடிதல் பிற்பட்ட வழக்கு; சங்க கால வழக்கன்று என்று துணிதல் பொருந்தாது.

இனி, பாடன்மார், காணன்மார் என்பன பாடுவார், காண்பார் என்னும் ஆரீற்று முற்றுச் சொல்லின் எதிர் மறையாய் ஒருமொழிப் புணர்ச்சியான் மகரம் பெற்று நின்றன; எனவே இவையிரண்டும் மாரைக்கிளவியாகா; மகரம் பெற்ற ஆரீற்றுச் சொற்களே என்று சேனவரையர் நிகழ்த்திய விளக்கத்தைக் கடைப்பிடித்து மேற்காட்டிய பாடல்கள் நிரம்பா மேற்கோள் என்னிற் பிறிது கூறுவேன். அகநானூறு 67 ஆம் பாவில், ''அரம்போழ்நுதிய வாளியம்பின் நிரம்பா நோக்கின் நிரையம் கொண்மார்...... மறவர்'' என்புழி 'கொண்மார்' என்பது மறவர் என்ற பெயர் கொண்டு முடிதலான் மாரைக்கிளவியின் மரபுப் பிறழ்ச்சியுணரப்படும். அகநானூற்றின் பழைய உரைகாரர் ''நிரையம் கொண்மார் = நரகம் புகுவார்'' என்றே எழுதிச் சென்றனர். [1] பேராசிரியர் க. வெள்ளைவாரணனார் அவர்கள், "இவ்விதிக்கு மாறாக 'உடம்பொடும் சென்மார் உயர்ந்தோர் நாட்டே' (புறம் 362) என மாரீறு பெயர் கொண்டு முடிந்துளது'' என்று நிறு

1. தமிழ் இலக்கிய வரலாறு–தொல்காப்பியம் பக்கம் 91.

வுதல் காண்க. அன்றியும் பெயர் மேல் விகுதியாகவும் சங்க காலத்தில் மாரைக்கிளவி வழங்கிய உண்மை, "தோழிமாரும் யானும்" (அகம்: 15) 'மலிபூஞ்சாரல் என் தோழிமார்" (அகம்: 48: 5) என்பவற்ருல் அறியப்படும். எனவே, 'மாரை' வழக்குப்பற்றிப் பிள்ளை அவர்கள் உரைப்பது பொருந்தாமை போதரும்.

### பெறீஇயர் - எச்சமா? பெயரா?

இனி, 'பெறீஇயர்' என்னும் சொல் எச்சமாயாதல், வியங்கோளாயாதல் வருதல் வேண்டும். ஆயின், 'ஒன்பதிற்றிரட்டி உயர்நிலை பெறீஇயர்' என்புழிப் பெற்றவர் என்ற பொருளில் பெயராய் வருதலான், திருமுருகாற்றுப்படை பிற்காலத்தது என்கிருர். ஈங்குப் 'பெறீஇயர்' என்ற சொல் 'பெறீஇயோர்' என்ற சொல்லின் மறு வடிவமாகும். **'மரீஇயோர்'** அறியாது மைந்துபட் டன்றே' (புறம்: 13) என்ற சங்கப்பாடலில் 'மரீஇயோர்' = மருங்குள்ளோர் என்னும் பொருள்தரும் பெயர்ச்சொல். பெறீஇயோர், மரீஇயோர் என்ற சொற்கள்கூடப் பெறீஇயர், மரீஇயர் என்பனவற்றின் திரிந்த வடிவங்களாகக் கருதற்பாலன. அ, ஆ என்பன 'ஓ' ஆகும் என்பதற்கு இலக்கண விதியும் இலக்கிய வழக்கும் துணை நிற்றலான், பெறீஇயர், மரீஇயர் என்பனவே தொன்மை வடிவங்கள் என்பது புலனுகும். பெறு, மரு என்ற வினையடியாகப் பெற்று, மருவி என்றும், பெறீஇ, மரீஇ என்றும் இருவகைகளில் இறந்தகால வினைஎச்சம் தோன்றும். ஈண்டு பெறீஇ, மரீஇ என்பன அகரவிகுதி பெற்றுப் பெயர் எச்சமாகும்: பெறீஇ + அ = பெறீஇய மரீஇ + அ = மரீஇய. இறந்தகாலப் பெயர் எச்சம் 'அர்' விகுதி பெற்றுப் பெறீஇய + அர் = பெறீ

இயர், மரீ இய + அர் = மரீஇயர் என்ருகும். ஈங்கு, இரண்டு அகரங்கள் அடுத்து வருதலின் ஓர் அகரம் ஒலிக்கப் பெருமல் விடுபட்டமைக்கு மொழிநூலார் கூறும் 'ஒலிவிடு படுதல்' (Haplology) என்ற விதி துணைநிற்கும். இத் தொன்மை வடிவம் (பெறீஇயர்) திருமுருகாற்றுப்படையில் வழங்குதல் அதன் பழமைக்குச் சான்ருகுமேயன்றி, அது பிற்காலநூல் எனற்குச் சிறிதும் உதவாது.

ஒரு சொல் வினைஎச்சமாய் வருதலும், பெயராய் வருதலும் உண்டு. முருகன் உதவி வருகிருன் என் புழி வினைஎச்சம். முருகன் உதவி எனக்கு வேண்டும் என்புழி பெயர். அங்ஙனமே பெறீஇயர் வினைஎச்சமாய் வரவேண்டும் என்பதற்காகப் பெயராக வருதல் கூடாது எனப் பிள்ளையவர்கள் பேசுதல் பெருநகைப்பிற்கு இட ஞும். நச்சினர்க்கினியர் 'பெறீஇயர்' தொழிற்பெயர் என்று எழுதியிருத்தல் காண்க.

ஆன் என்ற சொல் பசுவைக் குறித்தலுடன், மூன் றன் உருபாகவும், சாரியையாகவும், ஆண்பால் விகுதி யாகவும், அங்கு என்னும் சுட்டுப்பொருளாகவும் வருதல் காண்க. 'ஐ' என்பது வியப்பு, பெருமை, தலைவன் முதலிய பொருள்களுடன் இரண்டன் உருபாகவும், சாரி யையாகவும் வழங்குதல் காணலாம்.

எனவே, ஒரு சொல் பலநிலைகளில் பல இலக்கணக் குறிகள் பெறுதல் மொழிநூல் புலமையாளர்க்குப் புரி யாத புதிரன்று.

**மதி : இடைச்சொல்லா?**

'மதி' இடைச்சொல் ஒரோவோரிடத்துப் படர்க்கை யில் ஆளப் பெறுதலான் முருகாற்றுப்படை பிற்காலமா

கும் என்பர் பிள்ளை அவர்கள். நக்கீரர் "விழுமிய, பெறல ரும் பரிசில் நல்கும் மதிபலவுடன்" என்று அருளுமிடத்து மதியை இடைச்சொல்லாகக் கொள்ளவேண்டாம்; பெ யர்ச் சொல்லாகவே கொண்டு "இனி, மதிபலவுடன் எனக்கூட்டி அறிவுகள் பலவுடனே பரிசில் நல்கும் என்று கூறுவாரும் உளர்" என்று நச்சினார்க்கினியர் நவில்வ தை ஏற்றுக் கொள்ளலாம். அவர்க்கு முற்பட்ட உரை காரர் மதியினைப் பெயர்ச்சொல்லாய்க் கொண்ட உண்மை ஒருதலையாக; இடைச்சொல் எனக்கொண்டு படர்க்கை யில் வந்தது என்று கூறுதல் நேரிதாக இல்லை. இனி, மதியினை இடைச்சொல்லெனக் கொண்ட பரிமேலழகர், "மதி படர்க்கையில் வருதலைப் புறனடையாற் கொள்க" என்று கழறுதலும் காண்க.

## இருவேறு உலகு

தொகைநூல் பாக்களைப் பாடிய நக்கீரர் உலகமும், திருமுருகாற்றுப்படை பாடிய நக்கீரர் உலகமும் வேறு படுதலால் இவ்விரு நக்கீரரும் ஒருவர் அல்லர்; இருவேறு காலத்தினர் என்பர் பிள்ளை அவர்கள். இக்கருத்து ஆய் வதற்கு உரியது.

நக்கீரர் யாத்த புறம் 56 ஆம் பாடலைத் திருமுரு காற்றுப்படையுடன் ஒப்புமை கூர்ந்த பிள்ளையவர்கள், "தாம் வழிபடும் தெய்வத்தோடு மக்கட்பிறப்பினன் ஒரு வனை இந்நக்கீரர் ஒப்புக்கூறுவாரா? தெய்வபத்தியிற் சிறந்த இப்புலவர் மதுவைப் பொற்கலத்திலேந்தி மகளிர் ஊட்ட மகிழ்ச்சியோடு ஒழுகுவாயாக என வாழ்த்துவா ரா?" என்று இரண்டு கேள்விகளை நம்முன்னர்க் கொ ணர்கின்றார். ஈண்டைக்கு, "மக்கட் பிறப்பினன் ஒருவன்"

என்று எழுதும் அளவிற்கு அரசன் எளியன் என்று சங்க கால மக்கள் கருதினரல்லர். இருபதாம் நூற்றாண்டில் வாழும் பலருக்கு அரசன் "மக்கட் பிறப்பினருள் ஒருவன்" என்ற அளவில்தான் தென்படுவான். இந் நூற்றாண்டில் கூடப் பல துறைகளிலும் முன்னேறிய ஜப்பானிய மக்கள் அரசனைக் கடவுளாக மதிக்கின்றனர். மேலை நாட்டிலும்கூட (The Divine right theory) அரசரின் கடவுள்மச் கருத்து நிலவிய காலம் உண்டு. "மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்" என்னும் பண்பு பழுநிய பண்டைத் தமிழர் அரசனை இறைவனாக எண்ணினர். கடவுள் வாழ்த்துப்பாடித், தமது அறநூலை அருளிய வள்ளுவப் பெருந்தகையும்,

> "முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட் (கு)
> இறையென்று வைக்கப் படும்."

என்று அறமுரைத்தார். அல்லாமலும், இயவுளருடன் ஏந்தலை ஒப்புமை கூர்ந்து கவிபுனைதல் பழந்தமிழ் மரபாகும். தொல்காப்பியனாரும் "பூவைநிலை" என்ற துறையும் அமைத்துள்ளார். இறைவன் அரசனையும் குறிக்கும் கிளவியாகும்; இறைவன் ஐம்பெருங் குரவராக இலங்குகின்றான் என்பது ஆன்றோர் துணிபு. அவ்வைவருள் அரசனும் ஒருவனாவான். சமயத்தைக் கண்எனக் காத்தற்காகத் தம்வாழ்நாட்களைப் போக்கிய நம்மாழ்வார் "திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேனே என்னும்" என்றும்; சிவநேயச் செல்வராய குமரகுருபரர், "அனைவோர்க்கும் தெய்வம், இலை முகப் பைம்பூண் இறை" என்றும் அறிவுறுத்தலை எண்ணுங்கால், சமயக் கருத்துக்கள் அரும்பிக் கொண்டிருந்த சங்ககால நக்கீரர் முருகனைப் பாடிய வாயால் வேந்தனைப் பாடுதல் கூடாது

என்றும், வேந்தனை இறைவனுடன் ஒப்பிடல் ஒவ்வாது என்றும் இயம்புதல் வேண்டாம். இக்காரணத்திற்காக நக்கீரர் இருவரானுல், நம்மாழ்வாரும், குமரகுருபரரும் தனித்தனியே இருபேராவர்!

இனி, "தெய்வபத்தியிற் சிறந்த இப்புலவர், மதுவைப் பொற்கலத்தேந்தி மகளிர் ஊட்ட மகிழ்ச்சியோடு இனிது ஒழுகுவாயாக என வாழ்த்துவாரா?" என்று விடுக்கும் பிள்ளை அவர்கள் வினவிற்கு விடைகூறத் துணிகின்றேன். முருகனுக்கே மதுவிட்டுப் படைத்தலைச் சங்கப் பாக்கள் சாற்றும்காலை, அரசனை மதுவருந்துமாறு நக்கீரர் பாடினுர் என்பதில் என்ன தவறு காணமுடியும்? அங்ஙனம் பாடிய் காரணத்திற்காக மதுவருந்தப் பாடிய புலவரும் தெய்வத்தைப் பாடிய புலவரும் இருவராவர் என்பது பொருந்துமாறில்லை. இவ்வாறு வாழ்த்துதல் சங்ககாலப் புலவர்தம் வழக்கம். உயிர், யாக்கை, செல்வம், இளமை நிலையாமையினை அறிவுறுத்தத் துவங்கிய மாங்குடி மருதனுர்,

> "விளங்கிழை மகளிர் பொலங்கலத் தேந்திய
> மணங்கமழ் தேறல் மடுப்ப நாளும்
> மகிழ்ந்தினி துறைமதி பெரும."

என மதுரைக் காஞ்சியில் வாழ்த்துகின்ருர். மதுரைக் காஞ்சித் தலைவற்கு நிலையாமையினை உணர்த்தி நன்னெறியில் நடத்தலை நவிலும் பொருண்மொழிக் காஞ்சி பாடும் மாங்குடிகிழார்,

> "ஒண்டொடி மகளிர் பொலங்கலத் தேந்திய
> தண்கமழ் தேறல் மடுப்ப மகிழ்சிறந்து
> ஆங்கினி தொழுகுமதி." (புறம்)

என்று இயம்பியுள்ளார். ஔவைப் பிராட்டியும்,

"பாசிழை மகளிர் பொலங்கலத் தேந்திய
நாரரி தேறல் மாந்தி மகிழ்சிறந்து
......... வாழ்தல் வேண்டும்." (புறம்: 367)

என்று வாழ்த்துகின்றார்.

இனி, சங்கத்து நக்கீரர் தொகைநூற் பாக்களையும் பத்துப்பாட்டுள் காணப்பெறும் திருமுருகாற்றுப்படையினையும் நெடுநல்வாடையினையும் ஒரே காலத்தில் யாத்தனராகக் கொள்ளுதற்கு இல்லை. அவர்தம் தொகைநூற் பாக்களும் நெடுநல்வாடையும் வாழ்வின் காலைப்பொழுதில் யாக்கப்பெற்றனவாதல் வேண்டும். இல்லறத்தைச் செவ்வையுற நடத்தற்குப் பொருள் வேண்டும். "பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை" என்பது பொன்மொழியாகும். சங்கப் புலவருட் பலர் புலமைச் செல்வத்தைக் கொடுத்துப் பொருட்செல்வம் பெற்று வாழ்ந்தனர். இம்மையின்பங்களைத் துய்க்காமல் மறுமையின்பம் நாடுதல் பீடாகாது. சமயத்திற்காகவே தம் வாழ்வைச் செலுத்திய ஆளுடைய அரசரும் இல்லற இன்பம் துய்க்காமை கருதி மனம் அழுங்கிப் பாடினர்.

"..........................................
தளையவிழ் கோதை நல்லார் தங்களோ டின்பம் துய்க்க
இளையனும் அல்லேன் எந்தாய் என்செய்வான்
தோன்றினேனே."

என்பது அவர் திருப்பாசுரம்.

சமயத்தைப் புரப்பதற்காகவே பிறந்த அடியாருட் பலர் வரைவயர்ந்து நிறையின்பம் உட்கொண்ட நீர்மையராவர். இல்லறம் துறவறம் இரண்டையும் வகுத்த வள்ளுவப் பெருந்தகையும் நமக்குத் துணையாக உள்ளார்.

எனவே, நக்கிரர் இல்லறத்தை இனிது நடத்துதற்காகப் பொருட்பரிசிலை நாடிப் புரவலரைப்பாடினர். முதுமை கதுவக் கதுவ மறுமை நினைவால் உந்தப்பெற்ற நக்கீரனர் அருட்பரிசை அடைதற்காகத் தமிழ்க்கடவுளாகிய முருகப் பெருமானின் சேவடிபடர்ந்து பெறலரும் பரிசில் எய்தினர். தாம்பெற்ற பேற்றைப் பெறுதற்கு அவாவும் புலவனுக்கு அது பெறுமாற்றைப் புலப்படுத்துவதற்குத் திருமுருகாற் றுப்படையினை அருளினர். எனவே, இளமைக்கும் முதுமைக்கும் இடையில் எத்துணையோ கருத்து வேறு பாடுகள் பிறக்கலாம். இவற்றை மனத்தில் இருத்தினல் திருமுருகாற்றுப்படை ஆசிரியரும், நெடுநல்வாடை ஆசிரி யரும் ஒருவர் என்பது தெளிவாகும்.

### புராணச் செய்திகள்

### திருமுருகாற்றுப்படையில் வருதல்

முடிபாகத் திரு. பிள்ளை அவர்கள் திருமுருகாற்றுப் படையில் புராணக் கருத்துக்கள் வருதலைக்காட்டிப் பிற் காலத்தது என்பர். இக்கருத்தைச் சிறிது எண்ணிப் பார்ப்போம். முருகவேள் சூரனைக்கொன்றான் என்னும் புராணக் கருத்து,

> "பார்முதிர் பனிக்கடல் கலங்கவுள் புக்குச்
> சூர்முதல் தடிந்த சுடரிலை நெடுவேல்."

எனத் திருமுருகாற்றுப்படையில் வருதல் காணலாம். இக்கருத்தே,

> "வெண்டிரைப் பரப்பில் கடுஞ்சூர் கொன்ற
> பைம்பூட் சேஎய்." (பெரும்பாண்: 457—458)

"........மாக்கடல் முன்னி
அணங்குடை அவுணர் ஏமம் புணர்க்கும்
சூருடை முழுமுதல் தடிந்த .....விறல்வேள்."
(பதிற்று—11)

"சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேல்." (அகம்—59)

"மாகடல் கலக்குற மாகொன்ற மடங்காப்போர்
வேல் வல்லான்." (கலித்.—104)

"பாயிரும் பனிக்கடல் பார்துகள் படப்புக்கு
மாய அவுணர் மருங்கறத் தபுத்தவேல்" (பரி—5)

எனச் சங்க இலக்கியங்களில் பயின்று வருதல் காண்க. திருமுருகாற்றுப்படையில் சூரரமகளிரும், நிணந்தின்று துணங்கையாடும் பேய்களும் பேசப்பெறுதல் பிறசங்கப் பாக்களிலும்,

"அணங்குடைச் சிலம்பின் கவிரம்
பேரிய உருகெழு கவாஅன் ஏர்மலர்
நிறைசுனை உறையும் சூர்மகள்' (அகம்—198)

"பலிபெறு வியன்களம் மலிய ஏற்றிக்
கணங்கொள் சுற்றமொடு கைபுணர்ந் தாடும்
துணங்கையம் பூதம்'' (பெரும்பாண்—233—5)

"நிணம்வாய்ப் பெய்த பேய்மகளிர்
இணையொலியிமிழ் துணங்கை" (மதுரைக்—25—6)

என்று இயம்பப்பெறுதல் அறியலாம். முருகற்கு யானையூர்தி, மயிலூர்தி, கொடி முதலியன உரியவெனும் பழங் கருத்து முருகாற்றுப்படைமொழியும். இப்புராணக்கருத்தினை,

"சூருடை முழுமுதல் தடிந்த பேரிசைக்
கடுஞ்சின விறல்வேள் களிறூர்ந் தாங்கு"
(பதிற்று—11)

"பிணிமுக வூர்தி ஒண்செய் யோன்" (புறம்—56)
"பிணிமுகம் உளப்படப் பிறவு மேந்தி" (பரி. 8—101)
"பல்பொறி மஞ்ஞை வெல்கொடி உயரிய
ஒடியா விழவின் நெடியோன்" (அகம்—149)
எனவரும் சங்கநூற் பகுதிகள் விளக்குதல் காண்க.

திருமால், சிவன், இந்திரன், நான்முகன் ஆகிய நால்வரும் முருகாற்றுப்படையில் தோற்றமளிக்கின்றனர். விநாயகரைப்பற்றி இந்நூலிலும் பிற சங்கப் பாக்களிலும் இயம்பப்பெறவில்லை. இந்நால்வரும்,

"நனந்தலை உலகம் வளைஇ நேமியொடு
வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை
நீர்செல நிமிர்ந்த மாஅல்." (முல்லை: 1–3)
"மரஞ்செல மிதித்த மாஅல்." (அகம்: 59)
"வண்டுது பொலிதார்த் திருஞெமர் அகலத்துக்
கண்பொரு திகிரிக் கமழ்குரல் துழாஅய்
அலங்கற் செல்வன்." (பதிற்று: 31)
"நீனிற வுருவின் நேமியோன்." (புறம்: 58)
"அஞ்சன உருவன்." (புறம்: 174)
"முக்கட் செல்வர் நகர்." (புறம்: 6)
"நான்மறை முதுநூல் முக்கட் செல்வன்." (அகம்: 186)
"ஓங்குமலைப் பெருவில் பாம்புஞாண் கொளீஇ
ஒருகணை கொண்டு மூவெயில் உடற்றிப்
பெருவிறல் அமரர்க்கு வென்றி தந்த
கறைமிடற் றண்ணல்." (புறம்: 55)
"நீலமணி மிடற்றொருவன் போல." (புறம்: 91)
"பெரும்பெயர்க் கணிச்சியோன் மணிமிடற்றணி."
(கலி: 105)

"அணங்குடை வச்சிரத்தோன் ஆயிரம்கண்." (கலி: 150

"வச்சிரத் தடக்கை நெடியோன் கோயில்." (புறம்: 241)

"நீனிற வுருவின் நெடியோன் கொப்பூழ்
நான்முக ஒருவற் பயந்த பல்லிதழ்த் தாமரை."
(பெரும்பாண்: 402-4)

எனச் சங்கத்துச் சான்றோர்தம் பாக்களில் காட்சி தருதலைக் காணலாம். மேழகம் நூறி வேறி கிறைத்து வெறியாட்டெடுத்தல் முருகாற்றுப்படையிலும் பிறசங்கச் செய்யுட்களிலும் வழங்கப்பெறுதல் அறிஞர் உலகம் அறிந்த தொன்றும். பலமுகங்களும் பலகைகளும் இறைவனின் வரம்பிலாற்றல், எங்குமாய் இலங்குதல், பேரருள்திறம் முதலிய இறைமைப் பண்புகளைப் புலப்படுத்தும். பரிபாடலில் எண்ணலங்காரத்துடன் இறைவனின் திருக்கைகளைக் குறித்த கடுவனிளவெயினனார்,

"நாறு பிரங்கை ஆறறி கடவுள்!
அனைத்தும் அல்லபல அடுக்கல் ஆம்பல்
இனைத்தென எண்வரம்பறியா யாக்கையை"

என வியந்தும் நயந்தும் போற்றுகிறார்.

எனவே, இதுகாறும் இயம்பியவாற்றான் புராணக் கருத்துக்கள் திருமுருகாற்றுப்படையிலும் பிறசங்க இலக்கியங்களிலும் பேசப்பெறுதல் கண்டோம். இனி, முருகன் இயற்கை வடிவாக வயங்கும் எழிற்காட்சியை,

"உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடல்கண் டாஅங்கு
ஓவற இமைக்கும் சேண்விளங் கவிரொளி."
"கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பு."

"காடும் காவும் கவின்பெறு துருத்தியும்
யாறும் குளனும் வேறுபல் வைப்பும்
சதுக்கமும் சந்தியும் புதுப்பூங் கடம்பும்
மன்றமும் பொதியிலும் கந்துடை நிலையினும்"

எனவரும் அடிகளில் கவின்செறியக் காட்டுகின்றார். கோயில் போந்து வழிபட இயலராய் "யாம் எம் இல்லத்தின் உள்ளிருந்தே இயற்கையாகிய இறைவனை எண்ணி ஏத்துவோம்" என்னும் கோட்பாட்டினர்க்கும் முருகப்பெருமான் தண்ணருள் பாலிக்கும் தன்மையன் என்னும் உயரிய கருத்தினை,

"வேண்டுநர் வேண்டியாங் கெய்தினர் வழிபட
ஆண்டாண் டுறைதலும் அறிந்த வாறே"

என்னும் அடிகளில் தெளிவுறுத்துகின்றார்.

கந்துவில் முருகன் உறைதலான் கந்தன் எனப்பட்டான். இதனை,

"மன்றமும் பொதியிலும் கந்துடை நிலையினும்" (முருகு)
"அந்தி மாட்டிய நந்தா விளக்கின்
மலரணி மெழுக்கம் ஏறிப் பலர்தொழ
அம்பலர் சேக்கும் கந்துடைப் பொதியில்" (பட்டினப்)

எனவரும் பகுதிகள் உணர்த்தும்.

## முருகன் திருத்தலம்

முருகாற்றுப்படையில் முதலில் திருப்பரங்குன்றத்துச் சிறப்பினைக் குறிக்கின்றார். பரங்குன்றின் சிறப்பு பரம்பொருளின் சிறப்பால் பிறப்பது. பரங்குன்றின் பெருமையினைப் பரிபாடல்கள் பேசுகின்றன. பிற சங்கநூல்களில் ஒன்றாகிய அகநானூற்றில்,

"முருகன் தண்பரங்குன்றம்" (அகம்—59)
"கூடற் குடாஅது
பல்பொறி மஞ்ஞை வெல்கொடி உயரிய
ஓடியா விழவின் நெடியோன் குன்றம்" (அகம்—149)
எனப் புகழப்பெறுதல் காணலாம்.

நக்கீரர் கூறும் இரண்டாவது திருப்பதியாகிய சீரலைவாய்,

"திருமணி விளக்கின் அலைவாய்ச் செருமிகு சேஎய்"
(அகம்—266)
"வெண்டலைப் புணரி அலைக்கும் செந்தில்
நெடுவேள் நிலைஇய காமர் வியன்றுறை" (புறம்—55)
எனச் சங்கப்பாக்களில் சால்புறப்பெறுதல் அறிதற்பாலது. ஆற்றுப்படையுட்போந்த ஆவினன்குடி ஆவியர்கள் ஆண்டமையால் அப்பெயர் அடைந்ததென்பதும்; அது வையாவிக் கோப்பெரும்பேகனால் ஆளப்பெற்றபின் 'வையாபுரி' எனப் பெயர்பெற்றது என்பதும் ஆராய்ச்சி உலகம் அறிந்தவையாம். இம்மலையினை,

"முருகன் நற்போர் நெடுவேளாவி
அறுகோட்டி யானைப் பொதினி" (அகம்—1: 3—4)
"முழவுறழ் திணிதோள் நெடுவேளாவி
பொன்னுடை நெடுநகர்ப் பொதினி" (அகம்-61: 15-16)
எனவரும் அகநானூற்றுப் பகுதிகள் பரவுதல் காண்க.

இந்நூலுள் நான்காவதாக நவிலப்பெறும் 'ஏரகத்தை' மலைநாட்டகத்தொரு திருப்பதி என்பாரும் சாமிமலையே என்று சாதிப்பாரும் உளர். சிலப்பதிகாரம் இப்பதியின் சிறப்பைச் செப்புகின்றது. ஐந்தாம் பகுதியாகத் திகழும் "குன்றுதோறாடல்" முருகனின் படைவீடெனப் பகரும

ரும் உளர். குன்றுநிலம் எங்கும் நின்று நிலவும் முருக னைக் குறிஞ்சிக் கிழவன் எனப் புலவர்கூட்டம் புகலும். முதன் மக்கள் மலையில் வாழ்ந்தனர் என்றும், அக் காலத்தே அவர்கள் முருகனை இறைஞ்சினர் என்றும் அறிஞர் உலகம் அறிவிக்கும். உயரிய பரம்பொருளை உயரிய இடத்தில் வைத்து வணங்கும் முறை உவப்பி னைப் பயப்பதாம். தொல்காப்பியனாரும், "சேயோன்மேய மைவரை யுலகமும்" என்று இயம்பிப்போந்தனர். நக்கீரர் கூறும் "பழமுதிர்சோலைமலை" அழகர்கோயிலைக் குறிக்கும் என்றும்; திருமாலிருஞ்சோலை மலையினைக் குறிக்குமென் றும் கூறுவர். மாலிருஞ்சோலையும், பழமுதிர்சோலையும் வேறுதல் வேண்டும். பரிபாடலில் 'மாலிருஞ்சோலை' தன்பெயருக்கேற்பத் திருமாலின் திவ்விய தேசமாகப் பேசப்படுகின்றது.

எனவே, இதுகாறும் எழுதியவாற்றால் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை அவர்கள் திருமுருகாற்றுப்படையி னைப் பிற்காலத்திற்கு இழுத்துவரும் முயற்சி அயர்ச்சி யடைதல் காண்க.

### நக்கீரர் II (கி. பி. 450) —
### — நக்கீரர் IV (கி. பி. 850) ஆதல்

இனி, கி. பி. 1942—43-இல் தாம் "செந்தமிழில்" வெளியிட்ட கட்டுரையில் முருகுபாடிய நக்கீரர் கி. பி. 450-இல் வாழ்ந்தவர் என்று கூர்ந்துரைத்த வையாபுரிப் பிள்ளை அவர்கள், 1952-இல் அக்கட்டுரையினைத் தம் "இலக்கியதீபம்" என்ற நூலில் இணைத்து வெளியிடுங் கால் காரணம் கழறாது அவ்வடிகளை ஒருவி, அந்நக்கீரரே 11-ஆம் திருமுறை நூல்களைப் பாடியவரென்றும்; அவர்

கி. பி. 850-இல் வாழ்ந்தவர் என்றும் எழுதத்துணிந்தனர்! வள்ளுவப் பெருந்தகை 'ஞானவெட்டியான்' யாத்ததும், சங்ககாலக் கபிலர் 'கபிலரகவல்' பாடியதும், சங்ககால ஔவையார் 'விநாயகரகவல்' விளம்பியதும் மெய்ம்மையே யாமாகில் முருகு பாடிய நக்கீரரே 'கோபப்பிரசாதம்' 'பெருந்தேவபாணி' 'கைலைபாதி காளத்திபாதியந்தாதி' முதலிய திருமுறை நூல்கள் பாடினார் என்பதும் வலியுறும்.

பதினோராம் திருமுறையில் திருமுருகாற்றுப்படை சேர்க்கப்பெற்றுள்ள காரணத்திற்காக அந்நூல் சங்கநூல் அன்று என்றல் ஒவ்வாது. நக்கீரதேவ நாயனார் அருளிய கைலைபாதி காளத்திபாதி அந்தாதி, திருவீங்கோய்மலை எழுபது, திருவலஞ்சுழி மும்மணிக்கோவை, திருவெழு கூற்றிருக்கை, பெருந்தேவபாணி, கோபப்பிரசாதம், காரெட்டு, போற்றித்திருக்கலிவெண்பா, திருக்கண்ணப்ப தேவர் திருமறம் என்ற ஒன்பது நூல்களும் சிவன் ஒருவனையே பெரியோனாய்க்கொண்டு வழிபடும் பெற்றி யுடையன. **சிவபெருமான் உட்பட எல்லாத் தெய்வங்களும்** தேவகணங்களும், விண்ணுலக வாசிகளும் தத்தம் குறைகளை விண்ணப்பித்து **வேண்டி நிற்க, ஆவினன்குடியில் முருகன் அவர்களுக்கு அருள்கின்றான்** என்ற கருத்தினைத் திருமுருகாற்றுப்படையில் 150 — 176-ஆம் அடிகள் விளக்குதல் காணலாம். எனவே, முருகுபாடிய நக்கீரரும் திருமுறைப்பனுவல்கள் பாடிய நாயனாரும் வேறானவர் என்பது வெள்ளிடை மலையாம். இவ்விரு புலவரும் புலமை நலத்தானும் பொருள்வளத்தானும் வேறுபடுதலை ஒப்பிட்டுப் படிப்பார் உணரமுடியும். இனி, [1] "நக்கீரர் எழுதிய இந்நூல்களை

1. செந்தமிழ் 1943.

நோக்கியவுடன் 11 ஆம் திருமுறையில் அடங்கிய நூல் களுள் **திருமுருகாற்றுப்படை** தவிர ஏனைய வெல் லாம் சங்ககாலத்திற்குப் பிற்பட்டன என்பது தெளிவாம். பிரபந்த வகையை நோக்கினாலும், யாப்புவகையை நோக் கினாலும், வடசொற்களின் அளவை நோக்கினாலும், கை யாளப்பட்டுள்ள நடையை நோக்கினாலும் **இவ்வுண்மை** எளிதிற் புலனாம்'' என்று திரு. வையாபுரிப்பிள்ளை அவர் களே ஐயமற எழுதுதலான், திருமுருகாற்றுப்படை நக்கி ரர் சங்ககாலத்தவரே என்பது குன்றின் முகட்டில் நின்று நிலவும் பெருஞ்சுடர்போல் பிறங்குதல் காணலாம்.

## நக்கீரர் III (கி. பி. 650)

இனி, கி. பி. 7 ஆம் நூற்றாண்டில் நக்கீரர் ஒருவர் வாழ்ந்தார் என்றும் அவர் இறையனார் களவியலுரை, அடிநூல், நாலடியார் ஆகிய மூன்று நூல்களையும் யாத் தார் என்றும் பிள்ளை அவர்கள் விள்ளுகின்றார். பாண் டிக்கோவைப் பாக்கள் களவியல் உரையில் வருதலான், கோவைத் தலைவன் நெடுமாறனின் காலமாகிய கி. பி. 7 ஆம் நூற்றாண்டில் இவ்வுரை எழுதப்பெற்றது என்று இயம்புகின்றார். தம் ''திருவள்ளுவர் காலம்" என்னும் கட்டுரையில் களவியல் உரை கண்டவர் நக்கீரர் என் றும், "குறுந்தொகை'' கட்டுரையில் களவியல் உரை வகுத்தவர் கி. பி. 5 ஆம் நூற்றாண்டினர் என்றும் பிள்ளை அவர்களே குறித்துள்ளார். அக்கட்டுரையிலேயே களவி யலுரை எழுத்து வடிவு எய்தியது கி. பி. 7 ஆம் நூற் றாண்டாகும் என்று இயம்பியுள்ளார். களவியலுரைகாரர் நக்கீரர் என்பது பேரறிஞர் பலர்க்கும் ஒப்பமுடிந்த கருத் தாகும். ஆயின், அதனை 7 ஆம் நூற்றாண்டில் வரிவடி

விற் கண்டவர் பிறிதொரு நக்கீரர் என்னற்குச் சான்று கள் உளவா? அதனை வரிவடிவாக்கியவன் சாத்தானு தல், காத்தானுதல் வேண்டும் என்பார் கூற்றிற்கும் இவர்தம் உரைக்கும் வேற்றுமையில்லை. எனவே, நக்கீ ரர் கண்ட களவியலுரை பலதலைமுறைகளாகப் பாடம் ஓதப்பெற்று, எழுதாக் கிளவியாக இருந்து, இடைச்செரு கல் மலியப்பெற்று, ஏழாம் நூற்ருண்டில் யாரோ ஓரறி ஞரால் எழுத்து வடிவு எய்தியது என்பது அறிவிற்குப் பொருந்துமாறுள்ளது.

நாலடியாரைப் பாடியவர் நக்கீரர் என்றும், அவர் கி. பி. 7 ஆம் நூற்ருண்டினர் என்றும் பிள்ளையவர்கள் பேசுகிருர். நக்கீரர்க்கும் நாலடியார்க்கும் யாங்ஙனம் தொடர்பு வாய்த்தது என்பதை எண்ணிப் பார்ப்போம். யாப்பருங்கல விருத்தியில், ''நக்கீரர் நாலடி நானூற்று வண்ணம்'' என்ற தொடர் காணப்பெறும் ''அளவி ஞற் பெயர் பெற்றன பன்னிருபடலம், நாலடி நானூறு'' என்று மயிலைநாதர் உரையில் வரும் நாலடி நானூறும் மேற்குறித்த நாலடி நானூற்றுவண்ணமும் ஒரே நூலா கும் என்று முடிபுசெய்தற்குப் பிள்ளைஅவர்கள் ஒருகாரண மும் காட்டினரல்லர். நக்கீரர் நாலடி நானூற்று வண்ண மும் நாலடி நானூறும் வெவ்வேருகக் கருதற்கு உரியன என்பதை இவற்றின் பெயர் வேற்றுமையே புலப்படுத் துதல் காண்க. அன்றியும், இவ்விருநூல்களில் ஒன்றி னின்றும் பிறிதொன்றை வேறுபடுத்துக் காட்டவே முன்ன தை ஆசிரியர் பெயருடன் சார்த்திப் பேசினராதல் வேண் டும். முன்னதைக் கொன்னேயும் பின்னதை ஆசிரியர் பெயருடன் புணர்த்தும் வழங்குதல் ஆகாதோ வென்னில் அற்றன்று; அந் நாலடி நானூற்றின் ஆசிரியர் பலராக

லானும், அவர்தம் பெயர் அறியுமாறின்மையானும்; "சில முனிவர் இருந்து தெரிந்துரைத்த, நாலடி நானூறு" என்று உரையாசிரியர் தருமர் உரைத்தமையானும்; நாலடி உரையாசிரியருள் ஒருவரேனும் நக்கீரர் நாலடியைப் பாடியதாகப் பகராமையானும்; இந்நூல் சமணர் பலராற் பாடப்பெற்ற பாக்களை உடையது என்னும் வழக்கு வலியுடைத்தாகலானும், நற்றிணை நானூறு என்பது போல நாலடி நானூறும் தொகைநூல் என்க. அல்லதூஉம், நாலடி ஆசிரியர் ஒருவராயின் முன்னுக்குப்பின் முரண்தரும் கருத்துக்களும், கூறியது கூறலும், மாறுகொளக்கூறலும், தன்னுன் ஒருபொருள் கருதிக் கூறலும் இன்னோரன்ன பிழைகள் நிகழ்தற்கு இடமில்லை. ஆயின், நாலடியில் முரண்களும், கூறியது கூறல் முதலிய வழுக்களும் நிரம்ப உள்ளன. காட்டாகச் சில நோக்குவோம்.

நட்பியலில், "நட்பாராய்தல்" என்னும் அதிகாரத்தில்,

"கருத்துணர்ந்து கற்றறிந்தார் கேண்மைஎஞ் ஞான்றும்
குருத்திற் கரும்புதின் றற்றே — குருத்திற்(கு)
எதிர்செலத்தின் றன்ன தகைத்தரோ என்றும்
மதுர மிலாளர் தொடர்பு." (நாலடி: 211)

என்று வரும் வெண்பாவும்; அரசியலில், "கல்வி" என்னும் அதிகாரத்தில்

"கனைகடல் தண்சேர்ப்ப கற்றறிந்தார் கேண்மை
நுனியிற் கரும்புதின் றற்றே — நுனிநீக்கித்
தூரில்தின் றன்ன தகைத்தரோ பண்பிலா
ஈரமிலாளர் தொடர்பு." (நாலடி: 138)

என்றுவரும் வெண்பாவும் சொல்லாட்சி, பொருட்சிறப்பு, உவமை இனையவற்றால் பெரிதும் ஒத்தியங்குதல் உண்

ணற்பாலது. இவ்விரு பாக்களில் எது மூலம்? எது படி? நல்ல புலமை வாய்ந்த புலவர் இப்படி இருவேறு வெண் பாக்களில் ஒரே கருத்தினைச் சொல் மாற்றம் பொருள் மாற்றம் இன்றிப் புகலுதல் கூடுமா? இவ்விரு வெண் பாவும் ஒருவர் எழுதுகோலினின்றும் உதிர்ந்தவையல்ல. ஒன்றைப் பார்த்து ஒன்று எழுந்ததாகவே தெரிகிறது. இவற்றுள் ஒன்றை "வெள்ளிப்பாட" லாக மதிக்கலாம்.

அரசியலில் "குடிப்பிறப்பு" என்னும் அதிகாரத்தில்,

"ஒருபுடை பாம்பு கொளினும் ஒருபுடை
அங்கண்மா ஞாலம் விளக்குறூஉம் — திங்கள்போல்
செல்லாமை செவ்வனேர் நிற்பினும் ஒப்புரவிற்
கொல்கார் குடிப்பிறந் தார்." (நாலடி: 148)

எனவரும் வெண்பா வேறு 'அவதாரம்" எடுத்தலைக் கீழே காண்க:

"அங்கண் விசும்பின் அகனிலாப் பாரிக்கும்
திங்களும் சான்றோரும் ஒப்பர்மன் — திங்கள்
மறுவாற்றும் சான்றோரஃ தாற்றார் தெருமந்து
தேய்வர் ஒருமா சுறின்" (நாலடி: 151)

இப்பாடல் அரசியலில் "மேன்மக்கள்" என்னும் அதி காரத்தில் சேர்க்கப்பெற்றுள்ளது.

நாலடியார் 137 ஆம் பாடல் கருத்துடன் 233 ஆம் பாடலின் கருத்து ஒத்துள்ளது.

இக்காலத்தில் வெண்பா எழுதும் போட்டிக்கு ஈற்றடி தந்து எழுதினல் பாக்கள் எங்ஙனம் அமைகின்றனவோ அப்படியே சில வெண்பாக்கள் நாலடியாரில் உள்ளன. 'செய்வர் செயற்பாலவை' என முடியும் மூன்று வெண்

பாக்கள் மூன்று வேறு அதிகாரங்களில் (147, 153, 185) உள்ளன. இவற்றை ஒருவர் பாடியிருத்தல் கூடாது. 'மனத்தான் மறுவிலரேனும்' (180) என்ற பாடல் சிற்றினம் சேர்தலான் சிறுமைவரும் எனக்கூறும். 'வேம்பின் இலையுள் கனியினும் (244) என்ற பாடல் சிற்றினம் சேர்தலான் சிறுமைவாராது எனக்கூறும். இவை 'மாறுகொளக் கூறல்' என்னும் வழுவின்பாற்படும். "பெரியாரைப் பிழையாமை" என்னும் அதிகாரத்தில்,

"தெரியத் தெரியும் தெரிவிலார் கண்ணும்
பிரியப் பெரும்படர்நோய் செய்யும் — பெரிய
உலவா இருங்கழிச் சேர்ப்ப! யார் மாட்டும்
கலவாமை கோடி உறும்."

என்ற பாடலும்; "அறிவுடைமை" என்னும் அதிகாரத்தில்,

"உணர உணரும் உணர்வுடை யாரைப்
புணரிற் புணருமாம் இன்பம் — புணரின்
தெரியத் தெரியும் தெரிவிலா தாரைப்
பிரியப் பிரியுமாம் நோய்."

என்ற பாடலும் மாறுபட்டு மயங்குதல் காணலாம்.

எனவே, இதுகாறும் எழுதியவாற்றுல் நாலடிப் பாக்கள் ஒருவரால் பாடப்பெற்றிருத்தல் ஒவ்வாது என்பதும், பலகாலத்துப் பல புலவரால் பாடப்பெற்றிருத்தல் வேண்டும் என்பதும் உணரலாம். பழைய வெண்பா ஒன்றில்,

"ஞாலத் துழிதரு நற்பாட்டே கொண்டடக்கி
நாலடி நானூ றெனப்பெயரால் — வாலிதின்
ஈட்டித் தொகுத்தான் இசைசால் பதுமனே
கூட்டமைந்த மூன்றுபால் கொண்டு."

என்று காணப்பெறுதலான், தனிப்பாடல்களாகத் திகழ்ந்த

நானூறு பாடல்களைப் பால், இயல், அதிகாரம் என்று பகுப்புமுறை செய்து பதுமனார் தொகுத்தார் என்பது அறியப்படும். ஆகலான், நாலடியாரை நக்கீரர் பாடினார் என்பது ஒரு சிறிதும் பொருந்தாது. நம்கைக்கு அகப்படாத நூல்வரிசையில் "நக்கீரர் நாலடி நானூற்று வண்ணத்தை" யும் சேர்த்துக்கொள்ளுதல் நல்லதாம்.

இனி, இலக்கண நக்கீரர் கி. பி. 7 ஆம் நூற்றாண்டினர் என்று பிள்ளை அவர்கள் எழுதியுள்ளனர். யாப்பருங்கலக்காரிகை உரைகாரர்,

"ஐஞ்சீர் அடுக்கலும் மண்டில மாக்கலும்
வெண்பா யாப்பிற்கு உரிய வல்ல."

என்னும் சூத்திரத்தை நத்தத்தனார் அடிநூலில் எடுத்தோதினார் என்று இயம்புகின்றார். ஆயின், இச்சூத்திரமே யாப்பருங்கல விருத்தியில் நக்கீரரால் யாக்கப்பெற்றது என்று கூறப்பெறும். இச்சூத்திரம் எழுதியவர் நக்கீரரே; நத்தத்தனார் என்றல் இடையில் தோன்றிய வழு என்பதற்கு,

"சேரும் நேரடிப் பாவிலைஞ் சீரடி
ஏரும் வெள்ளையல் லாவழி என்பது
சோர்வி லாததொல் காப்பியத்து நக்
கீரனார் அடிநூல் உள்ளும் கேட்பவே."

என்னும் கலிவிருத்தம் மேற்கோளாகும். ஆயின், ஒரு சான்றும் உரைக்காமல் "அடிநூல்" கி. பி. 650 இல் எழுந்தது என்னும் வெற்றாகம் பற்றுக்கோடின்றிப் பாடு பெறுகின்றது! மேற்காட்டிய மேற்கோளில் தொல்காப்பியர்க்கு அடுத்து நக்கீரனாரைக் குறித்துள்ளமையான் இவரைக் கடைச்சங்ககால நக்கீரர் என்று கருதலாம். கிடைத்

துள்ள ஒரு சூத்திரத்தைக் கொண்டு காரணம் கூருமல் அடிநூல் ஆசிரியர் கி. பி. 7 ஆம் நூற்ருண்டினர் என்று முடிபுகூர்தல் ஒவ்வாது. கடைச்சங்ககாலப் புலவர் காக்கைபாடினியார் யாத்த சூத்திரங்கள் உரைகாரரால் மேற்கோள் காட்டப்பெறலான், அவராற் காட்டப்பெறும் நக்கீரர்தம் அடிநூலும் கடைச்சங்க காலத்தைச் சார்ந்ததாகல் வேண்டும்.

எனவே, இதுகாறும் எழுதியவாற்ருல், பிள்ளை அவர்கள் கருதுமாறு கி. பி. 7 ஆம் நூற்ருண்டில் நக்கீரர் ஒருவர் விளங்கினுரல்லர் என்பதும்; களவியலுரை, அடிநூல் எழுதியவர் சங்ககாலத்தவர் என்பதும்; நாலடியார்க்கும் நக்கீரர்க்கும் தொடர்பில்லை என்பதும் பிறவும் போதரும்.

## நக்கீரர் IV (கி. பி. 850)

திருமுருகாற்றுப்படை நீங்கிய 11 ஆம் திருமுறையில் ஒன்பது பிரபந்தங்களையும் நக்கீரதேவ நாயனுர் பாடினுரென்றும், அவர்காலம் கி. பி. 850 என்றும் பிள்ளை அவர்கள் எழுதியுள்ளார். கண்ணப்பரைத் திருவாசகத்தில் குறிக்கும் மாணிக்கவாசகர் கி. பி. 9 ஆம் நூற்ருண்டினர் எனக் கருதிக்கொண்டு, "திருக்கண்ணப்ப தேவர் திருமறம்" பாடியகாரணத்தால் நக்கீரதேவ நாயனுரும் அக்காலத்தவரே என்று அறிவிக்கின்ருர். கண்ணப்பரைப் பற்றி இவ்விருவரும் பாடியிருத்தலை மாத்திரம் துணைகொண்டு காலஆராய்ச்சிபுரிதல் சீலமன்று. கி. பி. 7 ஆம் நூற்ருண்டினராகிய காழியூர்ப்பிள்ளை,

"வாய்கலச மாகவழி பாடுசெயும் வேடன்மல ராகுநயனம்
காய்கணையி னுலிடந் தீசனடி கூடுகா ளத்திமலையே."

"கண்ணப்பற் கருள்செய்த கயிலை எங்கள்
அண்ணலா ருராதி யானைக் காவே."

என்றும்; திருநாவுக்கரசர்,

"கண்ணப்பன் கண்ணப்பக் கண்டுகந்தார்."

என்றும்; கி. பி. 8-ஆம் நூற்றாண்டினராகிய ஆரூரர்,

"கண்ணப்பன் கணம்புல்லன் என்றிவர்கள்,
குற்றம் செய்யினும் குணமெனக் கருதும் கொள்கை."

என்றும் கண்ணப்பரின் பெருமையினைப் புகழ்ந்து பரவுகின்றனர். கல்லாடரும் "திருக்கண்ணப்ப தேவர் திருமறம்" என்றொரு பாடலில் பரசுகின்றார். பிற்காலத்துப் பிறங்கிய பட்டினத்துப் பிள்ளையும்,

"...................... தொண்டு செய்து
நாளாறிற் கண்ணிடந் தப்பவல் லேனலன் நாளினிச்சென்
றாளாவதெப்படியோ திருக்காளத்தி அப்பருக்கே."

என்று இயம்புகின்றார். எனவே, மாணிக்கவாசகர் ஒருவர்தாம் கண்ணப்பரைப் பாடியுள்ளார் என்றுகொண்டு நக்கீரதேவ நாயனார் அடிகள் காலத்தவர் என்றல் யாண்டுப் பொருந்தும்? நாயனாரின் கால ஆராய்ச்சிக்குக் கண்ணப்பர் வரலாறு மாத்திரம் உதவாது. நாயனார் தம் ஒன்பது பிரபந்தங்களிலும் குறிக்கும் அடியார்கள் அனைவரின் வரலாறுகளையும் உன்னிப்பாக உற்றுநோக்குதல் வேண்டும். நாயனார் சமய குரவராய சம்பந்தரைப் பற்றியாதல், சொற்கோவைப் பற்றியாதல், சுந்தரரைப் பற்றியாதல் ஓரிடத்தும் பாடினாரல்லர்; மூவர்க்கும் முற்பட்ட சண்டி, கண்ணப்பர், சாக்கியர், கோச்செங்கணார் — இவரையே குறித்துள்ளார்:

"மானுடன் ஆகிய சண்டியை
வானவன் ஆக்கியும்" (கோபப்: 10 - 11)

"கண்ணப்ப ராவார் கதை." (கயிலைபாதி: 912-4)

"கற்கொண் டெறிந்த சாக்கியன் அன்பு
தற்கொண் டின்னருள் தான்மிக வளித்தும்."
(கோபப்: 17-18)

"சீர்மிகு சிலந்திக்கு இன்னர சளித்தும்." (கோபப்: 38)

எனவரும் பகுதிகள் காண்க.

இனி, முருகனைப் பற்றி ஒருசில இடங்களில் உரைக்கும் நாயனுர் மூத்த பிள்ளையாரைப்பற்றி ஓரிடத்தேனும் உரைத்தாரல்லர்: கி. பி. 600-க்குப் பின்னரே விநாயகர் வழிபாடு தமிழகத்தில் நிலவிற்று என்பது ஆராய்ச்சி அறிஞரின் முடிந்த கருத்தாகும். எனவே, நக்கீரதேவ நாயனுர் மூவர்க்கும் முற்பட்டு வாழ்ந்தவர் என்பதும்; கூடக் குறைய கி. பி. 6 ஆம் நூற்றுண்டினராகக் கருதலாம் என்பதும் தெளிவாம்.

நக்கீரர் நால்வர் என்று நவின்ற பிள்ளை அவர்கள் தமது[1] "நெடுநல் வாடையும் நக்கீரரும்" என்ற கட்டுரையில், "இனி நக்கீரரைப்பற்றிச் சிறிது கூறி எனது ஆராய்ச்சியை முடிக்கிறேன்......இவரியற்றிய நூல்கள் முருகாற்றுப்படையும், நெடுநல்வாடையும், பதினேராம் திருமுறையில் சில பிரபந்தங்களுமாம்" என்று சாற்றுகின்றுர். பிள்ளை அவர்கள் ஓரிடத்திற்கூறிய கருத்திற்கும் பிறண்டு வரையும் கருத்திற்கும் வரைக்கும் தரைக்கும் இடையுள்ள வேற்றுமையிருத்தல் தேற்றமாம்.

---

1. "இலக்கியதீபம்" பக்கம் 65

இதுகாறும் இயம்பியவாற்ருன் நக்கீரர் என்ற பெயருடன் இருவரே வாழ்ந்தனர் என்பது தெளிவுற விளங்கும். முதல் நக்கீரர் கரிகாலனைப் பாடியிருத்தலான் அவர்காலம் கி. பி. முதல் நூற்ருண்டாகும் என்று பேராசிரியர் கோ. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் கருதுகின்றனர்.[1] நக்கீரர் காலம், நூல்கள் இனையவற்றை இங்ஙனம் பகுத்துக்காட்டலாம்.

| நக்கீரர் | நூல்கள் | காலம் |
|---|---|---|
| 1. சங்ககால நக்கீரர் | தொகைநூற்பாக்கள், நெடுநல் வாடை, அடிநூல், களவியல் உரை, திருமுருகாற்றுப்படை | கி. பி. 25—100 |
| 2. நக்கீரதேவ நாயனர் | 11-ஆம் திருமுறையில் ஒன்பது நூல்கள் | கி. பி. 500—575 |

---

1. கலைக்களஞ்சியம் VI பக்கம் 264

# சிறந்த தம்பி

சான்றோர்களே! இதுகாறும் பேசிய அன்பர் பரதனைச் சிறந்த தம்பி என முடிவுசெய்தார். அவர் கருத்து சரிதான் என்பதற்கு அவர் சொல்லாற்றல் நன்ருகத் துணை நின்றது. கும்பகர்ணன் என்ற பாத்திரத்தைப் பார்த்து ஆத்திரப்பட்டுப் பேசிவிட்டார். பரதன் குற்றமே இல்லாத குணக்குன்று; பண்பின் உறைவிடம் என்ருல் மனிதப்பிறப்பு எடுக்கத் தேவை இல்லையே. மனிதச் சட்டையை மாட்டிக்கொண்ட குற்றத்திற்காக, மண்ணின் மேல் பிறந்துவிட்ட காரணத்திற்காக அவன் கொஞ்சமாவது குற்றம் உடையவனுகத்தான் இருக்கவேண்டும் என்று சற்காரிய வாதத்தில் நம்பிக்கை உடைய மாற்றுக் கட்சி அன்பர்க்குக் கூறிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

## பெற்ருேரைப் பழிப்பது தகுமா ?

இராமன் நாட்டைத் துறப்பதற்கும் தசரதன் இறப்பதற்கும் கைகேசியே காரணம் எனக் கருதுகிருனே, அது சரியா? காட்டில் வேட்டையாடுங்கால் சலபோசன முனிவனின் மகன் நீர்முகக்கும் பானையின் ஓசையை யானையின் ஓசை என்று எண்ணிக்கொன்ற வினைப்பயன்தான் இராமன் கானகம் செல்லவும், தசரதன் வானகம் செல்லவும் காரணமாகும். கம்பனே அரக்கர் பாவமும் அமரர் அறமும் அடுத்த காரணங்கள் என்பான். இப்படி இருக்க அடாப்பழியை விடாப்பிடியாக ஈன்ற தாயின் தலையில் தூக்கிவைப்பது நீதியா? கன்னியா சுல்கப்படி கைகேசி

யின் மைந்தனுக்கு மகுடம் உரியதாதல், ''உரனில் நீ பிறந்து உரிமை ஆதலால், அரசு நின்னதே ஆள்க'' என்றதால், கணவனின் வாய்மை காக்கத் தெய்வக் கற்பினுள் விழைந்தாள் என நாவலர் ச. சோ. பாரதியார் நவிலுதல் காண்க. தாயைப் பேய், நாய் என்று இழித்துப் பேசி நெருப்பைக்கக்கும் வெறுப்புச் சொற்களை அள்ளி வீசுதல் மாசுடையதன்றோ? பரதன் தந்தையையாவது விட்டுவைத்தானா? ''முழுதுலகளித்த தந்தை முந்தை யோர் முறையினின்றும் வழுவினன்'' என்று தந்தையின் பால் குற்றம் சுமத்துகிறான். முன்னவன் இருக்கப் பின்னவன் ஆட்சி செய்யும் வழக்கு சிறுபான்மை அந் நாளிலேயே உண்டு என்பது வீட்டுமன் வரலாறு விளக்கும். பின்னாளிலும் இளங்கோ துறவிற்குக் காரணம் யாது? காதலுக்காக முடிதுறந்த ஆங்கில இளவரசன் நிலை அனைவரும் அறிந்ததே. இராமாயணச் சான்றும் உண்டு. அண்ணன் வாலியைக் கொன்று அவன்தம்பி சுக்கிரீவனுக்குப் பட்டம் கட்டினானே அது சரியா? வாலியைக் கொன்றதுகூட ஒருவேளை சரியாக இருக்க லாம். வாலிக்குப்பின் வானரப் பேரரசுக்குக், கிட்கிந் தைக்கு வாரிசு வாலியின் மகன் அங்கதனா? அவன் தம்பி சுக்கிரீவனா? இராமனுக்காகத் தூது சென்று இராவணன் எள்ளலும் தள்ளி அஞ்சா நெஞ்சுடன் நீதி ஓதிய நெஞ்சுரம் படைத்த அங்கதன், பண்பாட்டில் சிறிய தந்தையைவிடச் சிறிதும் குறைந்தவனல்லன்.

இராவணன் ஆட்சியை வீடணனுக்குச் சூட்டும் இராமன் செயலையும் நாம் அறிவோம். அண்ணன் செய்தவை எல்லாம் சரி என்றால், அப்பா செய்தது தப்பா? என்று கேட்கிறேன். அண்ணனைப் போற்றுவ

தற்காகப் பெருமை பெறுகிறுன் என்று கூறும் அன்பர்கள் பெற்ருேரைத் தூற்றுவதற்காகச் சிறுமை அடைகிறுன் என்பதைக் கூற ஏனே மறந்துவிட்டனர்! ஒருவேளை, பின்னல் அண்ணன் இங்ஙனம் செயற்பாலன் என்பதை முன்னல் தெரிந்திருந்தால் தந்தையின் செயலைப் பழித் திருக்கமாட்டான்போலும்.

## தம்பி உள்ளான் படைக்கு அஞ்சான்?

பதினன்கு ஆண்டுகள் அண்ணன் பிரிவை ஆற்றி யிருந்த பரதன் அலட்சியமற்றவனுய், இலட்சியமுற்றவனுய் இருந்திருந்தால் அண்ணனைத் தேடிச் சென்றிருப்பான். அண்ணனுடன் தொடர்பு கொண்டிருப்பான். பரதன் வீரத்தில் இராமனுக்கு நம்பிக்கை இருக்குமேல் அறுபதி னுயிரம் அக்குரோணி சேனை அயோத்தியிலிருந்து வந்தி ருக்குமே! வானர உதவியும், வீடண உதவியும் வேண் டியதில்லையே. ஒருவேளை பரதன் வீரம் தாயை எதிர்த்து அஞ்சா நெஞ்சுடன் பேசுதற்குப் பயன்பட்டிருக்கலாம்! தம்பி உள்ளான் படைக்கு அஞ்சான் என்ற சிறப்பினை இராமன் அடையப் பரதன் முன்வந்தானு?

## பரதனின் பாசம்

இடதுபக்கத்து அன்பர்கள் பரதனின் சகோதர வாஞ்சையைப் பெரிதாக்கிக் காட்டினுர்கள். உடன் பிறக்காத குகன், சுக்கிரீவன், வீடணன் முதலியோர் அண்ணன்பால் அன்பைப் பொழியும்போது, இந்த அளவு கூடப் பரதன் அன்பு காட்டவில்லை என்ருல் அறவே சிறப்பற்ற ஒருநிலை அவனை வந்து ஒட்டிக்கொள்ளாதா? ஜனநாயகப் பண்புடைய இராமனுக்கு அன்புசெலுத்திய பரதனைக்காட்டிலும் சர்வாதிகாரப்புத்திபடைத்த இராவண

னுக்கு 'அண்ணன்' என்ற உறவிற்காக வாஞ்சை காட்டிய கும்பகர்ணன் அல்லவா சிறந்தவனுகின்ருன்.

**பரதனுக்குப் பாராட்டு?**

கோசலையே இராமனைவிடச் சிறந்தவன் என்று பரதனைப் பாராட்டுகிருள். "நின்னிலும் நல்லன்" என்று கூறிய அன்பர்கள், கைகேசி இராமனைப் பாராட்டி, "விராவரும் புவிக்கெலாம் வேதமேயன, இராமனைப் பயந்த எற்கு இடையூறு என்" என்று இயம்புதலைக் காண்க. குகனின் வசைமாரிபெற்ற பரதன் இசைமாரியும் பெறுகிருன். வஞ்சனையால் பரதன் ஆட்சிபெற்ருன் என்ற செய்தி எப்படியோ வேட்டுவர் வாழும் காட்டிற்கு எட்டியது. குகன் வசை மொழிகள் அறவே வாய்மை அற்றவையா? ஆயிரம் இராமர்க்கு ஒரு பரதன் என உவமித்ததால் பரதன் மிக உயர்ந்தவனுகிவிட முடியுமா? 'உயர்ந்ததன் மேற்றே உள்ளுங்காலை' என்ற உவமை இலக்கணத்தை உணரவேண்டும். 'பிறர்க்கு நீ உவமம் ஆயினல்லது, பிறர் நினக்கு உவமம் ஆகா ஒருபெரு வேந்தே' என்று பதிற்றுப்பத்தும் பகர்தல் காண்க. பரதனே இராமனைக் காட்டிலும் மேலானவன் என்ருர் அன்பர். அங்ஙனமேல், தன்னேரில்லாத் தலைவன் பரதனுயின் நூலின்பெயர் **இராமாயணம்** என்றில்லாமல் "**பரதாயணம்**" என்றல்லவா இருக்கவேண்டும்!

**கும்பகர்ணன் குறையா?**

கும்பகர்ணனின்பால் இரண்டு குறைகளை எடுத்துக் காட்டினுர்கள். பெருந்தூக்கமும் நிறை உணவும் ஒரு மனிதனுக்குப் பெருங்குறைகள் ஆகா. எல்லார்க்கும் தூக்கம் எளிதாக வராது. எத்துணைபேர் தூக்கம் வராமல்

ஏக்கத்துடன் இருக்கின்றனர். மாத்திரை சாப்பிட்டுத் தூங்குவோரும் உண்டு. கள்ளம் கபடம் இல்லாதவருக்குத்தான் நல்ல தூக்கம் உண்டு. கும்பகர்ணன் தூக்கத்தைப் பெரிதுபடுத்திக் கூறிய அன்பர் அவனைப் பாவைப் பெண்கள் தூக்கத்தில் வென்று விட்டார்கள் என்று ஆண்டாள் பாடுவதைப் படிக்கவேண்டும். (திருப்பாவை) அவன் உடலமைப்புக்கு ஏற்ற உணவுதான் சாப்பிடுகிறான். நோயாளிகள் நிறைய உண்ண முடியாமைக்கு யாரே வருந்துவர்! இனி, உண்மையான கும்பகர்ணனை உங்கள் முன்னால் கொண்டுவந்து நிறுத்துகிறேன்.

### கும்பகர்ணன் குணச்சிறப்பு

பணிவும், துணிவும், பண்பும், அன்பும், வீரமும், தீரமும் மலிந்து பொலிந்து விளங்கும் மாண்புள்ள பாத்திரம் கும்பகர்ணன். ஆன்மா குற்றம் செய்யினும் குணம் எனக்கருதும் கொள்கை கொண்ட ஆண்டவன் கருணையைப்போல், குற்றம் செய்யும் அண்ணனிடத்துப் பாசமும் நேசமும் கொண்டு பழகிய பண்பின் சிகரம். நடுப் பிறந்தானாகிய கும்பகர்ணனிடம் முன்னவன் இடத்தில் இருந்த பிறனில் விழையும் பிழையும் இல்லை. பின்னவன் இடத்தில் இருந்த நன்றிகொன்ற நச்சுத்தன்மையுமில்லை. அண்ணன்பால் அன்புகாட்டும் அருமைத் தம்பியாய், ஆலோசனை கூறும் அறிவுபடைத்த அமைச்சனாய்த், தானையை நடத்திச்செல்லும் தளபதியாய், நேருக்குநேர் போருக்கு நிற்கும் புகழ்படைத்த பெருவீரனாய், நாட்டுப் பற்றுமிக்க நம்பியாய், மான உணர்ச்சிமிக்க மாண்பினனாய், நன்றிக்கடன் முடித்த நல்லோனாய்த்திகழும் கும்பகர்ணனைக் கம்பன் "**குணங்களால் உயர்ந்தான்**" என்று உச்சியில் வைத்து மெச்சுகிறான்.

## அறிவுடை அமைச்சன்

பரதனும், கும்பகர்ணனும் தத்தம் அண்ணனைத் தம் வழிக்குக்கொண்டுவர அரும்பாடுபடுகின்றனர். இராமனுக்கு உரிமை இல்லாத அயோத்தி அரசை ஆளுமாறு வற்புறுத்துகிறான் பரதன். பரதன் பேச்சைக் கேட்டிருந்தால் தந்தை வாக்கைக் காக்காத ஒருநிலையும் தனக்கு உரிமை இல்லாத நாட்டை ஆளும் ஒருநிலையும் ஏற்பட்டு இராமன் பண்பில் ஒரு களங்கம் விளைந்திருக்கும். அண்ணன்பால் வைத்த வாஞ்சை பாராட்டத்தக்கது எனினும் தந்தை இட்ட கட்டளையை மீறிய அநீதி உண்டாகிவிடும். ஆனால் கும்பகர்ணன் இராவணனைக் கண்டித்துப் பேசி நல்வழிக்குக் கொணர முயல்கிறான். அநீதி இழைக்கத் தூண்டும் பரதனைவிட நீதிபுரியத் தூண்டும் கும்பகர்ணன் ஒருபடி உயர்ந்தவன் ஆகிறான். அரக்கர்கோமான் அடியில் முடியை வைத்து மலை கிடந்தது போல வணங்கினான் கும்பகர்ணன். புலால் உணவூட்டிப் போர்க்கோலம் புனைந்து அருமைத்தம்பியே! வானரப் படையுடன் இராம இலக்குவர் இலங்கையை வளைத்து முற்றுகையிட்டனர். செருக்களம் நோக்கிச்சென்று பகைவரைக்கொன்று தின்று, வென்றுவா என்று இயம்பினான் இராவணன். விண்ணையும் மண்ணையும் ஏவல்கொண்டு காவல்புரியும் அண்ணனை நோக்கி அவன் பிழையை எடுத்துக்காட்டி இடித்துக்கூறிப் "புலத்தியன் குலத்தியல் நலத்தினைக் குலைக்கக் கருதிவிட்டாயே, நெருப்பிலே விருப்பமா? திட்டியின் விடமன்ன கற்பின் செல்வியை விட்டுவிடுவாய்; இல்லையேல் கெட்டுவிடுவாய்" என்று நீதி ஓதினான். அவன் போதனை இராவணனுக்கு வேதனையாகவே விளங்கியது. கும்பகர்ணன் ஒருபோதும் அண்ணன் கீறிய கோட்டினை மீறியதே இல்லை. அவன்

கூறிய சொற்களைக் கேட்டுச் சீறிஎழுந்தான் இராவணன். ‘அறிவுடை அமைச்சன் நீயல்லை; வெறுவிது உன்வீரம்; போய்த்தூங்கு’ என்று எரிந்து வீழ்ந்தான். குமுறிக் கொதிக்கும் அண்ணனை நோக்கிக் கும்பகர்ணன், “அண்ணனே! உன்னைப் பண்படுத்தப் பேசினேன்; புண்படுத்த அல்ல. திருந்துவாய் என்று பேசினேன்; வருந்துவாய் என்று தெரியாது. விதி பிடர்பிடித்துத் தள்ளுகிறது. உனக்கு ஏதாவது பிழை இழைத்திருந்தால் மன்னித்துவிடு. கற்பின் செல்வியை இராமன்பால் விட்டுவிடு” என முழங்கிய வண்ணமே போர்க்களம் நோக்கிப் புறப்பட்டான் என்றால் அவனல்லவா நீதிமான்; அவனல்லவா சிறந்த தம்பி! சாதியால் வந்த சிறுநெறி படைத்தவன் இராவணன் என்றால் நீதியால் வந்த நெடுந்தரும நெறியினன் கும்பகர்ணனே எனலாம்.

### புரந்தரர் கண் நீர்மல்க......

நாட்டையும், மண்ணையும் காக்கவும் நன்றிக்கடன் செலுத்தவும் அரக்கர்புரியும் போர் அறப்போர். ‘‘அரக்கர் ஆக்கையை அரம்பையர் தழுவினர் விரும்பி’’ எனக் கம்பன் பாடுகிறான். ‘அறஞ்செய்வான் துறக்கம் புகும்’ என்பர் உரையாசிரியர்கள். இராவணன் புலம்புகிறான்:

> “தம்பியோ வானவராம் தாமரையின் காடுழக்கும்
> தும்பியோ நான்முகத்தான் செய்மதலை தோன்றலோ
> நம்பியோ இந்திரனை நாமப் பொறிதுடைத்த
> எம்பியோ ...”
>
> ‘வந்தேன் தொடர மதக்களிறே வந்தேறல்’

என்று புரந்தரர்கண் நீர்மல்கிப் பல்கிக் கதறிப்பதறிப் புலம்புமாறு கிடைக்கும் இறப்பு சிறப்புடையது. அஃது

இரந்தாவது பெறுதற்கு உரியது என்ற வள்ளுவன் வாய் மொழிக்கு இலக்கியமாய் இலங்குகிருன் கும்பகர்ணன்.

**அரசியல் நாகரிகம்**

கும்பகர்ணனின் தோற்றப் பொலிவில் ஈடுபட்ட இராமன் வீடணனை நோக்கி "ஒரு தோளில் இருந்து மறுதோள்வரை பார்த்து முடிக்கப் பலநாள் செல்லுமே; ஆள் எனத்தெரியவில்லை யார் இவன்" என்று வினவினுன். விண்ணவரை வென்ற வீரன், இந்திரனைக் கலக்கிய ஏந்தல், தவம் பல புரிந்து வரம் பல பெற்ற வள்ளல், சிவநேசச்செல்வன், சீதையை விடுதலைசெய்ய இராவணனிடம் மன்ருடி நீதி ஓதியமேதை என்று உருக்கத்துடனும் அன்புப் பெருக்கத்துடனும் வீடணன் விடையிறுத்தான். 'இவனுடன் போர்புரிதல் பிழை என இராமன் எண்ணும் அளவிற்குக் கும்பகர்ணன் உயர்ந்து விளங்குகிருன். இவனை வசப்படுத்திக் கொள்ள வீடணனை அனுப்புகிருன் இராமன்.

'அண்ணனே! இராவணனை விட்டுவிட்டு எங்கள் கட்சிக்கு வந்துவிடு; இராமன் எனக்குக் கொடுத்த இலங்கை ஆட்சி, மகுடம், செல்வம், மோட்சம் எல்லாம் இராமனிடம் சொல்லி வாங்கித் தருகிறேன்!' என்று வீடணன் விளம்பினுன். "அண்ணன் உயிருடன் இருக்கும் போதே, ஆட்சியைக் கைநீட்டி வாங்கிவிட்டாயே! இலங்கை ஆட்சிக்கும் இராமன் தரும் மோட்சத்திற்கும் அண்ணனைப்பேரம் பேசிவிட்டாயே! பகைவனின் கைக் கூலியே! ஐந்தாம்படையே! பாசத்தைப் பலியிட்டாயே, தேசத்துரோகியே என்று வீடணனைத் தூடணையாகப் பேசவில்லை. வீடணனின் நீதிக்கொள்கையில், கருத்

துரிமையில் குறுக்கிடாத அரசியல் நாகரிகம் கும்பகர்ணன் பால் பொலியக் காண்கிறோம்.

## இலட்சியப் போர்

அற உள்ளம் படைத்த ஆன்றோன் ஆட்சிக்காக அண்ணனைக் கொல்லத் துணிவதா? மோட்சத்திற்காக அண்ணனை மோசம் செய்வதா? மேல் உலகம் இல்லெனினும் தன் உயிரை அண்ணனுக்காக ஈதலே மேல் என்று வள்ளுவனுக்கும் வழிகாட்டியாக விளங்குகிறான். எனவேதான், இராமன் கொடுக்கும் அமிழ்தத்தை அருந்தச் செல்; இராவணன் கொடுக்கும் நஞ்சு எனக்குப் போதும் என்கிறான். 'அமுதுண்பாய் நஞ்சுண்பாயோ' இராவணன் தனக்குத் தந்தது இறப்பிற்கு உரிய நஞ்சு என்பதைத் தெரிந்தும் 'பெயக்கண்டு, நஞ்சுண்டமையும் நயத்தக்க நாகரிகம்' கும்பகர்ணனைக் கோபுரம்போல் உயர்த்திக் காட்டுகிறது.

அற்றகுளத்து அறுநீர்ப் பறவைபோல் வாழாமல் நீர் இருக்கும் வரை இருந்து நீர் வற்றியதும் உடனிருந்து மடிந்துவிடும் கொட்டியும், ஆம்பலும், நெய்தலும்போல் வாழ்தலே அறம் எனக்கருதிய ஆன்றோன் கும்பகர்ணன். படைத்தலைவன் கட்டளையை ஏற்று நடத்தலே படை மறவர் கடமை. ஏன் என்ன என்ற வினாவிற்கே இடமில்லை. செய், அல்லது செத்துமடி என்பதே விதி. படைத்தலைவன் நல்லானா பொல்லானா என மறவர் எண்ணவோ பின்வாங்கவோ இடம் இல்லை. நாட்டுத்தலைவனே படைத்தலைவன். இராவணன் ஆட்டியபடி கும்பகர்ணன் முதலானோர் ஆடவேண்டிய நிர்ப்பந்தம். ஆங்கில நாட்டு அரசவைக் கவிஞர் டென்னிஸன்,

Their's not to make reply,
Their's not to reason why,
Their's but to do and die;
Into the Valley of Death
Rode the Six hundred.

(From "The charge of the Light Brigade)

என்று பாடுதல் காண்க.[1]

சிலர் இருக்கிறார்கள் இறப்பதற்காக; சிலர் இறக்கிறார்கள் இருப்பதற்காக. தம்பியைப் பார்த்துத்,

"தலைவன் நீ உலகுக்கெல்லாம் உனக்கது தக்கதேயால்
புலையுறு மரணமேனும் எனக்கது புகழதேயால்"

என்று இயம்புகிறான். புகழ் எனின் உயிரும் கொடுக்கும் கும்பகர்ணன் பழி எனின் உலகுடன் பெறினும் மறுக்கும் மாண்பினைக் காண்கிறோம்.

அண்ணனைப் பலியிட்டு ஆட்சிசெய்வது மாட்சியா? அண்ணன் செய்தது பிழைதான். பிழையைச் சுட்டிக் காட்டித் திருத்தப்பார்க்கிறான். திருந்தவில்லை என்றால் மூவுலகையும் ஒருகுடைக்கீழ் ஆண்ட அண்ணனை அபலையாக, அனாதையாக விட்டுவிட்டு ஓடிப்போய் மாற்றான் காலில் மண்டியிட்டு அரசியல் இரகசியங்களை எல்லாம் அம்பலப்படுத்தித் தேசத் துரோகத்திற்குப் பரிசாக ஆட்சியும் மோட்சமும் பெறுவதற்குக் கும்பகர்ணன் நெஞ்சம் கொஞ்சம்கூடத் துணியவில்லை. வாழ்ந்தால் எல்லோரும் வாழ்வோம், வீழ்ந்தால் எல்லோரும் வீழ்வோம் என்ற ஒருமைப்பாட்டில் ஓங்கி நிற்கிறது அவன் உள்ளம்.

---

1. Tennyson–Selection & Commentary page 130-1 by Hester Burton.

வாழ்க்கைத் தத்துவத்தைக் கும்பகர்ணன் அலசி ஆராய்ந்தவன். வாழ்க்கை நீர்மேல் எழுத்துப்போன்றது. கேவலம், அழியும் வாழ்வில் ஆசைவைத்து அன்புடன் அரவணைத்து, அறுசுவையூட்டி வளர்த்துவிட்ட அண்ணனுக்கு நன்றிக்கடன் செலுத்தாமல் தப்பித்துக்கொள்ளும் சிறுமை கும்பகர்ணன்பால் இல்லை.

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு"

"ஒருவர்செய்தி கொன்றார்க்கு உய்தியில் எனும்
குன்றாவாய்மை நின்றுநிலை காட்டி" (கல்லாடம் 13)

என வருவன காண்க.

மான உணர்ச்சி மனிதர்க்குத்தேவை. தங்கையை அங்கப் பங்கப் படுத்திய பகைவன் பக்கத்தில் நெஞ்சம் படைத்தவன் தஞ்சம் புகுவானா? தங்கையின் சிறுமைச் செயல் தமையனுக்கு எப்படித்தெரியும்? கள்ளம் இல்லாத உள்ளத்தில் தங்கையின்பால் கொண்ட நேசம் ஊசலாடிக்கொண்டே இருக்கிறது. மான உணர்ச்சியுடன் பேசுகிறான்.

'வம்பிட்ட தெரியல் எம்முன் உயிர்கொண்ட
பகையை வாழ்த்திக்
கும்பிட்டு வாழ்கிலேன்யான் கூற்றையும் ஆடல்கொண்டேன்'

'பெய்தவத்தினேர் பெண்கொடி எம் உழைப்பிறந்தாள்
செய்தகுற்றம் ஒன்றில்லவள் நாசி வெஞ்சினத்தால்
கொய்த கொற்றவ மற்றவள் கூந்தல் தொட்டீர்த்த
கைதலத்திடைக் கிடத்துவன் காக்குதி என்றான்!'

## தம்பி உள்ளான் படைக்கு அஞ்சான்

எதிர்க்கட்சியில் பெரும் பெரும் வீரர்கள். அவதார புருஷனாகிய இராமன், சுமந்திரையின் சிங்கம் இலக்குவன், விஸ்வரூபம் எடுத்து விண்ணிற் பறக்கும் அனுமான், வாலியின் மைந்தன் அங்கதன், சுக்கிரீவன், ஜாம்பவான் முதல் எழுபதுவெள்ளம் படைமறவர்கள் எதிர்க்கின்றனர். இத்துணைப்பேரையும் தான் ஒருவனே சமாளிக்கிறான். வானரங்கள் விட்டெறிந்த மலைகள் இவன் மேனியில் பட்டுப் பொட்டுப் பொட்டாகப் பொடிந்து போயின. பகைவரை ஊழிக்காற்றுப்போல் பூமிப்படுத்தினான். கும்பகர்ணனின் வீரச்செயல்களைக் கம்பன் பாடுகிறான்:

குன்றின்மீது எறியும்; பாரில் புடைக்கும்; வெங்குரங்கைப்பற்றி
ஒன்று கொண்டொன்றை எற்றும்; உதைக்கும், விட்டுழக்கும், வாரித்
தின்று தின்றுமிழும்; பற்றிச் சிரங்களைத் திருகும் தேய்க்கும்,
மென்று மென்றுமிழும்; விண்ணில் விசுமேற் பிசைந்து பூசும்.

கும்பகர்ணன் வீசிய வயிரத்தண்டினை வாலி மைந்தன் கையால் பிடித்துச் சுழற்றிக்கொண்டே முன் நோக்கி விரைந்தான். நீயார் என்றான் கும்பகர்ணன். 'நும்முனை வாலிற் சுற்றி நோன்திசை நான்கும்' திரிந்த வாலியின் மகன் என்றான். அங்கதனை நோக்கி அங்கதம் பேசுகிறான் கும்பகர்ணன்:

'உந்தையை மறைந்தோர் அம்பால் உயிருண்ட உதவிபோற்குப்
பந்தனைப் பகையைச் செற்றுக் கொடுக்கிலை என்னில் பாரோர்
நிந்தனை நின்னைச் செய்வார் நல்லது நினைந்தாய் நேரே
வந்தனை புரிவர் அன்றே வீரராய் வசையில் தீர்ந்தார்'

அங்கதன் ஓங்கிய வயிரத்தண்டினைத் தூள் தூளாக்கி நையப்புடைத்தான் கும்பகர்ணன். வீழ்ந்துகிடந்த அங்கதனைக்காக்க அனுமன் விரைந்து வியன்மலையைப் பிடுங்கி வீசினான். அது கும்பகர்ணன் தலையில் தொத்திக் கொண்டது. பெயர்த்து எடுத்து அனுமன்மீது விடுத்தான். மாருதி மயங்கினான், அஞ்சிக் குலைந்தான். சஞ்சீவி பர்வதத்தையே ஒற்றைக்கையில் தூக்கி உலகைச் சுற்றிவரக்கூடிய ஆற்றல் படைத்த அனுமன் தோற்றுப் புறங்காட்டி இனிச் சண்டை செய்வதில்லை எனச் சபதம் எடுக்கிறான். கும்பகர்ணனின் பேராற்றலுக்கு முன் இராமபாணம் நிற்கமுடியுமா என நைந்துரைக்கிறான்.

"துளக்குறு நிலையன் அல்லன் சுந்தரத் தோளன் வாளி
பிளக்குமேல் பிளக்குமென்று மாருதி பெயர்ந்து போனான்"

"ஆக்கினான் களத்தின் ஆங்கோர் குரக்கினதடியு மின்றிப்
போக்கினான் ஆண்மையாலே புதுக்கினான் புகழை அம்மா"

மாருதி இலங்கையை எரியூட்டியதாலும், இராம இராவண முதற் போரினாலும் இடிந்த புகழ்க்கோட்டையைக் கும்பகர்ணன் புதுப்பித்தான்; பொலிவுறச் செய்தான். புகழ் புதுக்கிய பெருவீரன் போர்க்களத்தில் இராம இலக்குவர் எங்கு மறைந்தனர் எனக் கொக்கரிக்கிறான்:

"தாபதர் என்னத் தக்கோர்,
இங்குற்றார் அல்லரோதான் வேறுமோர் இலங்கை
எங்குற்றார் எங்குற்றார்." [உண்டோ

போர்க்களத்தில் இராமனை நோக்கிக்கூறும் வஞ்சினச் சொற்கள் கும்பகர்ணனின் அஞ்சா நெஞ்சுரத்தைக் காட்டும்.

மாக்கவந்தனும் வலி தொலைந்த வாலியாம்
பூக்கவர்ந் துண்ணியும் போலும் என்றெனைத்
தாக்க வந்தனை; இவன் தன்னை இன்னுயிர்
காக்க வந்தனை; இது காணத் தக்கதால்.

உம்பியை முனிந்திலேன் அவனுக்கு ஊர்தியாம்
நம்பியை முனிந்திலேன் நயக்கும் வாலிதன்
தம்பியை முனிந்திலேன் சமரம் தன்னில் யான்
அம்பியல் சிலையினுய் அழகன் ருதலால்.

தேடினன் திரிந்தனன் நின்னை; திக்கிறந்து
ஓடியது உன்படை; உம்பி ஓய்ந்தொரு
பாடுற நடந்தனன்; அனுமன் பாறினன்
ஈடுறும் இவனைக் கொண்டெளிதின் எய்தினேன்.

இராமன் தொடுத்து விடுத்த அம்புகளை எல்லாம் அறுத்து முறித்துவிட்டான். கும்பகர்ணனைக் கொல்லவும் முடியவில்லை; வெல்லவும் முடியவில்லை. வசப்படுத்தப் பார்க்கிருன் இராமன். தன்பால் வந்துவிடு எனக்கேட்கிருன். "...பழியோரும், கருத்தினல் வருஞ்சேவகன் அல்லையோ சேவகர் கடன் ஓராய் ...... தக்கது புகன்றிலை" எனக் கர்மவீரனுய்க் காட்சியளிக்கிருன். கும்பகர்ணனின் சிவ கவசத்தைப் பிளக்க முடியாமல் இராமபாணம் தவிக்கிறது. 'கண்ணுதற் பெருங்கடவுள்தன் கவசத்தைக் கடந்தில கதிர்வாளி'. சிவகவசத்தை இராமன் அம்பால் கிழிக்க முடியவில்லை. இராமனுக்குச் சிவன் நல்கியிருந்த அம்பைத் தொடுத்துத்தான் அகற்றுகிருன். பெரு வீரனுகிய வாலியைக் கொல்ல ஒரே அம்பு போதும். கோடிக்கணக்கான அம்புகள் விட்டும் கும்பகர்ணனைக் கொல்ல முடியவில்லை. உறுப்பற்ற நிலையிலும், வெறுப் பற்ற வீரத்துடன் போர்புரிகிருன்.

"வேயினுல் திணிவெற்பொன்று நாவினுல் விசும்புற வளைத்தேந்தி
வாயினுல் செல விசினன் வள்ளலும் மலர்க்கரம் விதிர்த்திட்டான்"

நடுங்காத இராமன் கை நடுங்கிவிட்டது. விழித்தகண் வேல்கொண்டெறிய அழித்திமைப்பின் ஓட்டன்றோ வன் கணவர்க்கு என வீர இலக்கணம் பேசுகிறது. போர்க் களத்தில் நுண்ணுறுப்பாகிய கண் அசைந்து விட்டாலே தோல்வியாகும் என்கிருர் வள்ளுவர். திண்மை உறுப் பாகிய கையே விதிர்ப்புற்று நடுங்கின என்று கம்பன் அறிவிப்பதால் கும்பகர்ணன் பெற்ற வெற்றியின் பெற் றியை நீங்களே எண்ணிப்பாருங்கள். நன்றி உணர்ச்சி யுடன் போரிட்ட கும்பகர்ணன் பெற்ற பரிசு கம்பனையும் கவர்ந்தது. 'தறுகணர்க்கு அரசன்' என்று பாராட்டப் பெறுகிருன்.

### மாற்ருரை மதித்தல்

வானவர் உவப்ப இலக்குவன் எழிற்சிங்கம்போல் சீறி எழுந்து அரக்கர்களை நொறுக்கி ஆர்ப்பாட்டம் செய் தான். வெள்ளிமலைமேல் விளங்கும் பொன்மலைபோல் அனுமன் தோளில் இலக்குவன் விளங்குகிருன். அவன் ஆற்றலை நேராகக்கண்ட கும்பகர்ணன் 'இவனல்லவா சிறந்த வீரன்' என்று இலக்குவனை மனமாரப் பாராட்டி ஞன்.

"திரிபுரஞ்செற்ற தேவனும் இவனுமே செருவில்
ஒருவில்லாளர் என்ருயிரம் கால் எடுத்துரைத்தான்"

பகைவரின் ஆற்றலைப் போற்றிப்புகழும் போர் நாகரிகம் கும்பகர்ணனின் குணமாண்பினை ஒருபடி உயர்த்துகிறது.

**ஊராண்மை**

படைக்கலமற்றும் மூர்ச்சித்தும் கிடக்கும் பகைவனை வன்கண்மையாகத் தாக்காமல் அன்புகாட்டும் பண்பினைத் தான் ஊராண்மை என்பர் வள்ளுவர். போர் அறத்தில் பேர் அறம் ஊராண்மை. அமர்க்களத்தில் மூர்ச்சித்துக் கிடந்த சுக்கிரீவனைக் கொன்றுவிடாமல், சிறைக் கைதியாகத் தூக்கிச்சென்றான் கும்பகர்ணன். ஆனால் இராமன் கணைகளால் கும்பகர்ணன் மூர்ச்சித்துக் கிடந்தபோது இதுதான் சமயம் என்று அவசரம் அவசரமாக மூக்கையும் செவியையும் பறித்துக்கொண்டு (திருடிக்கொண்டு) ஓடுகிறான் சுக்கிரீவன். இந்தச் சிறுமையினைக் கம்பனே கண்டித்துப் பாடுகிறான்.

"மத்தகம் பிளந்துமா டுருவ வார்சிலை
வித்தகன் சரம்தொட மெலிவு தோன்றிடச்
சித்திரம் பெறுதலிற் செவியும் மூக்கும்கொண்டு
அத்திசை போயினன் அல்லது ஒண்ணுமோ"

எனக் கேட்கிறான். நாகரிகத்தின் உச்சியில் நிற்பதாகச் சொல்லும் இக்காலத்தில் 'ஊராண்மை' என்னும் அறப் பண்பு உலகப் பெருவீரர்பால் மருந்துக்குக்கூடக் கிடைக்காது என்பதை எண்ணுங்கால் கும்பகர்ணனின் நேரிய வீரம் சீரிய நிலைபெறுதல் திண்ணம்.

**தியாகச் செம்மல்**

இறுதி உறுதியாகும் வேளையில் மனித உருத்தாங்கிய புனிதத்தெய்வத்தை, இராமனை நோக்கிக் கும்பகர்ணன் வரம் கேட்கிறான். தனக்கு மோட்சம் வேண்டும் என்றா? அல்ல. அப்போதும் தன்னலமற்ற உள்ளத்துடன் தன் தம்பியைத் தன் அண்ணன் கொல்லாமல் பாதுகாக்க வேண்டும் எனப்பன்முறையும் உருக்கத்துடன்கேட்கிறான்:

"தம்பியென நினைந்திரங்கித் தவிரான் அத்தகவில்லான்
நம்பியவன் தனைக்காணில் கொல்லும் இறை நல்கானல்
உம்பியைத்தான் உன்னைத்தான் அனுமனைத்தான்
ஒருபொழுதும்
எம்பி பிரியானுக அருளுதியான் வேண்டினேன்"

பரதன் அண்ணன்பால் மாத்திரமே மிகுந்த அன்புடைய வன்; ஆனல் கும்பகர்ணனே அண்ணன்பால் எந்த அளவு அன்புடையனே அதற்கு நிகராகத் தம்பியின்பாலும் நிறைந்த அன்புடையனுகத் திகழ்கிருன் என்ருல் அவ னல்லவா சிறந்த தம்பி!

## கும்பகர்ணன்—அடிகள்

பரம வைண்வராகிய பிள்ளைப்பெருமாள் ஐயங்கார்
'ஆதியாய்! அரவணையாய் என்பாராகில்
அவர்கண்டீர் நாம்வணங்கும் அடிகளாரே'

என்று வழிபாடு செய்கிருர். கும்பகர்ணன் இராமனை நோக்கி,

"ஆதியாய்! உனைஅடைந்தான் அரசர் உருக்கொண்டமைந்த
வேதியா இன்னம் உனக்கடைக்கலம்யான் வேண்டினேன்"

என விண்ணப்பிக்கிருன். வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்த கும்பகர்ணன் வானுறையும் தெய்வத்துள் வைக் கப்படும் செம்மலாகத் திகழ்கிருன். பிள்ளைப்பெருமாளின் கொள்கைப்படி தெய்வமாக மதிக்கத் திணறுவோர் பரதாழ்வாரைப்போல் கும்பகர்ணனையும் ஆழ்வாராக மதிக்கலாம் அன்ருே? கும்பகர்ணனின் தோற்றம்போல் ஏற்றமும் ஓங்கி நிற்கிறது!

# திருவாசகம்

## திருவாசகம் என்னும் தேன்

தேன் இனிக்கும்; இன்பம் பயக்கும்; அருமருந்தாகி நோய் நீக்கும். திருவாசகத்தேன் இனிக்கும்; இன்பம் பயக்கும்; அறியாமை நோய்க்கும் பிறவிப் பிணிக்கும் அரு மருந்தாகி நன்றின்பால் உய்க்கும். தேன் தூயமலரிற் பிறக்கும்; இத்திருவாசகத்தேன் தூய மலர்வாயிற்பிறந்தது. மலர்த்தேன் வாய்ப்பொறி ஒன்றற்கே சுவைபயப்பது; வாசகத்தேன் ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாச்சுவை ஊட்டவல்லது. தேனைப் பெறுமாறென்னை? பல மலர் களிற் பொழுதறிந்து புக்கு, ஞிமிறினங்கள் தேன் துளி களைச் சுவைக்குமாறு போலத், திருவாசகத்துப் பாக்களில் தோழர்கள் தோய்ந்து துய்க்குமாற்றைக் காண்கின்றோம். பல மலர்களிலும் ததும்பிக் கிடக்கும் தேன் துளிகளைக் கூட்டிக் கொணர்ந்து இருலில் அமைத்துத் தமக்கும், பிறர்க்கும் பயன்நல்கும் சுரும்பினங்கள். திருவாசகம் தேனிருல் என்க. தமக்கும் பிறர்க்கும் உறுதுணையா மாறு பல்லாற்றாற் கண்டறிந்த தேன் போன்ற கருத்துக் கள் துறுமிய பாக்களால் இவ்விருலை யாத்தார் மாணிக்க வாசகர்.

அடிகளாரின் அருள்பழுத்த குரலும், அன்பு கனிந்த மொழி அழகும், ஆற்றொழுக்கான நடைப்பொலிவும், கவினியகருத்துப் பொதுளிய கவிமாண்பும் கற்போர்க்குக் கரையிலா மகிழ்வும் வரையிலா உணர்வும் வழங்கும் கருவூலங்களாகும்.

## அடிகளின் வரலாறு

அடிகள் எக்காலத்தினர், அவர்தம் பெற்றோர் யாவர், அறவியாய் எத்துணை யாண்டு கழித்துப்பின் துறவியாஞர் என்ற விஞக்களுக்கு எல்லோரும் ஏற்குமாறு விடையிறுத்தார் இலர். அடிகள் திருவாதவூரில் தோன்றியவர் என்பதற்கு நம்பியாண்டார் நம்பியின் பாடலில் சான்றுள்ளது. அரிமர்த்தன பாண்டியனின் அமைச்சராய் விளங்கித் தென்னவன் பிரமராயன் எனப்பட்டமும் பெற்ருர். பாண்டியன் வேண்டிய வண்ணம் புரவிகள் வாங்கச் சென்ற வழியில் திருப்பெருந்துறையில் குருந்த மரத்தின் நீழலில் குருபரனைக் கண்டு பணிந்தார். குருவடிவாக வந்த பெருமான் திருநோக்கால் பரிசத்தால் திகழும் வாக்கால் ஞானதீக்கை செய்தருளினர். உள்ளம் உருக அருட்கவி பாடிய வாதவூரர்க்கு 'மாணிக்கவாசகர்' என்று திருப்பெயர் சூட்டினுர். அரசன் வியக்கும் வண்ணம் இறைவனே அடிகளுக்காக நரி பரியாதல், பரி நரியாதல், வையைக்கரை அமைத்தல் முதலிய அற்புதங்கள் நிகழ்த்தினன். செல்வன் கழலேத்தும் செல்வமே செல்வம் எனக்கொண்ட மாணிக்கவாசகர் திருப்பெருந்துறை, உத்தரகோசமங்கை, திருவிடைமருதூர், திருவாரூர், திருக்கழுக்குன்றம், திருவண்ணுமலை, தில்லை முதலிய திருத்தலங்களை வழிபட்டு மனம் உருகிப் பாடினுர். பிறபதிகளைவிடத் தில்லையம் பதியைப் பற்றிய திருவாசகப் பாடல்களே மிகுதி. அடிகளாரின் கோவை முழுமையும் தில்லையம்பலவாணனின் பேரருள் சிறப்பினையே வழுத்தும். பொதுமன்றின்கண் இறையவன் மறையவனுய் வந்து அடிகள் அருளிய திருவாசகத்தையும் திருக்கோவையாரையும் படி எடுத்துக் கைச் சாத்திட்டு மறைந்தருளினுன். அடிகள் முதுமை கதுவா முன்னமே தமது முப்பத்திரண்

டாம் அகவையில் சிவனடி நீழல் எய்திய தொழும்பர் என்பது பழம்பாட்டொன்றால் புலனாகின்றது.

அடிகளின் வரலாறு கல்லாடம், திருவிளையாடற் புராணம், திருவாதவூரர் புராணம், திருஉத்தரகோசமங் கைப் புராணம் முதலிய நூல்களில் சிற்சில மாற்றங்க ளுடன் காணப்பெறும். திருமுறை நூல்களைத் தொகுத்த நம்பியாண்டார் நம்பி,

"வருவா சகத்தின் முற்றுமுணர்ந் தோனைவண் தில்லைமன்னைத்
திருவாத வூர்ச்சிவ பாத்தியன் செய்திருச் சிற்றம்பலப்
பொருளார் தருதிருக் கோவைகண்டேயுமற் றப்பொருளைத்
தெருளாத உள்ளத் தவர்கவி பாடிச் சிரிப்பிப்பரே"

என்று மாணிக்கவாசகர் பாமாண்பினைப் பாராட்டுகிறார். அடிகள் காலம் கி. பி- 9-ம் நூற்றாண்டு என்ற தஞ்சைத் திரு. சீனிவாசப் பிள்ளை அவர்கள் கருத்தினை மறுத்தும் மூவர்க்கும் அடிகள் முற்பட்டவர் என நிறுவியும் அறிஞர் ஒருவர் ஆராய்ந்துள்ளார்.[1] இக்கருத்து இன்னும் ஆய் விற்கு உரியது.

## தமிழர் சமயம்

சமயம் என்ற சொல்லாட்சி சங்க இலக்கியங்களில் இல்லை. எனினும் அற்றைத் தமிழகத்தில் சமயக்கருத் துக்கள் நிலவின. கி. பி. ஐந்து அல்லது ஆறும் நூற்றாண் டில் தோன்றிய மணிமேகலையில் சமயக்கணக்கர் தம் திறங் கேட்டகாதை என்றொரு நூற்பகுதி உண்டு. அதனுட் சிவநெறிக் கொள்கைகளைச் செப்பும் சீரியோரும் புறச்சமயங்களைப் பற்றிப் புகலும் அறநெறியாளரும்

---

1. Journal of Oriental Research (Madras) 1957.

வயங்கக்காண்டுமன்றே? ஆகலான் அற்றை ஞான்றும் சைவமுடன் பிற சமயங்களும் தழைத்திலங்கின என்பது பெற்றும். இனி 'சமயம்' வடசொல்லாகக் கருதப்படுதலான் சமயக்கொள்கைகளும் வடவர்க்கன்றே உரியவை என்பர் சிலர். வழங்கும் சொல் வட மொழிக்கே உரியதாகலான் அச்சொல்லாற் குறிக்கப் பெறும் கருத்துக்களும் வடவர்க்கே உரியவை என்பார் கூற்று செல்லாது. என்னை? ஆங்கில நூல்களைக் கற்றுத் துறைபோய தமிழனொருவன் தனதுள்ளத்திற் பிறந்த தமிழ்க் கொள்கைகளை அப் பிறமொழியிற் கூறுதலான் அவையெல்லாம் ஆங்கிலக் கொள்கைகளே என்று இயம்புநரும் உளரோ? அற்றைநாட் பிறமொழி பயிலுதல் இற்றைநாட்போல நாகரிகத்தின் பாற்படுவதாகக் கருதப் பட்டமையானும் புறச்சமயங்களெல்லாம் வடமொழியையே பெரிதும்பற்றி நின்றமையானும் தமிழரும் கடவுட்கொள்கை களை அம்மொழியிற்கூறுதல் தகவுடைத்தாமெனக் கருதின ராதல் வேண்டும். தமிழர் தாம் கொண்ட கடவுட் கொள்கைகளைக் கடைப்பிடித்து மெய்புணர்வுற்றுத் திகழ்ந் தனரென்பது தொன்னூற்களால் பெறப்படும் உண்மை யாகும். சங்ககாலத்துத் தமிழர் தம் 'சமயம்' கடவுட் கொள்கைகளைப் பிறநாட்டிற்கும் போந்து பரப்பும் இயக்க மாகவோ, கட்சியாகவோ இல்லை. அவ்வாறமையாமை எற்றுக்கோ என்னில், தமிழ் மக்கள் பலரும் கடவுட் கொள்கையுடையராய் இருந்தனராதலின் அக்கொள்கை யைத் தமக்குட்பரப்ப ஓரியக்கம் வேண்டப்படாமையின் என்க. ஆயின், வடநாட்டிற் பிறந்த சமண புத்தக் கொள்கைகள் சமயங்களாக, இயக்கங்களாகத் தமிழ் நாட்டிற் புகுந்தன. அச்சமயத்தார் தமிழ் பயின்று ஒல்லும் வகைத் தொண்டாற்றி ஒண்டமிழ்நாட்டில் இடம்பெற்று

அமைவுடையோராய்த் தமது சமயம் பரப்பினர். ஆகலான் தமிழர் வேற்றூர் கொள்கையில் காழ்ப்பும் கசப்புங் கொண்டு கலாம் விளேத்திலர்.

### திருமுறை தோன்றக் காரணம்

நாளடைவில் புறச்சமயத்தார் தமது சமயக் கோட்பாட்டுக்குப் புறம்பாய இசை, அகப்பொருட்பா, கூத்துத் தமிழ் முதலிய தமிழ்ச்சுவை ஒருவித் தமது கோள் நிறுவுவதற்காக அறம் பிறழ்ந்த வழி குறுகினர். அவ்வாறு நிகழ்த்திய காலந்தொறும் தமிழரின் பண்பாட்டையும், கடவுட்கொள்கையையும், தமிழ் இசையையும் அகப்பொருட் பாநலத்தையும் ஓம்பிப் புரத்தற்காகத் தமிழ்த் தாயின் தவப்பயனுய் மாணிக்கவாசகரும் மூவர் முதலிகளும் பிறரும் முகிழ்த்தனர்.

சென்னிஒதியில் அடரும் பேனேக்குத்தலும், எறும்பனைய சிற்றுயிர்க்கு எய்யாமையால் ஊறுவிளேத்தலும் உயிர்க் கொலேயின்பாற் படுமென உயரிய அன்புக் கொள்கையிற் காழ்த்த சமணர்கள் தாம்பெரிதும் வேட்கும் துறவுநிலேயைப் போலியாகக் கோடலும், பற்றற்றூராக வாழ வேண்டிய அன்னூர் அரசியலிற் பற்றுண்டாக்கிக் கோடலும், ஆளுடைய அரசின்பால் களிறு ஏவியும், அவரைக் கல்லிற்பூட்டிக் கடலிற்பாய்ச்சி இடர் விளேத்தலும் நன்றின்பால் உய்ப்பவாமோ? நடுவிகவாத் தன்மையிர்! நன்கெண்ணிப் பார்மின்கள். அவர்தம் அழுக்காறு மண்டிய உள்ளத்து இயல்பும், புறச்சமயத்தின் பொலிவு கண்டு பொருப்பரிசும், பிறர்க்கு ஊறுவிளேக்கும் பொல்லாங்கு சூழ்ந்த அகமும், தமிழில் மணிப்பிரவாளம் பிறப்பித்துத் தமிழுரைக்குச் செய்த இன்னல்களும் எண்

ணிப் பார்ப்பார், முற்கூறிய சிவநெறிச் செல்வர்கள் பிறந்திலரேல் நமது அன்புக் கடவுள் நெறியும் அருந் தமிழின் அழகும் ஒழிந்துபடுமென்று கவலாதிரார்.

மொழி வன்மையானும், நாநலத்தானும் பெயர் படைத்த பாவலராய தோலாமொழித்தேவர், நாவுக்கரசர் என்பாரைப்போல அடிகளார் 'மாணிக்கவாசகர்' என்னும் பெயரினராகப் பிறங்கக் காண்கின்றோம். மதிப்பிடற்கரிய மாணிக்கம்போல அடிகளாரின் வாசகம் அளப்பிலாச் சிறப்பிற்று. 'மாணிக்கவாசகத்துக்கு மறுவாசகமில்லை' என்பது பரவை வழக்கு. உலகியலுறவுற்று அலகிலா நிகழ்ச்சிகளை அறியும் வாழ்க்கையிற் கண்ட மாணிக்க வாசகர், நானிலத்திற் பிறந்தார், கிடந்தார், நடந்தார், செய்தார், நரைத்தார், திரைத்தார், மறைந்தார் என்று சொல்லாய்க் கழிக்கின்றதறிந்து, ஆறறிவுற்ற மக்களாய்ப் பிறத்தலாற் பெற்றிடும் பயன்தான் என்னை? மன்பதை உலகில் மக்களின் கடன் எதுவாதல் தகவுடைத்து? வழுவாயுற்றவர்க்குக் கழுவாயுண்டா? என்பனபோன்ற வினாக்களைத் தாமே எழுப்பித், தமது உலகியலறிவானும், நூலறிவானும், இறைமை நெறியாலெய்தப்பெற்ற அருளறிவானும் ஒள்ளிய கருத்துக்களையெல்லாம் உள்ளி உள்ளித் தெள்ளித் தேர்ந்து அருந்தமிழ்ப் பாக்களாக அள்ளியள்ளி நம்மவர்க்கு அளிப்பாராயினர். இறையன்புப்பாக்கள் பிறமொழிகளிற் காணப்படுமவையிற்றின் எத்துணையோ சால்புடையவை, நம் மொழியிற் காணப் பெறுவன என்னும் எண்ணம்கொண்ட மேற்புலத்துப் போப்பையர், பிரடெரிக் எயிலர் முதலியோர் திருவாசகத்தை அதர்ப்பட யாத்து அளப்பிலா மகிழ்வும், இளத் தற்கரிய மெய்ப்பொருளுணர்வும் எய்திச் சிறந்தனர் என்பது நமக்கு நயப்பும் வியப்பும் நல்குதல் ஒருதலை.

## கடவுள் காட்சி

எல்லாப் பொருள்களையும் பொறி கருவியாகப் புரிந்து கொள்ளுதல் இயலாது. ஐம்பொறிகள் வாயிலாக அறிய முடியாதவற்றை உள்ளத்தால் உணர்ந்து தெளிதல் வேண்டும். இயற்கையின் எழில் பிறவிக் குருடர்க்குத் தெரியுமா? செந்தமிழ்த் தேனிசை செவிடர்க்குத் தெரியுமா? பொறியறை போனவர் பொருள் உண்மையை மறுத்தல்கூடுமோ? உள்ளத்தால் உணரும் பக்குவம் வாய்ப்புறுர் இறையுண்மையை உடன்படாமைக்கு யாரே வெகுள்வர்! காட்சிப்பொருளின் இயல்பறிதற்கே பேரறிவு தேவை. கருத்துப்பொருளாயுள்ள கடவுளின் இயல்பறிதற்கோ பெரும்பேரறிவுதேவை. அறிவு வளராத எஸ்கிமோக்களும், காட்டுமிராண்டிகளும் சமயஞானம் பெற வில்லையே என்று அங்கலாய்ப்பார் உளரோ? அடிகள் காலத்தில் நாத்திகம் பேசி நாத்தழும்பேறிய உலோகாயதர் மிகுந்திருந்தனர். இவர்களுக்கு இறையுண்மை, வினைக்கொள்கை முதலியன பொய்ம்மையாம். இவர்களை, நல்லதன் நலனும் தீயதன் தீமையும் இல்லை என்போர் எனப் புறநானூறு சுட்டுகிறது. இன்ப துன்பம் மனிதனுக்கு இயற்கை என்றும் வினைகாரணமாகப் பிறப்புக்கள் அமையும் எனல் பொய் என்றும் உலோகாயதர் பேசினர். இவர்களைத் திருத்தச் சித்தாந்த சைவர் எத்துணையோ முயன்றனர். ஞாயிற்றிற்கு ஒளி இயற்கை; ஒளியும் இருளும் இயற்கையாகுமா? பாலிற்கு இயற்கை நிறம் வெண்மை. வெண்மையும் கருமையும் இயற்கையாகுமா? நெருப்பிற்குச் சூடு இயற்கை. குளிர்ச்சியும் சூடும் இயற்கையாகுமா? அங்ஙனமே முரண்பட்ட பண்புகள் (இன்ப துன்பங்கள்) மனிதனுக்கு இயற்கை

என்பது அறியாமை. இவை செயற்கையே; செய் வினைக்கு ஏற்ப விளைபவையே. நல்வினை என்றவித்தி லிருந்து இன்பமும், தீவினையிலிருந்து துன்பமும் விளையும். வினைகளில் முயலும்வரை தொடக்குற்ற ஆன்மா அச்சு மாறிப்பிறக்கும். வினையொப்பு வரும்போதுதான் பிறப் பினின்றும் விடுதலை பெறும். இதனையே வீடுபேறு, மற்றீண்டு வாராநெறி என்பர். இவ்வுயர்நிலை மாணிக்க வாசகர்க்கு வாய்த்ததை,

"உணக்கி லாததோர் வித்துமேல்
விளையாமல் என்வினை ஒத்தபின்
கணக்கிலாத் திருக்கோலம் நீவந்து
காட்டி னாய்க்கழுக் குன்றிலே"

என்று திருவாசகம் உணர்த்துகிறது.

இனி, அடிகளார் முழுமுதற்பொருளை மெய்யுணர்வி னால் ஓர்ந்து அப்பொருட்குக் கூறும் இலக்கணங்களுள் சிலவற்றைக் காண்போம். இறைவன் பேரெழில் மேனியன்; முதல் முடிவற்றவன்; பெற்றோர் அற்றவன் என்னும் பெற்றியை,

"மொக்கணி அருளிய முழுத்தழல் மேனி
சொக்க தாகக் காட்டிய தொன்மையும்" (கீர்த்தி 33-4)
"ஆற்றல் அதுவுடை அழகமர் திருவுரு" ( ,, 103)
"ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும் சோதி"
(திருவெம்பாவை-1)
"தாயுமிலி தந்தையிலி தான்தனியன் காணேடி"
(திருச்சாழல்)

என்னும் அடிகளால் குறிக்கின்றார். எது பிறவாததோ அது இறவாதது. ஆகலான் முழுமுதற்பொருள் பிறப்

பிறப்பற்ற பெருமை சான்றது. எல்லாம் படைத்தும் காத்தும் கரந்தும் விளையாடவல்ல அம்முழுமுதற்பொருளை "மூவா முதலாய் நின்ற முதல்வா" (445) என்று வாயார விளிக்கின்றார். அம்முதல்வனை, "ஒருநாமம் ஓருருவம் ஒன்றுமில்லான்" என்று இயம்புகின்றார். அம்முதல்வன் அனைத்துப்பொருட்கும் மூலனாய் நிற்கும் பெற்றிநோக்கி "முழுவதும் இறந்த முதல்வா" (போற்றி அக.) "முழு முதலே" (379) என்று மொழிகின்றார். இவ்வாற்றாற் கடவுளின் முழுமுதல் தன்மையை விளக்கிப்போந்த அடிகளார், அம்முதல்வன் இயற்கைப் பொருள்களாய் இலங்குமாற்றையும் இயம்புகின்றார். நிலம், நீர், தீ, வளி வான், உயிர், ஞாயிறு, திங்கள் ஆகிய எண் பொருள்களையும் மெய்யாகக்கொண்டு இறைவன் உயிராக நின்று உலகை இயக்குகின்றான் என்னும் உயரிய கருத்தையும் உரைத்துள்ளார். ஒல்காப் புகழ்சேர் தொல்காப்பியனாரும், "நிலம், தீ, நீர், வளி, விசும்பொடு ஐந்தும் கலந்த மயக்கம் உலகம்" என்று கூறிப்போந்தனர். இவ்வைம்பெரும் பூதங்களாகவும் இறைவன் இலங்குகின்றான் எனும் இயற்கைக்காட்சியை மாணிக்கவாசகப் பெருந்தகை "பூதங்கள் ஐந்தாகி" என்ற திருப்பாட்டிற் பொறித்துப்போந்தனர். இறைவன் திருமேனியில் திகழும் தாளியும் கொன்றையும் முல்லையினையும், பாந்தளும் தரக்கும் குறிஞ்சியினையும், முடைத்தலையும் எரிபொடியும் பாலையினையும், ஆமையும் ஆரம் மருதத்தினையும், கடுவும் சங்கும் நெய்தலினையும் குறிக்கும். எனவே, இறைவன் திருமேனியாகத் திகழ்வது திரைசூழ் உலகமே. திருவாசகத்தில் தோய்ந்த கல்லாடனார்,

"ஆகத் தளது பேரருள் மேனியில்
திணை ஐந்தமைத்த இணையிலி நாயகன்"

என்று இயம்புதல் காண்க. இங்ஙனம் இயற்கையாயும் இயற்கையை இயக்கும் ஆற்றலாயும் அப்பாலுக்கப்பாலாய் விளங்காநின்ற முழுமுதலை உய்த்துணர்ந்து கண்ட தமிழர்தம் மேதக்க மெய்யறிவின் மாட்சியை என்னென் போம்! இவ்வாறு இயற்கை இலக்கணங்கள் பொருந்திய முழுமுதல் நாம் நுகருதற்குரியவையெல்லாம் அளித் தருளலான், அம்முதலுக்கு நமது அன்பைப் புலப்படுக்கு மாற்ருல் வணக்கமும் வாழ்த்தும் கூறுதற்குச் சிற்றறிவும் சிறுதொழிலும் உடைய நாம் கடமைப்பட்டேமல்லேமோ? அனைத்துமாய் அனைத்திற்கும் அப்பாற்பட்டதுமாய் உள்ள முழுமுதற் பொருளை எவ்வாற்ருல் வாழ்த்துவதென்று எண்ணிய மணிவாசகப்பெருமான் "என் சொல்லி வாழ்த்துவனே" என்று தமது ஏலாமையைக் கூறுகின்ருர். பின்றை அடிகளார் அப்பொருளையே எண்ணி எண்ணி ஒருமைநிலை உற்ருராய்,

'செக்கர் போலுந் திருமேனி'
'செம்பொருள் துணிவு'
'செம்மை நலம்'
'செம்மையே யாய சிவபதம்'
'சோதியே சுடரே சூழொளி விளக்கே'
'கடுந்தழல் பிழம்பன்ன மேனிச் செய்யன்'
'ஒளிர்கின்ற ஒளியே'

என்று இயம்புந்திறன் அவர்தம் பண்புற்ற உள்ளத்து இறைதந்த காட்சியின் மாட்சியைக் காட்டுவதாகும். எது மாசற்றதோ அதுவே பிற மாசுகளைப் போக்கவல்லது. தன்னைச்சார்ந்த மாசினை மாய்த்துத் தூய்மைபடுத்தும் சுடர். மலமாசினைத் துடைத்து அருள் ஒளி படைத்துக்

கடைத்தேற்றும் முதல்வனையும் சுடர், சோதி என்று ஓதுதல் மரபு. அச்செம்பொருளைத்,

"தென்னாடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி"

என்றும் வழுத்துகின்றார். தென்னாட்டவர்க்கே சிவ வழிபாடு உரியதென்னும் உண்மை மேனாட்டு வடமொழி வல்லுநராய மாக்ஸ்முல்லர், மூயிர், வெபர், ரெகோசின், கிரிபித் முதலியோர்க்கும் இந்நாட்டுச் செம்புலமையாளர்க்கும் கருத்தாகுமென்பது தமிழ்க்கடல் மறைமலை அடிகள் விளக்கிப் போந்தமையாற் கொள்ளப்படும். இனி, தென்னாடுடைய சிவன் எந்நாட்டவர்க்கும் இறைவன் என்பது இறைவனின் முழுமைத் தன்மையை வியத்தற்காக என்க. அஃதங்ஙனம் ஒக்குமேனும் பன்னாட்டாரும் தத்தமக்குரிய இயவுளரை ஏத்துதற் காண்டுமாகலின், தென்னாட்டுச் சிவன் எந்நாட்டார்க்கும் இறைவன் என்பது தகுமா என்னில் முக்காலுந் தகுமென்க. என்னை? முதல் மனிதப்பிறப்பு பண்டொழிந்த குமரிக்கண்டத்தே நிகழ்ந்தமை இற்றைநாள் திகழும் ஆய்வாளர் புகன்றனராகத், தென்னகத்திருந்தே மக்கள் மல்கிப் புறம்போந்தனர் என்பது ஈராசுக்கண்காணியார் உள்ளிட்டார்தம் துணிவுமாகும். அவ்வாறு பரந்த தமிழர்கள் கொண்ட சிவ வழிபாட்டிற்குச் சான்றுகளாகத் திகழ்வன: எகிப்து நாட்டில் நைல் ஆற்றங்கரையினிற் கண்டெடுக்கப்பெற்ற சிவக்கொழுந்தும், ஐரோப்பாவிற் கண்டெடுக்கப்பெற்ற நந்திகளும், சிந்துவெளியிற்கிடைத்த கூத்தனின் தொல் வடிவுமாம். ஆகலான், தென்னாட்டாரால் உணரப்பெற்ற சிவன் பன்னாட்டார்க்கும் பயன் உய்த்தமையானும், ஐம்பூதங்களாலாய உலகை மெய்யாகவும் தானே உயிராகவும்

நின்று இயக்குதலானும், "எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி" என்று அடிகளார் உரைத்தலை உற்றுநோக்கி உவப்பெய்துமின்கள்.

முழுமுதலைப்பற்றி ஓவாது உற்றுநோக்கிய அடிகளார் அம்முதலைச் செம்பொருளாகக் கண்ட காட்சியையும் அறிவுவடிவான ஆசிரியனாகி, அணுக்கனாய் எளிவந்து ஒளிதந்து எய்ப்பகற்றி, மெய்ப்பொருளுணர்த்திய மாண்பையும் திருவாசகத்துப் பாக்கள் தெரிவிக்கின்றன.

கன்றினைத் தேடிவந்து பால்கொடுக்கும் ஆப்போலவும், பால்நினைந்தூட்டும் தாய்போலவும் செம்மேனி எம்மான் அடிகளைக் கூவி அழைத்தும், தேடி அடைந்தும் திருவருள் நல்கிய திறத்தினை,

"தன்னே ரில்லோன் தானே யானதன்மை
என்னே ரனையோர் கேட்கவந் தியம்பி
அறைகூவி ஆட்கொண் டருளி" (கீர்த்தி 146-8)

"இங்குநம் இல்லங்கள் தோறும் எழுந்தருளிச்
செங்கமலப் பொற்பாதம் தந்தருளும் சேவகனை"
(திருவெம்பாவை)

"அங்கணன் அந்தணனாய் அறைகூவி வீடருளும்
அங்கருணை வார்கழலே பாடுதும்" (திருவம்மானை)

"பூமேல் அயனோடு மாலும் புகலரிதென்(று)
ஏமாறி நிற்க அடியேன் இறுமாக்க
நாய்மேல் தவிசிட்டு நன்றாய்ப் பொருட்படுத்த
தீமேனி யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ"

எனப் போற்றிப் புகழுதல் காண்க.

பல்காலும் தம்முள்ளம் பற்றிய முழுமுதல் தமக்கு இன்பமருளிய பெற்றியைக் கூறுவாராய்த், "தேனைப்

பாலைக் கன்னலின் தெளிவை ஒளியை'' என்றும், ''நெல்லிக் கனியைத் தேனைப் பாலை நிறையின்னமுதை அமுதின் சுவையை'' என்றும் பிறர் காண்டற்குரிய பொருள்களின் வாயிலாகத் தம் மெய்யுணர்வாற் கண்ட கடவுளின் நிலையைக் காணாதார்க்குக் காட்டுகின்றார். எத் துணைதான் வாயார வாழ்த்தி நிற்கினும் அவ்விறைவற்கு ஒத்த பொருளை உணர்த்தற்கு ஒண்ணாமை யாவர்க்கும் இயல்பாதல்போல, அடிகளார்க்குமாதல் 'ஒப்புனக்கில்லா ஒருவனே' என்று உரைக்குமாற்றால் உணரப்படும். எல்லாம் கடந்தும் கலந்தும் நிலவும் கட்டற்ற பெருமானைச் சுட்டறிவால் உவமைக்குள் கட்டுப்படுத்தல் இயலா தன்றோ! இத்தகைசான்ற இயற்கைப் பண்புகளை இறை வற்கு ஏற்றிப் பாடிச் சிவப்பேறு எய்திய செம்மலார் தாம் எய்திய பேற்றின் பெற்றியையும் சிவத்தின் முழுமை யையும் உலகெலாம் உணர்ந்து, உய்யவேண்டுமெனும் உயர்நோக்கால் திருவாசகத் தேனைத் திரட்டியருளினர்.

### வள்ளுவரும் வாதவூரரும்

தெய்வப் புலமைத் திருவள்ளுவப் பெருந்தகையும் திருவாதவூரரும் எத்துணையோ இடங்களில் ஒத்து நடக் கின்றனர். வள்ளுவர் கடவுள் வாழ்த்தில் உருவத்திரு மேனியாக இறைவனின் திருவடிமாத்திரமே குறித்தார். அருளின் நிலையமாகத் திகழ்வது திருவடி. திருவாசகத் தின் முதற்பெரும் பாடலாகிய சிவபுராணம் முழுமையும் இறைவனின் திருவடியினையே வாழ்க, வெல்க என்று ஏத்தி வாழ்த்தும். திருச்சிற்றம்பலக்கோவையில்,

"புரங்கடந் தான்அடி காண்பான் புவிவிண்டு புக்கறியா
திரங்கிடெந் தாய்என் றிரப்பத்தன் னீரடிக் கென்இரண்டு

கரங்கடந்தான் ஒன்று காட்ட மற்றுங்கதும் காட்டிடென்று
வரங்கிடந்தான் தில்லையம்பல முன்றிலம் மாயவனே”

எனத் திருவடிப் பெருமையும் அருமையும் சுட்டப்பெறுதல் உணரலாம்.

வாலாமையைச் செகுக்கும் வாலறிவின் வடிவாக வயங்கும் இறைவனின் திருவடிகளை வணங்கமாட்டாதார் தாம் பயின்ற கல்வியறிவால் பெற்றிடும் பயன்தான் என்னையோ? தமக்குமேல் தலைமைப் பொருளாய் இலங்கும் இறைவனை இறைஞ்சுதற்கு வழிகாட்டாத கல்வி நூல்கள் உண்மைப் பனுவல்களாகுமா? இறைவனைப் பணிதற்கு ஆற்றுப்படுத்தா நூல்களைக் கற்பார் தாம் கற்றதனாலாய பய்னென்னை? என்பன போன்ற பொருள்கள் பொதுளிய திருக்குறளை நன்குணர்வோம்.

“கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின்”

இக்குறளினை உட்கொண்ட மாணிக்கவாசகர் திருவாசகத்துள், கடவுளை வழிபடற்குத் துணைசெய்யாக் கல்வி கல்வியல்ல என்னும் கருத்துத்துதைந்த பாக்களையும் வழங்கியுள்ளார். கல்வி பலபாற்படுதலின் அடிகளார் ‘‘கல்வியென்னும் பல்கடல்’’ என்று குறித்தார். இங்ஙனம் பலபாற்படும் கல்வியின் ஒவ்வொரு கூறும் தனித்தனி கடல் ஒக்கும். இக்கல்வி ‘கரையில’ என்று நாலடிச் செய்யுளும் நவிலுதல் காண்க. எண்ணிகந்த இடுக்கண்களினின்றும் தப்பிய வாதவூரர் தமது போற்றித் திருவகவலில், ‘‘கல்வியென்னும் பல்கடற் பிழைத்தும்......தெய்வமென்பதோர் சித்தமுண்டாகி’’ என்னுமிடத்துக், ‘‘கல்வியென்றுரைக்கப்படும் பலவாகிய கடலினின்றும் தப்பியும்

......கடவுள் என்று சிறப்பித்துச் சொல்லப்படுவதாகிய ஒரு கருத்து வரப்பெற்றார்'' எனப் பொருள் விரிக்கும் உரையாசிரியர் அடிகளார் அறிவுநாற் கல்வியே கொண் டனர் என்றும் குறிக்கொளுவினர். ஆகலான், இக்கல்வி கற்றதனுலாய பயன் கடவுள் வழிபாடாற்ற உந்தியவாறு காண்கின்றோம். இக்கல்வியே வள்ளுவரால் 'கேடில் விழுச் செல்வம்' என்று கூறப்பெறும். இவ்விழுச் செல் வம் செல்வத்துட் செல்வமாய அருட்செல்வம் அளிக்க வல்லது. வாலறிவன் நற்றாளைத் தொழற்கு உள்ளத்தை உந்தும் கல்வி அறிவுநாற்கல்வியே என்க. வள்ளுவப் பெருந்தகையார் 'வாலறிவன்' என்றது தூய அறிவான கடவுளையாகலின், பன்னெறியாளரும் கடவுளை அறிவான தெய்வமே என்று கூறுதல்போல் வாதவூரரும், ''அறிவாம் தேற்றனே'', ''மெய்ஞ்ஞானமாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே அஞ்ஞானந்தன்னை அகல்விக்கும் நல்ல றிவே'', ''அறிவே போற்றி'', ''அறிவனே'' என்று தெரிந்து தெளிவிக்கின்றார். எனவே வள்ளுவப் பெருந் தகை கூறுமாறுபோல வாதவூரரும் கல்வி, அறிவான இறைவனை வழிபடற்கு ஏதுவாக அமைதலே சால்புடைத் தென்று கூறியது உய்த்துணர்ந்து துணியப்படும்.

அஃதங்ஙனம் ஒக்குமேனும், ''கல்லார் நெஞ்சின் நில்லான் ஈசன்'' எனக் காழியூர்ப் பிள்ளையும், ''கல்லா தார் மனத்தணுகாக் கடவுள் தன்னைக் கற்றார்கள் உற் றோரும் காதலானை'' எனச் சொற்கோவும், ''கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியை'' எனச் சேந்தனரும் கற் றார்க்கே கடவுள் புலனுவான் என்று புகன்றனராக மாணிக்கவாசகப் பெருந்தகை ''கற்றாரை யான் வேண் டேன், கற்பனவும் இனியமையும்'' என்றுரைத்தது ஏற் புடைத்தா? என்னில் ஏற்புடைத்தே என்க. என்னை?

ஈண்டுக் கற்றுரை என்று வாதவூரர் குறித்தது வாலறிவன் நற்றுளை வழுத்தற்கு உய்க்காத நூல்களைக் கற்றுரை என்றுகொள்க. அங்ஙனம் கற்றூர்தம் கல்வி நன்மை பயவாதென்னும் வள்ளுவர் கொள்கையே வாதவூரரும் கொண்டாராகலின் "கற்றுரை யான் வேண்டேன்" என்றது பொருந்துமென்க. அற்றேல், கற்றுரை யென்னற்குச் சமய நூல்களையெல்லாம் கற்றுரை என்றும் கொள்க. அதுவேயுமன்றிக் கடவுளுண்மையை மறுக்கும் மீமாஞ்சை, உலோகாயதம், நிரீச்சுரசாங்கியம் முதலியன கற்றுரை யென்றுங் கொள்க. இக்கற்றுரெல்லாம் தாம்கொண்ட கோட்பாடுகளை நிலை நிறுப்பான்வேட்டுத் தமது மதிநல மதுகையால் வாதில் முனைகின்றூர் ஆகலின், அவர்க் கெல்லாம் வாதில் வாகை சூடுதலே வாழ்க்கையின் குறிக்கோளாக, அவ்வாகை அணிதற்குரிய வகையில் அறிவை உய்த்து இறைவனைப்பற்றி எண்ணுதொழிகின் றனர். இத்தகைய கற்றுரிற் "கல்லாத பேர்களே நல்லவர்கள்" எனப் பிறண்டும் தாயுமானுர் கூறியது நோக்குமின்கள். கல்லார் கடவுள் வழிபாட்டில் திறம்பாதகாழ்த்த உள்ளத்தாராய் நிற்றல் காண்கின்றேமாதலின் அன்னுர் வாலறிவன் நற்றுளைத்தொழாக் கல்வியாளரினும் நனி நல்லார் எனுங்கொள்கையைத் தாயுமானுர்க்கு முன்பே உணர்ந்த அடிகளார், 'கற்றுரை யான் வேண்டேன்' என்று தெரித்தார் என்க. 'கற்பனவும் இனியமையும்' என்றது கல்வி கரையற்றது; பலதுறைகளின்பாற் பரந்திலங்குவது; ஒன்றைக் கற்குங்காலைப் பிறிதொன்றற்கு உள்ளத்தை ஈர்த்து நிற்றலின், இதுகாறும் யாம்கற்ற கல்வி இறைவனை உற்றறிந்து உணர்தற்கும் வழிபடற்கும் வாய்ப்பது; இனி யாம் கற்றவழியில் நிற்றல் வேண்டும். ஆகலான் இனிக் கற்பனவும் அமைவுறும் என உணர்த்து

தல் காண்க. இதுகாறும் எழுதியவாற்ருல், கடவுளை வழிபாடாற்றுதற்கு உய்க்கும் கல்வியே பயனுடைய கல்வி என்பது வள்ளுவப் பெருந்தகைக்கும் வாதவூர ருக்கும் உடன்பாடென்பது கண்டோம்.

### உலகம் உருண்டையே

இற்றை நாள் அறிவியல் அறிஞர்கள் எண்ணரிய கருவிகளின் துணைக்கொண்டு கண்டறிந்த உண்மைகளுட் சிலவும் திருவாசகத்தால் அறிகின்ருேம். அவையிற்றுள் ஒன்றைமட்டும் ஈண்டு உரைப்பாம். பள்ளிக்குப் போய் வரும் மழமகார் தம் தமிழாசிரியர் உலகம் தட்டை எனவுரைக்க, அதனைக் கேட்டுப் பின்றை நிலநூல் வகுப் பாசிரியர் உலகம் உருண்டையென அறிவு கொளுத்த; அம் மழபுலமகார் காலம் சிறிது தாழ்த்துத் தம் தமிழாசிரி யரை அண்மி மீண்டும் கடாவ, அவர் உலகு தட்டையே என உரைப்ப, அச்சொற் பொருராய்க் கனன்று ஆசிரி யருடன் கலாய்த்துத், தம் அறிவு நூற்புலனை வெளிப் படுத்திக்கொள்கின்றனர் என்றவாறெல்லாம் இற்றை ஞான்று அன்பர்களுட் சிலர் எழுதவும் இயம்பவும் காண்கின்ருேம். இங்ஙனம் தமிழ்ப் புலவரைத் தாழ்த்தியும் பிறதுறைப் புலவரைப் உயர்த்தியும் உரைப்பதால் எய்தப் பெறும் பயன்தான் என்னையோ? அறிகின்றிலேம். அவர் தம் கருத்து பொய்யாவுரையாய் நிற்க நாம் வேட்பே மாயின், அன்ஞர் தம் கருத்திற் பிறந்த தமிழாசிரியர் திரு வாசகம் பயிலாக் குறைபாட்டினர் என்றே கொள்ளல் வேண்டும். இது கிடக்க, உலகங்கள் பலப் பல. அவை யெல்லாம் வட்டவடிவின. ஈர்ப்பாற்றலினுல் நின்று இயங்கு வன என்னும்கருத்தினை வாதவூரர், சிவபிரானின் நுண்மை, பருமைப் பண்புகளைப் பகரும் திருவண்டப் பகுதியில்,

"அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி
ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்
நூற்றெரு கோடியின் மேற்பட விரிந்தன"

என்று இயம்புதல் காண்க. 'அண்டம்' முட்டையென்னும் பொருட்டாகி அவ்வடிவினதாய உலகைக் (Oval size) குறிக்கும். உலகங்கள் எல்லாம் முட்டை வடிவினவாகக் கொள்ளுமாறு அண்டமென்ற சொல்லைப் பெய்த அடிகளார் மீண்டும் உண்டைப் பிறக்கம் என்றது எற்றிற்கோ என்னில், அண்டங்களெல்லாம் உருண்டை வடிவினவே எனத் தோற்றமாய் யாப்புறுத்துக் கூறுதற்காக என்க.

## திருவாசகம் - இசைத்தமிழ்

திருவாசகம் ஓரிசைத் தமிழ் நூலாக விளங்குதல் யாவரும் அறிந்ததொன்றும். இந் நூலின் பல பாக்களையும் காந்தாரப் பண்ணுற்பாடி மகிழலாம் என்பது ஓரிசைப் புலவர் கருத்தாம். [1] "இசைப் புலன் இல்லோன் பிறர் பாடும் இசையினுல் நெஞ்சம் நெகிழ்ச்சி உருனேல், நயவஞ்சனை, சூழ்ச்சி, கொள்ளை முதலிய கொடுமை இழைத்தற்குத் தகுதியுடையனுகிருன்; அவன் உயிரின் இயக்கம் இருள் சூழ்ந்தது. அவனை நம்பற்க'' என்னும் செகப்பிரியர் கருத்துரையால் இசை மக்களைப் பண்படுத்தும் கலை என்பதும் இசைக்கு அசையாதவன் ஒரு ஞான்றும் பண்படான் என்பதும் புலப்படும். தமிழர் பண்

---

1. "The man that hath no music in himself
Nor is not moved with concord of sweet sounds
Is fit for treasons, stratagems, and spoils;
The motions of his spirit are dull as night
Let no such man be trusted."
— The Merchant of Venice. Act V Scene I

பட்டவர் என்பதற்குப் பண் அமைப்புடன் பாடப்பெற்ற திருநெறிய தமிழ்ப் பனுவல்களே சான்றும். மாணிக்க வாசகப் பெருந்தகை விழுமியவை பயக்கும் செஞ்சொற் களும் இனிய ஓசையழகும் இயல்பாகக் கலந்து இயற்றிய திருவாசகப் பாக்களைத் தாமே ஓதியோ அன்றி ஓதுவாரி டம் செவிமடுத்தோ உள்ளம் ஒருமையுற, மயிர்க்கூச் செறிய மெய்மறந்து இறைநலம் கலந்த இசையின்பம் துய்ப்போர் பலராவர். அவ்வாறு திருவாசகத்தேனை உட்கொண்ட சிவப்பிரகாச அடிகளார் தமது நான்மணி மாலையுள்,

"விளங்கிழை பகிர்ந்த மெய்யுடை முக்கட்
காரணன் உரையெனும் ஆரண மொழியோ
ஆதிசீர் பரவும் வாதவூரண்ணல்
மலர்வாய்ப் பிறந்த வாசகத் தேனோ
யாதோ சிறந்த தென்குவி ராயின்
வேத மோதின் விழிநீர் பெருக்கி
நெஞ்ச நெக்குருகி நிற்பவர்க் காண்கிலேம்
திருவாசக மிங்கு ஒருகா லோதில்
கருங்கல் மனமும் கரைந்துகக் கண்கள்
தொடுமணற் கேணியிற் சுரந்து நீர்பாய
மெய்ம்மயிர் பொடிப்ப விதிர் விதிர்ப்பெய்தி
அன்ப ராகுந ரன்றி
மன்பதை உலகில் மற்றைய ரிலரே!"

என்று இயம்புதலான், வேதவோதையின் வீறுரவாரமும் தமிழ் மறையின் தனிப்பெருஞ் சிறப்பும் கண்டு களிக் கின்றோம். சிவப்பிரகாசரின் கருத்திற்கிசைந்த புரட்சிக் கவிஞர் பாரதிதாசனாரும் தமது 'தமிழியக்க'த்தில் "சொற் கோவின் நற்போற்றித் திருவகவல்" என்று ஏக்கமுற்த மும் எழுச்சியும் கொள்ளுமாறு பாடிப் பரவுகின்றார். ஏனைய புலவரெல்லாம் நாவுக்கரசரைச் சொற்கோ எனச் சொல்லுவாராக, நம் புரட்சிக்கவிஞர் மாணிக்கவாசகர்க்கே

சொற்கோ என்னும் சொல் பொற்புடையதாமெனப் புகன்றுள்ளார். மேலேக் காட்டியஅடியில் திருவாசகத்துள் கோயில் வழிபாட்டிற்குப்பெரிதும் பயன்படுமாறு அமைந்த போற்றித் திருவகவலேப் பாரதிதாசனுர் விதந்து விளம்புமாற்றைக் காண்மின்கள். நம்புரட்சிக் கவிஞருக்கு முன்னமே வாழ்ந்த வடலூர் இராமலிங்க அடிகளாரும் திருவாசகத் திருமறையை எஞ்ஞான்றும் சுவைத்து அச் சுவைநலம் சுரக்கவோர் பாமாலே தொடுத்துப் போந்தனர். அதனுள், தாம் திருவாசகக்கடலுள் ஆழ்ந்து குளித்துத் தூய்மை எய்திய பேற்றையும், திருவாசகத் தேனே உட்கொண்டு மெய்ப்பயனுற்ற மேம்பாட்டையும் அவர்தம் அருட்பாவிலே அழுந்தித்திளேக்குமாறு அருளியுள்ளார். அம்மாலேயில் வயங்கும்இரண்டு மலர்களே மட்டும் ஈண்டுக் காண்போம்.

வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை
நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன் கலந்து பால்கலந்து செழுங்கனித் தீஞ்சுவைகலந்து
ஊன் கலந்து உயிர் கலந்து உவட்டாமல் இனிப்பதுவே!

வள்ளலார் திருவாசகத்துடன் ஒன்றிய நிலேயில் இப்பாடலே யாத்து நமக்கு அளித்துள்ளார். புலன்குறைந்த மாக்களும் புட்களும் திருவாசகத்தின் இசை கேட்டு இன்புறுந் திறத்தை அடிகளார்,

வாட்டமிலா மாணிக்க வாசக நின் வாசகத்தைக்
கேட்டபொழு தங்கிருந்த கீழ்ப்பறவை சாதிகளும்
வேட்டமுறும் பொல்லா விலங்குகளும் மெய்ஞ்ஞானம்
நாட்டமுறும் என்னில் இங்கு நானடைதல் வியப்பன்றே!

என்றிசைத்துத் தமிழ்மறையின் பெருமையினேப் பேசுகின்ருர்.

# மதுரைமூதூர்

நாடும் நகரமும் ஏடும் எழுத்தும்போலாம். ஏட்டிற் பொலியும் எழுத்தின் சிறப்பு எண்ணுவோரின் சிறப்பாதல்போல், நாட்டிற் பிறங்கும் நகரின் பொலிவு வாழும் மக்களின் வளமேயாகும். பண்டு முதல் புகழ் சிறக்கும் பாண்டிநாட்டில் தண்டமிழ் நிலயமாகத் தவழ்ந்த பேரூர் மதுரைமூதூர். இப்பெயர் பெற்ற எழிலிய ஊர்கள் இலங்கையிலும் கீழைத்தீவுகளிலும் உள்ளன. எனினும் தமிழுடன் உறவுடைய மதுரைமாநகரைப் பற்றியே இவண் எழுதப்புக்கனன்.

மதுரைமாநகரைக் கூடல், நான்மாடக்கூடல், ஆலவாய், வெள்ளியம்பலம் எனவரும் வெவ்வேறு பெயர்களால் விழுமியோர் சுட்டிக்கூறுதல் கற்றோர் அறிந்ததே. ஆய்வுத்துறையில் தோய்வுடைய அறிஞர் சிலர் "கூடல்" என்ற பெயரே மதுரைக்குத் தொன்மையில் வழங்கிய பெயரென்றும் மதுரையோவெனிற் புதுவதாம் என்றும் வாதம்புரிவர். கபாடபுரத்துக் கடல்கோட்குப் பின்றை, ஆங்குவாழ்ந்த தமிழர் தப்பிப்பிழைத்து ஓரிடத்து ஒன்று கூடியதால் அவ்விடத்தைக் "கூடல்" என்றனர் என்பதே அன்னார் எண்ணமாம் தொன்றுதொட்டு நின்று நிலவும் மரபும் இலக்கிய வழக்கும் துணைக்கொண்டு இவர்தம் கருத்தின் பொருத்தத்தைச் சீர்தூக்கிப் பார்த்தலே இக்கட்டுரையின் குறிக்கோளாம்.

இடைச்சங்கம் இலங்கிய கபாடபுரத்துக் கடல் கோளைக் குறிக்கும் இறையனர் களவியலுரையே தலைச் சங்கம் நிலைபெற்ற தென்மதுரையினைக் குறித்தலும்; கடைச்சங்கம் விளங்கிய மதுரையினைச்சுட்டலும் சிந்தையில் பதித்தற்குரிய செய்தியாம். மதுரைக்கு மாருகக் "கூடல்" என்று இவ்வுரை குறியாமையும் கொள்ளற் பாலது. கபாடபுரத்துக் கடல்கோட்குப் பிழைத்தோர் உள்நாடு நோக்கிச்சென்று ஓரூரினை அமைத்தல் இயல்பே. அஞ்ஞான்று, பண்டைப்பெருமை பெற்றுப் பிறங்கிய தலைச் சங்கம் வீற்றிருந்த "மதுரை" என்னும் மாநகரின் பெயரையே மருவிய ஊர்க்கு வழங்கியிருத்தல் ஒருதலை. அதனாலன்றோ கடைச்சங்கம் நடந்தது "கூடல்" என்னாது "உத்தர மதுரை" என்று களவியலுரை கழறுகின்றது. முன்பு நிலவிய மதுரைக்குச் சேய்த்தாய் வடபால் அமைந்தமையின் உரைகாரர் "உத்தரம்" என்று அடைகொடுத்து ஓதினராதல் வேண்டும். மறைந்த ஊர்ப் பெயரையே புதிதாக நிறுவிய ஊர்க்குச் சூட்டுதல் அன்று முதல் இன்றளவும் பயின்றுவரும் பழமரபாகும். செங்குட்டுவன் காலத்தில் "முசிறி" எனப்பெயரியதோர் ஊர் குடகடற் கரையில் துறைமுகமாகத் துலங்கிற்று. சான்ருகப் புறநானூற்றுள், "முழங்கு கடல் முழவின் முசிறி" (புறம் 343) என்றும்; அகநானூற்றுள், "யவனர் தந்த வினைமாண் நன்கலம், பொன்னொடு வந்து கறியொடு பெயரும் வளங் கெழு முசிறி" (அகம் 149) என்றும் இயம்பப்பெறுதல் காண்க. காவிரிக்குப் புகார் கழிமுகமாயினமை போலச் சுள்ளியம் பேரியாற்றுக் கழிமுகம் முசிறியாக விளங்கிற்று. "சேரலர் சுள்ளியம் பேரியாற்று வெண்ணுரை கலங்க ......முசிறி" (அகம் 149) எனவரும் அகப்பகுதி சான்ரும். ஆயின், இற்றை ஞான்று இலங்கும் முசிறி கடற்கரைக்

கண்ணரா அமைந்துள்ளது? அற்றன்று. கடற்கரைக்கண் வீற்றிருந்த முசிறி மறைந்தபின் ஆண்டு வாழ்ந்தாரும் வாணிகம்புரிந்தாரும் உள்நாடு நோக்கி விரைந்திருத்தல் பொருந்துவதே. அவர் குழுமிய விழுமிய இடத்திற்குப் பண்டைப்பெயரினை இட்டிருத்தல் இயல்பேயாகும். இம் மரபு வழாமல் இருத்தல் இன்றும் காணலாம். இந் நாட்டில் வாழ்வாங்கு வாழ வழியின்மையால், துன்பப் புயல்வீச, வறுமைக்கடல் வளத்தையெல்லாம் வெளவ, அக்கடல் கோட்குத் தப்பிப் பிழைத்த தமிழர் சிலர் இலங்கைக்குக் குடியேறினர். அவர்வைகிய பகுதிக்குத் தாயகத்தள்ள திருநெல்வேலி, பட்டுக்கோட்டை முதலிய ஊர்ப்பெயர்களையே இட்டு வழங்குதல் எண்ணிப்பார்க்க. எனவே, துறந்த ஊரையே சிறந்ததாய் எண்ணிப் புதிய பதிக்குப் பெயரிடுதல் வழக்கொடு வந்த மரபாகும்.

பலபொருள் குறிக்கும் ஒரு சொல்லின், ஒருபொருள் குறிக்கும் ஒருசொல்லே தொன்மைக்குரியதாம். “கூடல்” என்னும் குறியீடு சேர்தல், புணர்தல், ஆறுகளின் இணைப்பு எனப்பல பொருள் பயத்தலும்; மதுரை அச் சொல் போலாது ஓர் ஊரையே குறித்தலும் உன்னற் பாலன. கூடல் என்னும் சொல் புணர்தல் என்னும் பொருளில் அகப்பொருள் இலக்கியங்களுள் பயின்று வழங்கும். “இருபேர் யாற்ற ஒரு பெருங் கூடல்” (புறம் 273) என்புழி ஆறுகளின் சேர்க்கை என்னும் பொருள் தருதல் காண்க. மூன்று ஆறுகளின் இணைப்பே முக்கூடல். முக்கூடற்பள்ளும் இவ்வுண்மைக்குச் சான்றாகும். தோலா நாவின் மேலோராகிய சங்கச் சான்றோர் மதுரையினைக் குறிக்கவும் “கூடல்” என்ற குறியீடு நல்கினர்:

"திருவீற்றிருந்த தீதுதீர் நியமத்து மாடமலி மறுகின் கூடல்"
"மாறன், மாடமலி மறுகின் கூடல்" (அமம் 346) (முருகு)
"செழியன், கொடிநுடங்கு மறுகின் கூடல்" (அகம் 149)
"பாண்டியன், பாடுபெறு சிறப்பிற் கூடல்" (அகம் 231)
"செழியன், மலைபுரை நெடுநகர்க் கூடல்" (அகம் 296)
"நான்மாடக் கூடல் எதிர்கொள்ள" (பரி 1 : 3)
"நீண்மாடக் கூடல்" (பரி–திரட்டு 20 : 106)
"தென்னவன் நான்மாடக் கூடல் நகர்" (பரி-திரட்டு 6 : 3-4)
"நான்மாடக் கூடல்" (கலி 92)

பிற பேரூர்களினும் மாடங்கள் மலிந்து "கூடி" நகர்க்குக்கவின் கூர்தலானும்; பேரியாற்றின் இருகரை புரைய மறுகுகள் நிரலாகக் "கூடிக்" குலாவுதலானும்; மொழிவளம் பழுநிய மொய்ம்புடைமையாற் கூர்த்த புகழைக் "கூடி" இருத்தலானும் மதுரையினையே "கூடல்" எனும் சொல் குறித்தல் காணலாம். "நான்மாடக் கூடல் மகளிரும் மைந்தரும்" (கலி 92) என்புழி, உரைவகுத்த நச்சினார்க்கினியர், "நான்கு மாடம் கூடலின் நான்மாடக் கூடல் என்றாயிற்று; அவை, திருவாலவாய், திருநள்ளாறு, திருமுடங்கை, திருநடுவூர்; இனி கன்னி, கரியமால், காளி, ஆலவாய் என்றுமாம்" என்றனர். இக்கருத்தினையே இவர்க்கு முந்திய திருஞானசம்பந்தப் பெருமான்,

"உம்பரும் நாகர் உலகம் தானும்
ஒளிகடல் சூழ்ந்த உலகத்தோரும்
அம்புத நால்களால் நீடும் கூடல்
ஆலவாயின் கண் அமர்ந்தவாறே"

என்றும்; திருவாலவாயுடைய திருவிளையாடற் புராண முடையார்,

"வாடுவார் தம்மைப் போற்ற வயங்கொளி மாநகர்க்கண்
கூடரு மேகம் நான்கும் மாடமாக் கூடலாலே
நாடவர் அதிசயிப்ப நான்மாடக் கூடல் என்று
பீடுடை நகர்க்கு நாமம் எங்கனும் பிறங்கிற்றன்றே"

என்றும் இயம்பியிருத்தலான் "கூடல்" காரணக் குறியாய் மதுரையினைக் குறிக்கப் பின்னர் வழங்கிய பெயராதல் புலனாகும். மதுரைக் காஞ்சியுள், "மாடம் பிறங்கிய மலிபுகழ்க் கூடல்......மதுரை" என்புழி, "பெரிய நான் மாடத்தாலே மலிந்த புகழைக் கூடுதலை உடைய மதுரை" என நச்சினார்க்கினியர் நவில்தலும் இக்கருத்தினை அரண் செய்யும். மாடங்களால் சிறக்கப் பெற்றது மதுரை என்னற்குத் தக்க இலக்கியச் சான்றுகள் பலவுள. அவற்றுட்சில :

"மாட மதுரை" (புறம் 32)
"பெருஞ்சீர் மாட மதுரை" (சிலம்பு பதிகம்)
"மாட மதுரை" (சிலம்பு அடைக் : 112)
"மாட மூதூர் மதுரை" (சிலம்பு : நீர் : 61

இனி, மதுரையே முதன்மையாக வழங்கப்பெற்ற பெயர் என்னற்கு,

"பதியெழு வறியாப் பண்புமேம்பட்ட மதுரை மூதூர்"
(சிலம்பு ; அடைக் 5-6)
"மாடமூதூர் மதுரை" (சிலம்பு ; நீர் : 61)
"மதுரை மூதூர்" (சிலம்பு காட்சி : 77)
"மதுரை மூதூர்" (சிலம்பு காடு : 188)

எனப் பல முறையும் இளங்கோ அடிகள் இயம்புதலே சான்றாகும். ஆசிரியர் தம் நூலைக் 'கூடற் காண்டம்' எனப்பிரிக்காது 'மதுரைக் காண்டம்' எனப்பகுத்தமையின்

நுண்மையும் உண்மையும் அதன் தொன்மை கருதியே என்க. மாங்குடி மருதனுரும், "கூடற்காஞ்சி" எனத் தம் பனுவற்குப் பெயர் சூட்டாது "மதுரைக் காஞ்சி" எனக் குறித்தலும் மதுரையின் தொன்மையை நனி விளக்கும். அங்ஙனமாயின், திருவிளையாடல் மொழிந்த பரஞ்சோதியார், "கூடற்காண்டம்" எனப் பகுத்திருத்தல் மதுரையின் கூடலே பழமைவாய்ந்த பெயர் என்னற்குச் சான்ருகும் எனின், நன்று நவின்றீர்! அந்நூல் சங்ககாலத் திற்கு மிகமிகப்பிற்காலத்து யாக்கப்பெற்றதாகலின், 'கூடல்' என்னும் காரணப் பெயர்கொண்டு ஒரு காண்டமும் வரைந்துள்ளார். அற்ருயின், அன்னுரின் முதற்பகுப்பு "மதுரைக் காண்டம்" என்றுளதொன்றே கூடலின் மதுரையே மூதூர் எனக் காட்டுமென்று நாட்டலே ஏற்புடைத்து.

ஓர் ஊர்க்குப் பலபெயர்கள் வழங்கிவருதல் அதன் சிறப்பினைக் கருதியே என்க. எனினும், தொன்மைப் பெயரே மிகுதியும் மக்கள் பயில்வதாம். கூடல், நான் மாடக்கூடல், ஆலவாய் என்றினைய சிறப்புப் பெயர்கள் இருப்பினும் தொன்மைப் பெயராகிய மதுரையினையே ஆங்கு வாழ்ந்த புலவர் அடையாகக் கொண்டுள்ளனர். மதுரைக் கணக்காயனுர் மகனுர் நக்கீரனுர், மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனுர், மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனுர், மதுரை அளக்கர் ஞாழலார் மகனுர் மள்ளனுர், மதுரைத் தமிழ்க்கூத்தனுர், மதுரைப் பூதனிள நாகனுர், மதுரை மருதனிள நாகனுர், மதுரை வேளாசான், மதுரைக் குமரனுர், மதுரைக் கண்ணனுர், மதுரை எழுத்தாளன் சேந்தன் பூதனுர், மதுரைப் பேராலவாயர் என வரூஉம் பெயர்களைக் காண்க.

ஓரிடத்தும் "கூடல்" என்ற முந்து நிலைபெற்றுப் புலவர் பெயர் வழங்கப் பெருமையும் நம் கருத்தை மெய்ப்பிக்கிறது. இத்தகைய வழக்கு அற்றைத் தமிழகத்தில் நிலவியது என்னற்குச் சிறந்த அகச்சான்றுகள் நிறைந்து உள்ளன. புகார், பூம்புகார் முதலிய சிறப்புப் பெயர்கள் இருப்பினும் காவிரிப்பூம்பட்டினத்துப் புலவர்கள், அவற்றைத் தம் பெயர்க்குமுன் அடையாகக் கொள்ளாராய்த் தொன்மைப் பெயராகிய "காவிரிப்பூம்பட்டினத்தை"யே முந்துநிலையாகக் கோடல் வரும் காட்டுக்களால் உணரலாம்: காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனர், காவிரிப்பூம்பட்டினத்துக் கந்தரத்தனர், காவிரிப்பூம்பட்டினத்துச் செங்கண்ணனர். கோழி, கோழியூர் போன்ற காரணப்பெயர்கள் வழங்கினும் உறையூரில் வாழ்ந்த புலவர்கள் உறையூர் ஏணிச்சேரி முடமோசியார், உறையூர் இளம்பொன் வணிகனர், உறையூர் மருத்துவன் தாமோதரனர், உறையூர் முதுகூத்தனர், உறையூர் முதுகண்ணன் சாத்தனர் என்றே வழங்கப்பெற்றனர்.

வட மொழியில் உள்ள தொன்னூல்களில் தென்னாட்டு மதுரை குறிக்கப்பெறுதல் ஆய்வாளர் அறிந்த செய்தியே. கி. மு. நான்காம் நூற்றுண்டில் மௌரியர் அவையில் திகழ்ந்த மெகஸ்தனீசு என்ற யவனத்தூதுவன் மதுரையைக் குறித்துள்ளான். அசோகன் கல்வெட்டுக்களிலும் 'மதுரை' என்ற பெயரால் பாண்டியன் தலைநகர் சுட்டப்படுகிறது. கி. பி. முதல் நூற்றுண்டில் வாழ்ந்த யவன ஆசிரியன் பிளினி மதுரைப் பண்டசாலையினைப் பற்றி (The Emperium of Madura) எழுதியுள்ளான். இதேநூற்றுண்டில் வாழ்ந்த தாலமி (Ptolemy)யும் மதுரை என்ற பெயரால் பாண்டியர் தலைநகரைக் குறிக்கிருன்.

அயலார் ஒருவரும் கூடல் என்று குறியாமை நோக்கத் தக்கது.

எனவே இதுகாறும் எழுதியவற்றால் 'கூடல்' காரணக் குறியாய்ப் பிற்காலத்துப் பெருகிய வழக்கு என்பதும் மதுரையே பழமைசான்ற ஊர்ப் பெயர் என்பதும் வெள்ளிடை மலையென விளங்கக்காணலாம்.

மதுரை தொன்மைத் தமிழ்ப் பெயராகத் துலங்கினும் அறிஞருட் சிலர் 'மதுரம்' என்னும் வடசொல்லடியாக 'மதுரை' பிறந்தது என்று இயம்பிப்போந்தனர். ஆயர்குலத்துக் கண்ணன் அவதரித்த 'மதுரா' என்னும் பழம்பதி வட இந்தியாவில் ஆக்கிராவிற்கு அண்மையில் உள்ளது. இவ்வூர்ப் பெயரினை ஆராய்ந்த பேரறிஞர் Dr. B. C. Law என்பவர்,

[1]"Madhura was named after the demon chief Madhu, (It seems that Madura, a feminine form of Madhura, was a Prakrit abbreviation of Madhupura) who and whose son Lavana reigned here before it was Conquered by Rama's brother Satrugna." (From, Madhura in Ancient India) என்று தம் கருத்தை வெளியிட்டனர்.

எனவே, வடநாட்டு 'மதுரா' என்னும் ஊர்ப்பெயர் 'மது' என்ற மள்ளனால் ஆளப்பெற்றமையாற் பிறந்தது என்பது வெளிப்படை. சீனநாட்டு வழிப்போக்கர்

---

1. Journal of the Royal Asiatic Society of Bengal Letters, Vol. XIII, No. 1 & 2.

பாஹியான், ஹியூந்த சாங்க் என்பார் "மயூரகிரி" (Ma-t'aon-lo) என்றே மதுராபுரியினைக் குறித்தனர். "மயூர" (=மயில்) என்னும் சொல்லடியாக "மதுரா" தோன்றியது என்பது அவர்க்குக் கருத்துப் போலும். எனவே, வடமொழி வாழ்ந்த மதுராபதி என்னும் நகர் 'மதுரம்' என்ற வட சொல்லடியாகப் பிறந்தது என்று எண்ணப்பெறாத நிலையில்; முத்தமிழ்ப்பெருவளம் ஓம்பிய வித்தகச் செல்வருடன் கற்றுத் துறைபோகிய காவலர் முறை பிறழாது அரசோச்சிய முதுநகர்க்கு வடசொல்லடிப் படையிற்றான் திருப்பெயர் சூட்டினர் எனச்சிலர் நாட்டும் கருத்து நகைவிளைக்கின்றது. வடமதுரையைப் பார்த்துத் தான் தமிழர் மதுரை எனப் பெயர்வைத்தனர் என்பார் சிலர். அமெரிக்க ஐக்கிய நாட்டில் சேலம் எனப் பெயர் பெற்ற நகரம் உண்டு. இதனைப் பார்த்துத்தான் தமிழகத்தில் சேலம் ஏற்பட்டது என்று முடிபு கட்டும் ஆராய்ச்சியாளர் வரிசையில் இவர் அமரவேண்டியவர். வேறுபட்ட மொழியாளரிடம் இயல்பாகவே சில ஒப்புமை கள் காணப்பெறின், அவற்றைப் பொதுவெனக்கருதாமல் வாரம்பற்றி ஒன்றிற்கு உடைமையாக்கும் மனநிலை மாறு தல் வேண்டும். தமிழர்கள் இயற்கையுடன் பொருந்திய இன்பவாழ்வு வாழ்ந்தவர்கள். பரந்த உலகினைத் தாவரங் களின் பெயர் அடிப்படையில் ஐந்திணையாகப் பகுத்தவர் கள். தமிழக ஊர்கள் பல தாவரங்களின் பெயர் தாங்கி இருத்தல் காணலாம். வஞ்சி, காஞ்சி, தில்லை முதலியன சான்று. மதுரைமாநகரில் வையைக்கரையில் 'மருதத் துறை' எனப் பெயரிய ஊர்ப்பகுதி இருந்தமை தொன் னூல்களால் துணியப்படும். இதனை மருதை என்றும் வழங்குவர். வையையாறு பாண்டி நாட்டின் பொன்னி யாக விளங்கிய திறத்தினைப் பரிபாடல்,

"செய்யில் பொலம்பரப்பும் செய்வினை ஓயற்க,
வருந்தாது வரும்புனல் விருந்தயர் கூடல்
அருங்கறை யறையிசை வயிரியர் உரிமை
ஒருங்கமர் ஆயமோ டேத்தினர் தொழவே"

என்று பகர்தல் காண்க. எனவே, 'மருதை' என்ற பழம் பெயர் மருதத்திணை வளத்தால் வந்திருத்தல் வேண்டும். மொழிநூல் கொள்கைப்படி ஒலியிடப் பெயர்ச்சி (Metathesis or Euphonic Displacement of Consonants) முறையால் மருதை—மதுரையாக மாறியிருத்தல் வேண்டும். மிஞிறு - ஞிமிறு, விசிறி - சிவிறி, தசை - சதை என்றுதல் காண்க. பாண்டிநாட்டின் பல பகுதிகளில் இன்றும் மதுரையை 'மருதை' என்றே வழங்குவர். பேச்சு மொழியிலும் தொன்மைச் சொல் வடிவங்கள் உள்ளன என்னும் மொழிநூலார் கருத்தினை இப்போது எண்ணிப்பார்க்க ஓர் அரிய வாய்ப்பு!

இனி, வேறொரு வகையாலும் 'மதுரை' தமிழ் வேரிற் பிறந்த சொல் என்பதை நிறுவுதல் வேண்டும். மூலத்திராவிட மொழியில் (Proto Dravidian) இருந்து தமிழ், தெலுங்கு, கன்னடம் முதலிய பல திராவிட மொழிகள் கிளைத்தன என்பர் ஒப்பியலார். தெலுங்குப் பேராசிரியர் திரு. B. சீதாராம சார்யுலு அவர்கள் தம் சப்தரத்னகரமு என்ற பேரகராதியில் மதுரு என்ற சொல் மதிலைக் குறிக்கும் என்று எறுதியுள்ளனர். பதினைந்திற்கும் மேற்பட்ட திராவிட மொழிகளின் ஒப்பியல் ஆராய்ச்சிபுரிந்து வியத்தகு உண்மைகளை வெளிப்படுத்திய மேலை நாட்டுப் பேரறிஞர்கள் திரு. T. பர்ரோ, திரு. E. B. எமனெள என்பார் தெலுங்கில் உள்ள மதுரு-தமிழில் உள்ள மதில்—இரண்டும் ஒரு பொருளன என

முடிபு செய்துள்ளனர்.[1] எனவே, தமிழும் தெலுங்கும் மிக்க வேறுபாடின்றிக் கூடிக் குலாவிய பன்னெடுங் காலத்திற்கு முன்னமேயே இச்சொல் (மதுரு) தமிழ்க்கும் உரியதாய்த் திகழ்ந்தது என்றும்; இத்திராவிடச் சொல் அடியாகத்தான் தமிழ் மதுரை பிறந்தது என்றும் எண்ணுதலே பொருந்துவதாகத் தெரிகிறது. 'மதுரு' ஐ விகுதிபெற்று மதுரை என்றாகும். மதில்—மதிர் என்றாகும். குடல்-குடர், சாம்பல்-சாம்பர், உடல்-உடர், பந்தல்-பந்தர் என்றாதல்போல. இனிமை காரணமாகச்சொல்லின் இறுதியில் உகரம் இணையும் (Enunciative 'u'); புள்-புள்ளு, வில்-வில்லு என்பனபோல் மதிர்-மதிரு என்றாகும். 'மதிரு' என்ற சொல்லின் இறுதியில் உள்ள உகரத்தை நோக்கி இடையில் உள்ள இகரமும் உகரமாகும். மதிரு-மதுரு என்றாதற்கு, முன்னோக்கி இயைதல் (Progressive Assimilation) என்ற ஒலியியல் விதி இடம் வகுக்கிறது. தெலுங்கில் கத்தி+லு=கத்துலு என்றாதல் காண்க. எங்ஙனம் நோக்கினும் மதில்-மதுரு என்ற திராவிடச்சொல்லின் வேரிலிருந்து மதுரை பிறந்திருத்தல் வேண்டும். மதிலின் சிறப்பினால் பாண்டியன் சிறவிய ஊர்க்கு மதுரை காரணப்பெயராகச் சூட்டப்பெற்றிருத்தல் வேண்டும். மதிலின் மாட்சியால் நகர்க்குப் பெயர் சூட்டுதல் பண்டையோர் கண்ட முறை என்னற்குச் சிறுபாணாற்றுப்படையில்,

"மணிநீர் வைப்பு மதிலொடு பெயரிய
பனிநீர்ப் படுவிற் பட்டினம்"

எனவரும் பகுதியே சான்றாகும். நல்லியக்கோடனின் நகர்களில் எயிற்பட்டினம் எழில்பட்டினமாக இலங்

---

1. Dravidian Etymological Dictionary (3840), Oxford 1961 By, T. Burrow & E. B. Emeneau

கிற்று. மதுரையின் மதிற்பெருமையினை மதுரைக்காஞ்சியும், பரிபாடலும், சிலப்பதிகாரம் மதுரைக் காண்டமும் மிகுதியாகப் புகழும். மதுரைமாநகர் மதிலில் பகைவரைத் தாக்கும் பலவகை ஏவுகணைகளும், பொறிகளும், படைக் கருவிகளும் பொருத்தப்பெற்றிருந்தன. மதிலின் வாயிலில் துஞ்சாக் கண்ணராயும் அஞ்சா நெஞ்சினராயும் அடல் வாள் ஏந்தி யவன வீரர்கள் காவல்புரிந்தனர். கலித் தொகையில்,

"வையை தன்,
நீர்முற்றி மதில் பொரூஉம் பகையல்லால் நேராதார்
போர்முற்றொன்றறியாத புரிசைசூழ் புனலூரன்"
"புலனுவுழவர்,
புதுமொழி கூட்டுண்ணும் புரிசைசூழ் புனலூரன்"
(கலி 67, 68)

எனவரும் பாடல்களில் புரிசைசூழ் புனல் ஊரன் என்று தலைவன் சுட்டப்பெறுகிறான். ஊரின் பெயர் குறிப்பிடப் பெறவில்லை. புரிசை என்பது மதிலைக்குறிக்கும். 'மதி மலி புரிசை மாடக்கூடல்' என்பது இறையனார் பாடல். உச்சிமேல் புலவர்கொள் நச்சினார்க்கினியர் 'புரிசை' என்ற சொல்லிற்கு (கலி 67, 68) உரிய மதிப்புக் (Importance) கொடுத்து ஊர் என்று சிறப்பித்துச் சொல்லப்பெற்றது மதுரைமாநகரே என்று விளக்குதலும் நம் கருத்திற்கு அரண்செய்தல் காண்க. நச்சினார்க்கினியர் மதுரைவாசி ஆதலின், மதுரையின் மரபுகள் (Traditions) உணர்ந்தே எழுதியுள்ளார்.

எனவே, இதுகாறும் எழுதியவாற்றான் மதுரை தமிழ்வேர்ச் சொல்லினின்றும் தோன்றிய தொன்மைப் பெயர் என்பதும், கூடல் பின்னைய குறியீடு என்பதும் விளங்கும்.

# திருவள்ளுவமாலையின் காலம்

திருக்குறளின் சிறப்பும் அமைப்பும் வள்ளுவரின் வியன் புலமைத்திறமும் விரித்துக்கூறும் ஐம்பத்தைந்து வெண்பாக்களை உடையது திருவள்ளுவமாலை. இந்நூலை நுணுகி ஆராயின் இதன் சொல்வழக்கும், பா அமைப்பும், கருத்துக்களும், உவமைகளும், கற்பனைகளும் பிற்காலத்தன என்ற முடிபிற்கு அழைத்துச்செல்லுதல் அறியலாம். அசரீரி, நாமகள், இறையனார் என்ற இயற்கை இறந்த ஆற்றல்களின் பாடல்கள் நூலின் முகப்பில் உள்ளன. இவை பிற்காலத்து வைதிகப் பெரியவர் குறளுக்குத் தெய்வத் தன்மையை மிகுத்துக்கூறப் புகுத்தியனவாதல் வேண்டும். இந்நூல் உரையாசிரியர்க்குக் காலத்தால் முற்பட்டது. கல்லாடம் கி. பி. 9-ஆம் நூற்றாண்டில் எழுந்த நூல். "என்றும் புலராது யாணர் நாட் செல்லுகினும், நின்றலர்ந்து தேன்பிலிற்றும் நீர்மையதாய்—குன்றாத, செந்தளிர்க் கற்பகத்தின் தெய்வத்திருமலர் போன்ம், மன்புலவன் வள்ளுவன் வாய்ச்சொல்" என்று இறையனார் முக்கட்செல்வர் பெயரால் ஒருபாடல் வள்ளுவமாலையில் வயங்கக்காண்கிறோம். கல்லாடர் காலத்தில் இக்கதை வேரூன்றிவிட்டது. கல்லாடம் 13-ம் பாடலில்,

"சமயக் கணக்கர் மதிவழி கூறாது
உலகியல் கூறிப் பொருளிது என்ற
வள்ளுவன் தனக்கு வளர்கவிப் புலவர்முன்
முதற்கவி பாடிய முக்கட் பெருமான்"

எனவரும் செய்தி மேற்காட்டிய திருவள்ளுவமாலைப் பாடலை ஆதாரமாகக்கொண்டது. பாரதம் பாடிய பெருந் தேவனுர் வள்ளுவமாலையில், திருக்குறளைப் பாரதம் முதலிய வடநூல்களுடன் ஒப்பிடுவர் (30). இவர் காலம் கி. பி. 8 அல்லது 9-ஆம் நூற்ருண்டாகும். எனவே, வள்ளுவமாலை கி. பி. 9-ம் நூற்ருண்டிற்குப் பின் எழுந்திருத்தல் இயலாது.

இனி, இந்நூல் காலத்தின் மேல் எல்லையைப்பற்றிக் காண்போம்.

### கபில, பரண, நக்கீரர்

கபில, பரண், நக்கீரர் மூவரும் பாடிய பாடல்கள் அடுத்தடுத்து வைக்கப்பட்டுள்ளன. இம்மூவர் நடையும் சங்கப்புலவர் நடையினின்றும் வேறுபடுதலான் இவரைக் கபிலதேவ நாயனுர், பரணதேவ நாயனுர், நக்கீரதேவ நாயனுர் எனக்கொள்ளுதல் கூடும். இவர் பாடல்கள் 11-ம் திருமுறையில் இருத்தலால் இவர் காலம் கி. பி. 6-ம் அல்லது 7-ம் நூற்ருண்டிற்கு முற்பட்டிருத்தல் முடியாது.

### உருத்திர சன்மர்

இறையனுர் என்ற சொல்லை ஆலவாய் அவிர்சடைக் கடவுளுடன் தொடர்புபடுத்தலை இறையனுர் களவியல் உரையிலும் வள்ளுவமாலையிலும் காண்கிருேம். உப்பூரிக் குடிகிழார் மகனுர் உருத்திரசன்மரைப்பற்றி முதலில் இறையனுர் களவியல் உரையால் அறிகிருேம். இவ்வுரை கி. பி. 7-ஆம் நூற்ருண்டில் எழுத்துருப்பெற்றது. வள்ளுவமாலை முதற்பாடல் உருத்திரசன்மரைக் குறித்

தலான், இந்நூல் 7-ஆம் நூற்றூண்டிற்கு முன் தோன்றி யிருத்தல் இயலாது.

### அறம், பொருள், இன்பம், வீடு

அறம், பொருள், இன்பம் என மூன்றாக எண்ணு தலே முந்தையோர் கண்டமுறை. ஆனால் வள்ளுவ மாலையில் ஒன்பது பாடல்கள் (7, 8, 19, 22, 33, 38, 40, 44, 50) அறம், பொருள், இன்பம், வீடு என வடமொழி வழக்குப்பற்றி நான்காக எண்ணும் மரபு புகுந்துள்ளது.

### சமயப் போர்

பண்டைப்பனுவல்களில் சமயப் பிரிவுகளும், பூசல் களும் காண்டல் அரிது. கி. பி. 6-ஆம் நூற்றூண்டில் தோன்றிய மணிமேகலையில் பல்வகைச் சமயப்பூசல்களைப் பார்க்கலாம். கி. பி. 6, 7-ஆம் நூற்றூண்டுகளில்தான் தமிழகத்தின் தலைநகரங்களில் பல்வேறு சமயக்கொள்கை களும் விரிவாக ஆராயப்பெற்றுத் தருக்கங்கள் நிகழ்த்தப் பெற்றன. வள்ளுவமாலையில் சமயப்பிரிவுகள், வாதங்கள் பற்றி "ஒன்றே பொருளெனின் வேறென்ப வேறெனின் அன்றென்ப ஆறுசமயத்தார்" (9) என்றும் "சமயநூல் ஆறும்" என்றும் குறிக்கப்பெறும்.

### வைதிக வழக்கு

கி. பி. 5-ம் நூற்றூண்டளவில் மதுரையில் வச்சிரநந்தி யால் தோற்றுவிக்கப்பெற்ற திராவிட சங்கத்தார் அருளிய அறநூல்களில் வள்ளுவர் குறட் கருத்துக்களைத் தழுவித் தமதாகக்கொண்டு பொன்னேபோல் போற்றினர். அதே காலத்தில் புகார், காஞ்சி முதலிய நகரங்களில் பௌத்த

சமயத்துத் தமிழ்நூலோர் வள்ளுவரைத் தம் நெறியாள ராகத் தலைமேற்கொண்டனர். புறச்சமயத்தார் போக்கினை நோக்கிய வைதிக நெறியினர் திருக்குறளைத் தம்நெறிக்கு உடைமையாக்கும் உள்ளத்துடன் திருவள்ளுவமாலையினைப் புனைந்திருத்தல் வேண்டும். பதினான்கு பாடல்கள் (1, 4, 15, 18, 21, 23, 24, 28, 30, 32, 37, 42, 43, 44) திருக்குறளை நான்மறையுடனும் மனு முதலிய பிற வைதிக நூல்களுடனும் ஒப்பிடுதல் இக்கருத்தினை வலியுறுத்தும். நான்மறை என்பதே பழைய வழக்கு. நான்மறையுடன் பாரதத்தையும் இணைத்து ஐந்தாகக் கணக்கிடுதல் தமிழகத்தில் பிற்காலப் பெருமரபு. 44-ம் பாடல் "அருமறைகள் ஐந்தும்" என்று சுட்டித் திருக் குறளை ஒப்பிடுதல் காண்க. இந்நூலில் யாண்டும் பௌத்த, சமணக் குறிப்பின்மையும் எண்ணற்பாலது.

### ஆகுஉ முன்னிலை

பிற்காலப் பாண்டியராட்சி கி. பி. 6-ம் நூற்றாண்டி லிருந்து தொடங்குகிறது. வேல்மாற (2), தார்மாற (32), வாளார் நெடுமாற (50), கூர்வேல் வழுதி (19) முதலிய பல தொடர்களும் இப்பிற்காலப் பாண்டியர்களையே சுட்டுதல் வேண்டும். எனவே, இந்நூல் கி. பி. 6-ம் நூற்றாண்டிற்கு முன் எழுந்திருத்தல் இயலாது.

### நூலின் அமைப்பு

இறைவனுக்குப் பூமாலையும், பாமாலையும் சூட்டி வழிபட்டது பல்லவர் காலத் தமிழகம். 'மாலை' என்ற இலக்கியவகை (Literary form) இக்காலத்தில் உருவா கியது. திருமுறைகளிலும், திவ்வியப் பிரபந்தங்களிலும், பலவகைப் பாமாலைகளைப் பார்க்கிறோம். காரைக்கா

லம்மையார் பாடிய இரட்டைமணிமாலை, அப்பர் அருளிய அங்கமாலை, கபிலதேவநாயனரின் இரட்டைமணிமாலைகள், நம்பியாண்டார் நம்பி அருளிய திருநாரையூர் விநாயகர் திருவிரட்டைமணிமாலை, திருநாவுக்கரசர் திருஏகாதசமாலை முதலியனகாண்க. சிவஞானக் கன்றாகிய புகலிவேந்தர், "பாமரு செந்தமிழ்மாலை பத்திவை" (469) என்றும் ஆரூரர் "விருந்தாய சொன்மாலை கொண்டேத்தி" என்றும் இறைவனுக்குப் பாமாலை பாடியுள்ளார். ஆண்டாள் தம் திருப்பாவையினை, "கோதை சொன்ன சங்கத்தமிழ்மாலை முப்பதும்" எனக் குறித்தலும், தாம் பாடிய 45-பாடல் களைத் தொண்டரடிப்பொடி ஆழ்வார் "திருமாலை" எனப் பொறித்தலும், திருமங்கைமன்னன், "சங்கமுகத் தமிழ் மாலை பத்தும்" என்று திருக்காழிச் சீராம விண்ணகரப் பதிகத்தில் பாடுதலும் காண்க. எனவே, திருவள்ளுவர்க் குத் தெய்வத் தன்மையைப் பாராட்டி மாலை சூட்டியதும் இத்தெய்வப் பனுவல்கள் தோன்றிய காலத்தில்தான் நிகழ்ந்திருத்தல் வேண்டும். வள்ளுவமாலையில் 47-ஆம் பாடல்:

அறம் தகளி ஆன்ற பொருள் திரி இன்பு
சிறந்தநெய் செஞ்சொல்தீத்தண்டு — குறும்பாவா
வள்ளுவனார் ஏற்றினார் வையத்துவாழ்வார்கள்
உள்ளிருள் நீக்கும் விளக்கு.

இப்பாடலை ஆழ்வார், அப்பர் பாடல்களுடன் ஒப்பிடு வோம்.

பொய்கையார்:

வையம் தகளியா வார்கடலே நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காக — செய்ய
சுடராழி யானடிக்கே சூட்டினேன் சொன்மாலை
இடராழி நீங்குகவே என்று. (இயற்பா, முதல்
திருவந்தாதி 1)

பூதத்தாழ்வார்:

அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா — நன்புருகி
ஞானச் சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ் புரிந்த நான்.
(இயற்பா, இரண்டாம் திருவந்தாதி 1)

அப்பர்:

உடம்பெனும் மனையகத்துள் உள்ளமே தகளியாக
மடம்படும் உணர்நெய் அட்டி உயிரெனும் திரிமயக்கி
இடம்படு ஞானத்தீயால் எரிகொள இருந்து நோக்கில்
கடம்பமர் காளைதாதை கழலடி காணலாமே.

அருளாளர் மூவரும் ஆன்மிக அனுபவம் ஒத்த நிலையில் அருளிய பாட்ல்களில் ஒத்த கருத்தும் உருவகமும் இருத்தல் உணரலாம். எனினும் ஆராய்ந்து பார்ப்பார்க்குப் பூதத்தாழ்வார் பாடலின் சாயல் திருவள்ளுவமாலைப் பாடலில் பதிந்திருத்தல் புலனாகும். இதற்கு ஏற்ப வள்ளுவரைத் திருமாலுடன் ஒப்பிட்டு,

மாலும் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியால்
ஞாலம் முழுதும் நயந்தளந்தான் — வாலறிவின்
வள்ளுவரும் தம்குறள் வெண்பா அடியால் வையத்தார்
உள்ளுவ எல்லாம் அளந்தார் ஓர்ந்து. (6)

கான்நின்ற தொங்கலாய் காசிபனார் தந்ததுமுன்
கூநின் றளந்த குறள் என்ப — நூன்முறையான்
வானின்று மண் நின் றளந்ததே வள்ளுவனார்
தாம் நின்றளந்தகுறள். (14)

தேவில் திருமால் எனச்சிறந்த தென்பவே
பாவிற்கு வள்ளுவர் வெண்பா. (36)
உப்பக்கம் நோக்கி உபகேசி தோள்மணந்தார்.....
அச்சு. (21)

எனப் புகழ்ந்து போற்றுதல் காண்க. திருமால் பத்து அவதாரம் எடுத்தாற்போலத் திருக்குறள் அதிகாரமும் பத்துக் குறள்களை உடையது. சிறந்த வைணவ இலக்கியங்களான பாரதம், சீராமகதை, கீதை (21, 30) முதலியவற்றுடன் திருக்குறள் ஒப்பிடப் பெறுகிறது. இராமாவதாரச் சிறப்புணர்த்தும் இராமகாதையும், கிருஷ்ணவதாரச் சிறப்புணர்த்தும் பாரதமும் இந்நூல் எழுந்தகாலத்தில் பெருவழக்காகப் பயிலப்பெற்றிருத்தல் வேண்டும். நாலாயிரமே இதற்குச் சான்றாகும். கண்ணனுக்குப் பிள்ளைத்தமிழ் பாடியவர் பெரியாழ்வார். குலசேகரர் இராமனுக்குப் பிள்ளைத்தமிழ் பாடி இராமகாதைச் சுருக்கமும் உருக்கமாகப் பாடிமுடித்தவர். வள்ளுவமாலையில் மூன்று பாடல்கள் வள்ளுவரை நான்முகனுடன் தொடர்புபடுத்தும். (1, 4, 28) 'வெள்ளி, வியாழம்' (52) என்ற பாடலில் கோள்கள் குறிக்கப் பெறுதல் "ஞாயிறு திங்கள் ..........வியாழம் வெள்ளி" என்ற ஞானசம்பந்தர் பாடலையும், 'வெள்ளி எழுந்து வியாழம் உறங்கிற்று' என்ற கோதை பாடலையும் நினைப்பிக்கிறது. இந்நூலில் கி. பி. 7, 8-ம் நூற்றாண்டின் இலக்கிய மணம் கமழ்தல் உணரலாம். புறச்சமயங்களாகிய பௌத்த, சமண சமயங்களைப் பொருது வாகைசூடிச் சைவ, வைணவ நெறி தழைத்த கி. பி. 7, 8-ஆம் நூற்றாண்டளவில் இந்நூல் உருவாகி இருத்தல் வேண்டும்.

# அடிகள் உவமை

அணிகலன்கள் மக்களுக்கு அழகு தருதல்போல், அணிகள் பாட்டுக்கு அழகு தரும். அழகு தரும் அளவில் நில்லாது பொருளையும் விளக்கி நிற்கும். அணிகளுக்கு எல்லாம் அன்னையாய்த்திகழ்வது உவமை அணிதான். இடையில் எத்துணையோ புதுப்புது அணிகள் தோன்றி னும் இன்றுவரை எல்லோரும் மிகுதியும் ஆளும் தகுதி வாய்ந்தது உவமை அணியே. கருத்துக்களையும் கற்பனை களையும் வெளிப்படுத்தும் கவிஞர்கள் தங்கள் வெற்றிக் குக் கருவியாகக் கையாளும் உத்திகளில் உவமையும் ஒன்று. பாவலனின் தனிச்சிறப்பும் படைப்பு ஆற்றலும் சிந்தனைவலிமையும் அவன் உருவாக்கும் உவமைகளைப் பொறுத்துள்ளன. தமிழ் இலக்கியங்களில் உவமைகளுக் குப் பஞ்சம் இல்லை. காவியங்களில் உவமை பெறும் பங்கு பெரிது. சான்றோர் வகுத்த வழியினின்றும் நழுவி யும் வழுவியும் செல்லும் மக்கள் இனத்தை நெறிப்படுத் தற்கு அறக்கருத்துக்களை உரைக்க முற்படும் அறநூல் களில் அணிகள் அருகியே வரும். கருப்புக்கட்டியில் மருந்துருளையை மத்தித்துக் கொடுத்தல்போல் உவமை வாயிலாக உயர்ந்த கருத்துக்களை விளக்குதல் அற நூலாரின் தந்திரமாகும்.

பட்டினத்து அடிகள் சிறந்த சான்றோர். நிறைந்த செல்வர். வாழ்க்கையை நன்றாகச் சுவைத்தவர். வாழ் வின் குறையும் நிறையும் உணர்ந்தவர். தம் பொருளை எல்லாம் நற்பணிக்குக் காணிக்கை ஆக்கியவர். தம்மைச்

சூழ வாழும் மக்களின் வறுமையும் சிறுமையும் வாட்டுவ தைக்கண்டு வாடினர். துன்பத்தினின்றும் விடுதலை பெற்று மனித இனம் உய்ய விழைந்தார். ஆன்ம விசா ரத்தில் ஈடுபட்ட அவர் புத்தரைப்போல, இளங்கோவைப் போல மக்களைவிட்டு அகன்று ஒருபடிமேலே உயர்ந்து நின்று அவர்களுக்கு அறவுரை ஓதினர். அடிகள் துறவு ஒருவகையில் உயர்ந்தது. திருவோடு தாங்கித் தெரு வோடு செல்லும் பட்டினிப் பரதேசியைப் போன்றவர் அடிகள் என்று எண்ணுவோர் அளியரே! அவர் பாடல் களின் சொல்வளம், பொருள்வளம், ஓசைநயம், கட்டுக் கோப்பு, யாப்பமைதி முதலியன கற்பார் மனத்தைக் கவர்வன. அடிகள் வற்புறுத்தும் அறங்களில் ஈகை முன் நிற்கிறது. ஈகை என்ருல் எப்படி இருக்கும்? ஒரு வேளை சிரங்குக்கையோ? ஈமொய்க்கும் கையோ என்று எண்ணும் உலோபியை எங்ஙனம் அழகான உவமை களால் சித்தரிக்கிருர் என்பதைக் காண்போம்.

மனிதன் தனக்காக வாழ்கிருன், பிறர்க்காகவும் வாழவேண்டும். ஒவ்வொருவனும் உழைத்து வாழ்வது தான் உயர்ந்தது. இயல்பாகவே உழைக்க முடியாதவர் களும் சமுதாயத்தில் உள்ளனர். அவர்களை எங்குக் கொண்டுபோய் விடுவது? இரக்கமே இல்லாத இழிசின ராக மாறிவிட்டால் கடலில் கொண்டுபோய்க் கொட்டி விடலாம். மனம் என்ற ஒன்று அத்தகைய கொடுமை செய்யமறுக்கிறது. அவர்கள் உயிரோடு ஊசலாடுதலைக் கண்டு உள்ளம் துடித்து உதவமுற்படும் உண்மைத் தொண்டர்கள் தேவை. குருடன் குருடனுக்கு வழி காட்டுவதா? வறியவன் வறியவனுக்கு உதவமுடியுமா? செல்வம் படைத்த செம்மலார் இரப்போர்க்கு ஏற்ற

அளவு ஈந்து வாழ்தலே பேரறம். ஏற்று வாழ்தல் எளியது என்று எண்ணி, உழைக்கும் உரம் படைத்தோர் கூட ஏற்பார் வரிசையில் நிற்க முந்துவர். இந்நிலையில், உதவிவாழும் உள்ளம் படைத்தோரைக் காண்பது அரிதாகவே இருக்கும். என்ருலும், தம்மை அண்டினவர்க்கு ஒன்று ஈயார் இருந்தென்ன? இறந்தென்ன? பிறக்கும் பொழுது கொடுவந்ததில்லை; பிறந்து மண்மேல் இறக்கும் பொழுது கொடுபோவதில்லை. பிறப்பிற்கும் இறப்பிற்கும் இடையே கிடைத்த பெருஞ்செல்வம் இறைவன் தந்தது என்று எண்ணிக் கொடுக்கத் தெரியாமல் இறக்கும் குலாமரைக்கண்டு மனம் உளைந்து பாடுகிருர். இந்த உலோபிகள் நம்மிடையே நம்மவராகவே உள்ளனர். அவர்களை எவ்வாறு வேறுபிரித்துக் காண்பது? உலோபி என்பதற்காக உறுப்பு வேறுபடவில்லையே! எங்ஙனம் அடையாளம் காண்பது? மூன்று உவமைகளைக் கூறி அடையாளம் காட்டுகிருர் அடிகள்.

செழிப்பாக வளர்ந்து செம்மாந்து நிற்கும் மரங்களில் சில பூவா. பூத்தாலும் சிலமரங்கள் காயா. காய்த்தாலும் சிலமரங்கள் கனியா. கனிந்தாலும் சிலமரங்கள் எட்டிக்கனியாகக் கனியும். இவற்ருல் யாருக்கு நன்மை?

அகன்ற, ஆழமுள்ள தடாகம். படிகள் கட்டப் பெற்று வனப்பாக உள்ளன. ஆனுல், தண்ணீர்தான் இல்லை. இதனுல் பயன் உண்டா? வளமான பசு. பார்வைக்கு அழகான பசுதான். நிரம்பப் பால் கறக்கும் என்று நினைக்கிரும் நெருங்கிப்பார்க்கும் நேரத்தில் உண்மைதெரிகிறது. சிற்பி தன் சிந்தனையில் தேக்கிய கற்பனையுடன் கலையழகைச் சேர்த்துச் செதுக்கிய கல் பசு! இதனுல் பயன் உண்டா?

பெருஞ்செல்வம் படைத்தவர். நிலபுலன்கள் வீடு வாசல் ஏராளம், ஆனால், தாராள மனப்பான்மைதான் இல்லை. மரமாக இருக்கும்; பயன் தராமையின் மரம் ஆகாது. குளமாக இருக்கும்; பயன் தராமையின் குளம் ஆகாது. ஆப்போல் இருக்கும்; பயன் தராமையின் ஆ ஆகாது. அப்படியே மனிதராகவே இருப்பர்; பயன் படாமையின் மனிதர் ஆகார். ஈயா மனிதரை விளக்கிக் காட்டக் காயா மரம், வறளாம் குளம், கல்லா என்ற மூன்றையும் உவமைகளாகக் கூறினர்.

காயாமரம் கனியாகப் பயன்தரவில்லை; என்றாலும், நிழலாகவும் விறகாகவும் பயன்தரும். வறண்ட குளம் நீராகப் பயன்தரவில்லை; எனினும், புல்வெளியாகப் பயன்தரும். கல்லா பாலாகப்பயன்தரவில்லை; எனினும், கண்ணிற்கு இனிய கலைப் பொருளாகப் பயன்தரும். ஆனால், கொடுக்கறியாதகுலாமர் ஒருவகையிலும் பயன் படுவதில்லை. 'வெய்யிற்கு ஒதுங்க உதவா உடம்பின் வெறுநிழல்' என்று மனித மரத்தின் தன்மை சுட்டப் படுகிறது.

பசிபற்றும் வேளையில் நிழலும் விறகும் பசி தணிக்குமா? பசி தணிக்கும் பழம் தராமையின் காயாமரம் பயனற்றது. தண்ணீர் வேட்கை மிக்கவழி புல்வெளி யாகப் பயன்தரும் பொய்கை என நினைந்து நிறைவு பெறுமா மனம்? வேட்கை தணிக்காத பொய்கை வெறுக்கத் தக்கதே. "பாலும் நெய்யும் உணலுற்றோர் பாரில்கொடிய பிணி அற்றோர்." தீம்பாலும் நறுநெய்யும் தேவைப்படும்பொழுது, கல்லில் செதுக்கிய பசுவின் கலையழகு தேவையை நிரப்புமா? தேவை நிறைவேறிய பின் அல்லவா கலையும் அழகும்பற்றிக் கருதவேண்டும்!

எனவே, ஒன்றுக்கும் உதவா உலோபியைக் காயா மரம், வறளாம் குளம், கல்லா என்று கூறுதல் மிகவும் தகும். குறிப்பு மொழியாக (Symbolism) உலோபியை மரம், பாழ், கல், மாடு என்று கடிந்துரைத்ததாகக் கொள்ளினும் பிழையில்லை.

பயனில்லாத பணக்காரர் நிலத்திற்குப் பாரமாக இருப்பதைக் கண்டார் அடிகள். "இறைவனே! உன் படைப்பில் தேவை இல்லாத பொருள்களை ஏன் உற்பத்தி செய்கிறாய்?" என்று கேட்கிறார். இரப்பவர்க்கு ஒன்று ஈயவைத்தபெருமானிடம் "ஈயாமனிதரை ஏன் படைத்தாய்" எனக்கேட்பது முறைதானே! 'இரக்கும் மனிதரை ஏன் படைத்தாய்' என்று ஏன் கேட்கவில்லை? உடைமையும் இன்மையும் வினைவசத்தால் வருவன. நல்வினை காரணமாகப் பொருள்படைத்துள்ளனர். தீவினை காரணமாக வறுமையில் வாடுகின்றனர். எல்லோருமே வெறுத்து ஒதுக்கும் வறியவர்க்குத் தஞ்சமே இல்லையோ? அவரே அளியர். அவர்பால் அனுதாபமும் பரிவும் இரக்கமும் காட்டுகிறார் அடிகள். செல்வர் பெருஞ்செல்வராயும், ஏழைகள் பரமஏழைகளாகவும் மாறிக்கொண்டிருந்தால் உலகில் அமைதி நிலவுமா? இன்பம் உண்டா? மேடு பள்ளங்களைச் சமப்படுத்திப் பாதை அமைத்தால்தான் மக்கள் நடமாட்டம் போராட்டம் இன்றி அமைதியாக, இன்பப்பயணமாக இருக்கும். செல்வர்கள் பொருள் களின் தருமகருத்தாக்களே (Trustees). தாமே மனம் இரங்கி ஒப்புரவுசெய்ய முந்தவேண்டும். எல்லோரும் இன்புற்று வாழ்வதே தாயுமானாரும், அண்ணல் காந்தி அடிகளும் கண்ட சமதர்மம். வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை என்றும், ஏற்போர் மகிழ்ச்சியைக்கண்டு ஈவோன்

உள்ளம் உவகை பூக்கவேண்டும் என்றும் வள்ளுவர் வழிகாட்டவில்லையா? "விருந்தினரும் வறியவரும் நெருங்கி யுண்ண, மேன்மேலும் முகம்மலரும் மேலோர்போல" எனப்பரணிபாடிய பாவலன் வற்புறுத்தவில்லையா?

அடிகள் வன்னெஞ்சரைக் கண்டுதான் கொதிக்கிறார். உலோபியை மனித இனத்தில் ஏன் படைத்தாய்? பத்துத்திங்கள் தாய்க்குச் சுமையாக இருந்தவன், இப்போது நிலமாகிய தாய்க்குப் பாரமாக இருக்கிறான். இவனை நாய்க்குலத்தில் படைத்திருந்தால், தாய் நாய்க்கு மூன்று அல்லது நான்கு திங்கள் தொல்லையுடன் முடியுமே. அன்றியும் நன்றி உணர்ச்சியும், காவல்புரியும் கடமை உணர்ச்சியும், பொருள்களை மோப்பம் பிடித்துத் துப்புத் துலக்கும் மேதையும் இயல்பாகவே உடைய நாய் பிறப்பு பயன்தரக்கூடியதே. உருவத்தால் பெரிய யானைகூடப் பலநாள் பழகிய பாகனை வஞ்சித்துக்கொல்லும் சிறுமை உடையது. சிலநாள் பழகிய வளர்ப்புநாயைக் கோலால் அடிக்கினும் வாலால் அன்பு காட்டி வளர்ப்பவனையே சுற்றி நிற்கும். உருவத்தால் சிறிதாயினும் நாய் பண்பினுல் உயர்ந்து திகழ்கிறது. இப்படி நாலடியார் நவிலும் வாய்மை அடிகளுக்குத் தெரியாதா? பட்டினத்தார் பாடுகிறார்:

நாயாய்ப் பிறந்திடில் நல்வேட்டை யாடி நலம்புரியும்
தாயார் வயிற்றில் நரராய்ப் பிறந்துபின் சம்பன்னராய்க்
காயா மரமும் வறளாம் குளமும்கல் லாவுமென்ன
ஈயா மனிதரை ஏன்படைத்தாய்? கச்சி ஏகம்பனே!

[தாயார் — அடிகள் தாய்ச் செல்வத்தைப் பாராட்டும் நாவினர்; பூரியாதை வாசகம்; 'உற்றுப்பெற்ற தாயார்'

என்பர் பிறரும். நரர் — மனிதர்; சம்பன்னர் — பெருஞ் செல்வர்.]

அடிகள் வற்புறுத்தும் ஒப்புரவுப் பேரறம் அறநூல் அருளிய எல்லார்க்கும் ஒத்ததே. விலங்குகள் கலக்கி விடாமல் மக்களுக்கு மட்டும் பயன்படும் நீர் நிறைந்த ஊருணிபோலப், பேரறிவாளன்திரு தக்கார்க்குப் பயன் தரும். பயணிகளுக்கும் பறவைகளுக்கும் பயன் தரும் பழுத்த மரம்போல் நயனுடையாளன் செல்வம் எல்லோர்க்கும் உதவும். வேர், பட்டை, இலை, பூ, காய், கனி முதலிய எல்லா உறுப்புக்களும் பயன்படக்கூடிய மருந்துமரம்போல், பெருந்தகையாளன் உடல், பொருள், ஆவி அனைத்தும். நல்லறப்பணிக்கு நல்குகின்றான். இங்ஙனம் உடன்பாட்டு முகத்தான் ஒப்புரவினை வள்ளுவர் வற்புறுத்துகிறார். நச்சப்படாதவன் செல்வம் நடுவூரில் நச்சுமரம் பழுத்தற்று என்று எதிர்மறை வாய்ப்பாட்டானும் கூறுவார். ஈதற்காகவே 'கை' அமைந்தது. 'ஈகை' என்ற சொல்லில் வினைத்தொகைப்பொருள் தொனிக்கிறது. காளத்தி வள்ளலைப் பாடிய கவிஞர் ஒருவர்,

"நற்றோ ரணவீதி நண்ணும்வல் லைக்காளத்தி
கற்றோர் தமக்களிக்கும் கையேகை—மற்றோர்கை
வேங்கை அலகைபுகை வேட்கை பலகைநகை
காங்கை அழுகைவிழு கை."

என்று ஈயார் கையை ஏளனச்சுவையுடன் (Satire) பாடுதல் காண்க. "இறைக்கச் சுரக்கும் பெருங்கேணி, ஈயச் சுரக்கும் பெருஞ்செல்வம்; கறக்கச் சுரக்கும் ஆவின்பால்" என ஆன்றோர் அருளியுள்ளனர்.

கொடுக்கறியாதாரைப் பாரியே என்று கூறினும் கொடார் என்று விடாமல், செல்வக் குலாமரைச் சீர் திருத்திச் சேவைபுரியத் தூண்டுவதற்குப் பாவலரின் எழுத்தாணி பின்வாங்கியதே இல்லை. இதனுல்தான், பாரதியார் "எழுதுகோல் தெய்வம்! இந்த எழுத்தும் தெய்வம்!" என்று வழுத்தினுரோ என்று எண்ணுகிருேம்.



